உ

சிவமயம்.

# இலக்கியச்சொல்லகராதி.

இது

யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கத்தின்

அக்கிராசனுதிபதி

ஸ்ரீமான் த. கைலாசபிள்ளையவர்கள்

விரும்பியவண்ணம்

சுன்னுகம்

அ. குமாரசுவாமிப்பிள்ளையால்

தொகுத்து

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

ஆனந்தஞு ஐப்பசிமீ.

சிவமயம்.

# உ ப க் கி ர ம ணி கை.

இலக்கியச் சொற்களே பெரும்பாலுங் கூறப்பட்டிருத்த லால் இவ்வகராதி இலக்கியச்சொல்லகராதி என்னும் பெயரு டையதாயிற்று. இலக்கியமாவது யாது? "இலக்கியமாவது பாரதமும் இராமாயணமும் போல்வன" (தொல்) என்று நச்சி னார்க்கினியர் கூறுவர். பாரதராமாயணம் முதலியவற்றிலே அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப்பொருள் களும் நாட்டுவருணனை, நகரவருணனை முதலிய நாநாவித வரு ணனைகளோடு கூறப்பட்டிருக்கின்றன. ஆதலால் நால்வகைப் பொருள்களையும் அவ்வாறாய வருணனைகளோடு கூறும் பெருங் காப்பியமே இலக்கியம் என்பதாயிற்று. கந்தபுராணம், பெரிய புராணம் முதலியவைகளும் பெருங்காப்பியலக்கணம் பெரும் பாலும் பெற்று வருதலால் இலக்கியம் என்று கொள்ளப்படும். சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலியவைகளை ஆருகதர் இலக்கியம் எனக்கொண்டு பஞ்சலக்கியம் என்பர். இவைபோல் வனவன்றி அகப்பொருட்கோவை, கலம்பகம், அந்தாதி முத லிய சிறு காப்பியங்களும் இப்பொழுது இலக்கியம் என்று கொள்ளப்படுகின்றன. "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம் பலின்" என்று நன்னூலாருங் கூறுவர்.

இலக்கியம் என்பதற்கு நச்சினார்க்கினியர் "இலக்கணத் தாற் காரியப்படுவது" என விவரங் கூறுவர். இலக்கணம் - இலக்கணநூல். இலக்கியம் என்பது இலக்கணையால் அறியப் படும் பொருளுடையது என்று வடநூலார் சிலர் கூறுவர். இலக்கணை - தனக்குரிய ஆற்றலாற் புலப்பாடின்றி அநுமா னத்தாற் புலப்படும் பொருளுடைய சொல். இலக்கணையெனி னும் குறிப்பெனினும் இயையும். குறிப்புச் சொற்களும் குறி ப்புப் பொருள்களுமே சான்றோரிலக்கியங்களிலே மிகுந்து பர ந்து வருகின்றன. குறிக்கோளுடைய சான்றோர்க்குக் குறிப் புச் சொற்களும் பொருள்களும் போலச் செஞ்சொற்களும் பொருள்களுஞ் சிறப்பினைக் கொடுக்கமாட்டா. குறிப்புச்சொற்

களும் பொருள்களும் விரவிய இலக்கியங்களைத் தமிழ்நூலறிஞரும் புகழ்வர்; வடநூலறிஞரும் புகழ்வர். தமிழ்நூலறிஞர் குறிப்பு விரவாத்தொடையை "வெற்றெனத் தொடுத்தல்" என்று குற்றங்களுள்ளும் ஒன்றாக வைப்பர். ஆதலால் இலக்கியம் என்பதற்கு "இலக்கணையால் அறியப்படும் பொருளுடையது" என்று பொருள் கூறலும் பொருந்தும். இனிச் சொல் என்பதிற் செல்லுதும்.

சொல்லாவது யாது? பொருளை அறிவிக்கும் ஆற்றலுடைய எழுத்தொலியே சொல்லெனப்படும். "இருதிணையைம் பாற் பொருளையுந் தன்னையு மூவகையிடத்தும் வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே" என்று நன்னூலாருங் கூறுவர். பொருள்களைப் புலப்பட விளக்கும் பெருமை நோக்கி வடநூலார் சிலர் சொல் என்பதையும் ஒரு சோதி என்பர். சொல்லெனப்படுஞ் சோதி தோன்றாதாயின், எல்லைநீர் ஞாலத்தில் எப்பொருள்தான் புலப்படும்? ஆதி பகவனை அறிவதும் இல்லை! ஆகமங்களை அறிவதும் இல்லை! அறம், பொருள் முதலியவைகளை அறிவதும் இல்லை! அவற்றை வலியுறுத்தும் பழஞ்சரிதங்களை அறிவதும் இல்லை! தம் கருத்தைப் பிறர் அறிவதும் இல்லை! பிறர் கருத்தைத் தாம் அறிவதும் இல்லை! அறியாமையே யாண்டுந் தலைப்படும். உலகமுந் தடுமாறும்! ஆதலால் உலகம் வழங்கிவரச் செய்வது சொல்லெனப்படுஞ் சோதியென்றே சொல்லுக. பொருள்களை அறிவிக்கும் ஆற்றலில்லது சொல்லெனப்படமாட்டாது.

ஆற்றலாவது சொல்லாகிய தனக்கும் பொருளுக்குமுள்ள தொடர்ச்சி. இச்சொல்லால் இப்பொருள் அறியத்தக்கது என்னும் இறைவனியமமே ஆற்றல் என்பாருமுளர். ஆற்றலெனினும் வலியெனினும் அமையும். இவ்வாற்றல் எவ்வாற்றாற் கொள்ளப்படும்? இவ்வாற்றல் நிகண்டுநூல், இலக்கணநூல், உரைநூல், முதியோர்வழக்கு முதலியவற்றாற் கொள்ளப்படும். நிகண்டுநூலாவது இன்ன இன்ன சொற்களுக்கு இன்னது இன்னது பொருள் என்று அறிவிக்கும் திவாகரம் பிங்கலம் முதலியன. இலக்கணநூலாவது பகுதி விகுதி முத

வியவைகளையும் பாகுபாடுசெய்து சொற்களினியல்புகளையும் பொருள்களையுந் துணிவிக்கும் தொல்காப்பியம் நன்னூல் முதலியன. உரைநூலாவது இலக்கியச்செய்யுளிலே தொடர்ப்பாடுற்று நிற்குஞ்சொற்களைப் பிரித்துப் பிரித்துப் பொருளுங்கூறி அருஞ்சொற்களுக்கு ஆற்றலுங்கூறும் பரிமேலழகருரை முதலியன. இவ்வியல்புடையசொற்களே பெரும்பாலும் இலக்கியத்தில் வழங்கப்படுகின்றன.

இலக்கியத்திலே வழங்குஞ் சொற்களை வடநூலார் வாசகம், இலாக்கணிகம், வியஞ்சகம் என மூவகையாக்குவர். வாசகத்தாற் றோன்றும் பொருளை வாச்சியம் என்பர். இலாக்கணிகத்தாற் றோன்றும் பொருளை இலக்கியம் என்பர். வியஞ்சகத்தாற் றோன்றும் பொருளை வியங்கியம் என்பர். வாசகமாவது தன்பாலுள்ள இயற்கைவலியினாலே தானே பொருளுணர்த்துஞ் செஞ்சொல். இலாக்கணிகமாவது இலக்கணையோடு கூடிய வலியினாற் பொருளுணர்த்தும் ஆக்கச்சொல். வியஞ்சகமாவது வாச்சியப் பொருளன்றித் தாற்பரியத்தால் விரிந்து வேறும் பொருள்பயக்குங் குறிப்புச்சொல். இலாக்கணிகம், வியஞ்சகம் என்னும் இரண்டும் குறிப்பாய் நிற்றலால் அவை குறிப்பு என ஒன்றாய் அடங்கும். இதுபற்றியே நன்னூலாரும் வெளிப்படை குறிப்பு எனச் சொற்களை இருவகையாக்கினர்.

வாசகம் எனப்படுஞ் செஞ்சொல் இடுகுறிச்சொல், காரணச்சொல், காரணவிடுகுறிச்சொல் என மூவகைப்படும். இடுகுறிச்சொல்லாவது சமுதாயவாற்றலாற் பொருள் விளக்குவது. சமுதாயவாற்றலாவது எழுத்துக்கள் ஒருங்குகூடி நிற்றலால் உண்டாயவலி. காரணச்சொல்லாவது அவயவவாற்றலானும், பிறவாற்றானும் பொருள் விளக்குவது. அவயவவாற்றல் - பகுதி விகுதி முதலிய உறுப்புக்களாலாய வலி. காரணவிடுகுறிச்சொல் அவயவவாற்றலானும் சமுதாயவாற்றலானும் பொருள் விளக்குவது.

குறிப்புச் சொல்லும் பலவகைப்படும். ஆகுபெயர்ச்சொல், அன்மொழிச்சொல், தகுதிச்சொல், விகாரச்சொல், ஒன்றொழி பொதுச்சொல், பலபொருளொருசொல் முதலியன எல்லாம்

குறிப்புச் சொல்லென்றே கொள்ளப்படும். பலபொருளொரு சொற்குங் கருதிய பொருளைத் தானாய் அறிவிக்கும் ஆற்ற லில்லை. அவை வினை, சார்பு, இடம், பயன், காலம், பொருத் தம், பால் முதலியன பற்றிநின்றே அறிவிக்கும்.

இச்சொற்களெல்லாம் இலக்கண விதியோடு வாக்கிய மாய் அமைந்து இலக்கியங்களிலே நின்று பொருள்களை விளக் குகின்றன. வாக்கியமாவது ஒன்றையொன்று விரும்புதலும், பொருட்குத்தடையின்மையும், இனமாயணுகுதலுந் தோன்ற நிற்குஞ் சொற்களின் கூட்டம். இராமாயணம் பாரதம் முதலிய இலக்கியங்களில் வருஞ்சொற்களுள்ளே எத்தனையோ சொற்கள் இலக்கணவிதியமைந்து சுவரூபந்தோன்றாது மறைந்து நிற்கின் றன. இலக்கியங் கற்கப் புகுவார்க்கெல்லாம் இலக்கணங் கற் றல் இன்றியமையாத தொன்றேயாம்.

இலக்கியச் சொற்களைத் தமிழ்நூலார் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என நான்கு பாகுபாடு செய்வர். நான்குந் தனித்தனி இயற்சொல், திரிசொல் என இருவகையாகும். அவற்றுள்; இயற்சொல் இயல்பாய் நின்று இலகுவிற் பொருள் விளக்கும் வெளிப்படைச்சொல். திரிசொல் இயற்சொல்லின் வேறாய் நின்று அரிதிற் பொருள் விளக்குஞ் சொல். இயற்சொல்லினுந் திரிசொல்லே இலக்கியத்துக்கு இன் றியமையாதது. திரிசொல்லில்லையாயின்; சுருங்கச்சொல்லலுங் கூடாது. சுவைபெற வைத்தலுங் கூடாது. மோனை எதுகை யமகம் முதலியன அமைத்தலுங் கூடாது. கவிநடையும் வெளி றுபட்டிழியும். வடசொற்களும் இவற்றுளடங்கும்.

இச்சொற்களையெல்லாம் அகரம் ஆதியான வரிக்கிரமம் வரிசைபெற்று வரக் கூறுவதையே அகராதி என்பர். அக ராதி என்பது முற்காலத்ததோர் நூலன்று; இக்காலத்தது. இக்காலத்து அதுவும் பலவாயின. முற்காலத்தார் சொற்பொரு ளறிதற்கு நிகண்டுநூல்களையே கைக்கொண்டு வந்தனர். அஃது இக்காலத்தில் அரிதாயிற்று. நிற்க.

இதுவரையும் "இலக்கியச்சொல்லகராதி" என்பதன் பொருளையே விரித்துக் கூறினும். இவ்வகராதியிலே இலக்கி

யத்தில் வரும் பெயர்ச்சொற்களே பெரும்பாலும் வரும். வினைச்சொற்கள் வாரா. வினைச்சொற் பொருள்வேண்டுவோர் ஈண்டு வருந்தொழிற்பெயர் நோக்கி அறிக. ஒருவி, ஒருவ, ஒல்கி, ஒல்க, அலமந்து, அலமர, அட்டு, அட முதலிய வினைச்சொற்களின் பொருள்களை வேண்டுவோர் ஒருவுதல், ஒல்குதல், அலமரல், அடுதல் முதலிய தொழிற்பெயர்களை நோக்கி அவைகளை அறிக. இடைச்சொற்களும் இங்கே வாரா. அவைகளை நன்னூல் முதலிய இலக்கணங்களுக்கி அறிக. உரிச்சொற்களுள்ளும் அரியனவாய திரிசொற்கள் சிலசில வரும்.

பெயர்ச்சொற்களுள்ளும் உலகவழக்கிலும் நிகழ்ந்து வெளிப்பட்டு நிற்கும் இயற்சொற்களும் இங்கே வாரா. "வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா" என்று ஆசிரியர் தொல்காப்பியருங் கூறுவர். சிவன், விட்டுணு, பிரமன், சேரன், சோழன், பாண்டியன், யானை, புலி, கரடி, பனை, பலா முதலிய இயற்சொற்களையும் அகராதி நோக்கி அறியவேண்டுமா? சிவன் - ஒருகடவுள். சேரன் - ஓரரசன். யானை - ஒருமிருகம். என்றின்னோரன்னவாய் இவைகளையும் எழுதிப் பொருளுங் கூறுவர். இவற்றால் அகராதி விரிதலன்றிப் பயனுமுண்டா! இவையன்றி இயற்கையிலே ஒரு நிலையுஞ் சற்றே வேறுபட்டு மற்றொரு நிலையுமாக இருவகை நிலையாய் நின்று ஒரு பொருளையே உணர்த்துஞ் சொற்களும் பற்பல. அவைகளுந் தனித்தனி இங்கே வாரா. "சொற்றவற்றியலான் மற்றைய பிறவுந் தெற்றென வுணர்தல் தெள்ளியோர் கடனே" என்பதனை அநுசரித்து அவைகளை அறிக. அந்நிலையுடைய சொற்களுள்ளுஞ் சிற்சில காட்டுதும்.

## எழுத்து வேறுபடூஉம்பெயர்.

### ஐகாரமும், அகரமும்.

| | |
|---|---|
| கைலை = கயிலை. | தைலம் = தயிலம். |
| வைரம் = வயிரம். | வைத்தியம் = வயித்தியம். |
| சைலம் = சயிலம். | நைட்டிகம் = நயிட்டிகம். |
| வைந்தவம் = வயிந்தவம். | பையின் = பயின். |

## ஔகாரமும், அகாரமும்.

| | |
|---|---|
| கௌடி = கவுடி. | கௌவல் = கவ்வல். |
| பிரௌடை = பிரவுடை. | ஔவை = அவ்வை. |
| ஔடதம் = அவுடதம். | வௌவல் = வவ்வல். |
| மௌனம் = மவுனம். | மௌலி = மவுலி. |

## மகரமும், னகரமும்.

| | |
|---|---|
| நிலம் = நிலன். | அகம் = அகன். |
| இடம் = இடன். | மரம் = மரன். |
| புலம் = புலன். | திறம் = திறன். |
| கலம் = கலன். | அறம் = அறன். |

## லகரமும், ரகரமும்.

| | |
|---|---|
| பந்தல் = பந்தர். | அனந்தல் = அனந்தர். |
| சாம்பல் = சாம்பர். | குடல் = குடர். |

## குற்றுகரமும், அர் என்பதும்.

| | |
|---|---|
| பொதும்பு = பொதும்பர். | விலங்கு = விலங்கர். |
| முடுக்கு = முடுக்கர். | வெப்பு = வெப்பர். |
| கொம்பு = கொம்பர். | மாது = மாதர். |
| வெற்பு = வெற்பர். | கிடங்கு = கிடங்கர். |

# குறியதன் கீழாகாரம்.

## குறுகலும், உகரமேற்றலும்.

| | | |
|---|---|---|
| அவா | அவ | அவவு. |
| உணா | உண | உணவு. |
| புகா | புக | புகவு. |
| விழா | விழ | விழவு. |
| பிணா | பிண | பிணவு. |
| விளா | விள | விளவு. |
| இறா | இற | இறவு. |

## அம்முப்பெறல்.

| | | | |
|---|---|---|---|
| நறா | நற | நறவு | நறவம். |
| அரா | அர | அரவு | அரவம். |
| புதா | புத | புதவு | புதவம். |
| பிடா | பிட | பிடவு | பிடவம். |
| முழா | முழ | முழவு | முழவம். |
| சுறா | சுற | சுறவு | சுறவம். |
| குரா | குர | குரவு | குரவம். |
| மனா | மன | மனவு | மனவம். |
| நுணா | நுண | நுணவு | நுணவம். |
| நனா | நன | நனவு | நனவம். |

## தொழிற் பெயராதல்.

| | | | |
|---|---|---|---|
| உரா | உர | உரவு | உராவுதல். |
| விளா | விள | விளவு | விளாவுதல். |
| அயா | அய | அயவு | அயாவுதல். |
| உலா | உல | உலவு | உலாவுதல். |

## குறுகலோடு தொழிற்பெயராதல்.

| | | | |
|---|---|---|---|
| உசா | உச | உசவு | உசவுதல். |
| உயா | உய | உயவு | உயவுதல். |
| வயா | வய | வயவு | வயவுதல். |
| கனா | கன | கனவு | கனவுதல். |
| பரா | பர | பரவு | பரவுதல். |

இங்கே குற்றெழுத்தின் பின்னின்ற ஆகாரவீற்றுச் சொற்கள் குறுகி அகரவீறாயின. பின் குறுகலோடும் உகர மேற்றன. அதன்பின் அம்முப் பெற்றன. அதன்பின் தொழிற் பெயருமாயின. இந்நிலைகளெல்லாம் முற்றக் கூறவேண்டுமோ? ஒன்று கூறவே உணர்வார்க்கு மற்றையனவுந் தெற்றென அமையுமே; "உணர்ச்சி வாயி லுணர்வோர் வலித்தே" என்று ஆசிரியர் தொல்காப்பியருங் கூறுவர்.

## ஈறு வேறுபடூஉம் பெயர்,

மன்று = மன்றம். தூசு = தூசம்.
குன்று = குன்றம். நஞ்சு = நஞ்சம்,

| | |
|---|---|
| மட்டு = மட்டம். | கூற்று = கூற்றம். |
| நெஞ்சு = நெஞ்சம். | அரங்கு = அரங்கம். |

## அல்லீறும் பிறவும்.

| | |
|---|---|
| தொடை = தொடையல். | முதை = முதையல். |
| வளை = வளையல். | வறை = வறையல். |
| பிழி = பிழியல். | பொரி = பொரியல். |
| திரை = திரையல். | துவை = துவையல். |

## அன்னீறுங் குற்றியலுகரமும்.

| | |
|---|---|
| மருகன் = மருகு. | முருகன் = முருகு. |
| அரசன் = அரசு. | பாகன் = பாகு. |
| வேந்தன் = வேந்து. | ஒற்றன் = ஒற்று. |
| தூதன் = தூது. | அமைச்சன் = அமைச்சு. |

## எழுத்துநிலைமாறும்பெயர்.

| | |
|---|---|
| விசிறி = சிவிறி. | அகதம் = அதகம். |
| மிஞிறு = ஞிமிறு. | பறையலகு = பலகறை. |
| தசை = சதை. | நாரிகேளம் = நாளிகேரம். |
| வைகாசி = வைசாகி. | கண்மீ = மீகண். |

## விகாரப்பெயர்.

| | |
|---|---|
| தாமரை = மரை. | நீலம் = நீல். |
| அன்னம் = அனம். | அளி = ஆளி. |

## அடைவேறுபடுக்கும்பெயர்.

| | | |
|---|---|---|
| அருங்கலம். | பரிகலம். | இடுங்கலம். |
| இலைக்கலம். | அணிகலம். | படிமக்கலம். |
| சேமக்கலம், | வருமலை. | பாய்மா. |
| மரக்கலம். | கைம்மலை. | கருமா. |

## பண்புகொள்பெயர்.

| | | |
|---|---|---|
| பெருமகன். | வெற்றிலை. | செம்புலம். |

குறுமகன். சிற்றிலை. பெருமிதம்.
வெண்பா. சிறுவிலை. கரும்புறம்.

---

## வினைமுதனிலைவிகாரப்பெயர்.

உருகு = உருக்கு. வாடு = வாட்டு.
ஒது = ஒத்து. சூடு = சூட்டு.
எழுது = எழுத்து. சுருங்கு = சுருக்கு.
பெருகு = பெருக்கு. முறுகு = முறுக்கு.

---

## ஒப்பினாகியபெயர்.

பாவை. மெல்லியல். காளை.

---

## தாற்பரியப் பொருட்பெயர்.

தலைவளைத்தல். அடிவீழ்தல்.
செவிகொடுத்தல். வெங்காணல்.
வாய்திறத்தல். கைதொட்டல்.
கண்மூடல். கைப்பிடித்தல்.

---

## எழுத்து வேறுபடூஉம் வடமொழி.

கந்தம் = கெந்தம். தசம் = தெசம்.
கர்வம் = கெர்வம். தரிசனம் = தெரிசனம்.
சநநீ = செநநீ. பலம் = பெலம்.
சகம் = செகம். பந்து = பெந்து.

ஐவருக்கத்துள்ளே மூன்று மெய்களின் மேனின்ற அகரம் இங்கே எகரமாயும் வழங்கிற்று.

---

யந்திரம் = எந்திரம். யமன் = எமன்.
யதி = எதி. யதுகுலம் = எதுகுலம்.

இங்கே யகரமெய் கெட்ட அகரம் எகரமாயிற்று.

---

பக்ஷி = பட்சி. ஆக்ஷேபம் = ஆட்சேபம்.
மோக்ஷம் = மோட்சம். அக்ஷம் = அட்சம்.

இங்கே க்ஷகாரம் டகாரமுஞ் சகாரமுமாயிற்று.

---

## எழுத்துநீங்கும் வடமொழி.

யசோதை = அசோதை. யுகம் = உகம்.
இந்திரியம் = இந்தியம். குரோதம் = கோதம்.
சுவாமி = சாமி. மஹான் = மான்.
சுயம்வரம் = சயமரம். சுவயம்பு = சயம்பு.

ஆரியத்திலே ய, ர, வ, ஹ என்னும் மெய்களோடு கூடி நின்ற சொற்கள் இங்கே அவை கெட்டு வழங்கின.

---

## உபசர்க்கம் முந்துறூஉம் வடமொழி.

பிர = பிரபலம். அதி = அதிகாரம்.
பரா = பராசயம். சு = சுவர்ணம்.
அப = அபகாரம். பிரதி = பிரதிநிதி.
சம் = சம்பவம். உப = உபகாரம்.
வி = விமலம். அவ = அவமதி.
அநு = அநுகரணம். நிர் = நிரவதி.
நி = நிதேசம். துர் = துர்ப்புத்தி.
ஆ = ஆகிருதி. அபி = அபிமானம்.
உத் = உத்பவம். பரி = பரித்தியாகம்.

---

## உபசர்க்க வேறுபாடுறூஉம் பெயர்.

அதிகாரம். பிரகாரம்.
பரிகாரம். பிரதீகாரம்.
உபகாரம். அநுகாரம்.
விகாரம். அபகாரம்.

---

## வினைமுதனிலைபெறும்பெயர்.

அறிஞன். உழுநன்.
பொருநன். அறிவன்.

---

## அளபெழூஉம் முதனிலைப்பெயர்.

தழுவு = தழூஉ. மருவு = மரூஉ.
ஒருவு = ஒரூஉ. குழுவு = குழூஉ.

---

## உரிமுதனிலைப் பெயர்.

கடி : கட்டழகு. உறு : உறுவன்.
கயவு : கயவாய். நளி : நள்ளிருள்.

## அன்மொழிப்பெயர்.

நால்வாய். கறையடி. கொடுவரி.
துடியடி. பூழ்க்கை. சுரிகுழல்.

## தொழிற்பெயர்.

தொழிற்பெயர்களும் பலவேறு வகைப்பட்ட நிலையுடையன. தொழிற் பெயராவது பகுதியும் விகுதியுமாய் நின்று செய்பவன் றன்மையை உணர்த்துஞ் சொல். சில சில காட்டுதும்.

### முதனிலைத் தொழிற்பெயர்.

அறி. பரம்பு. எறி. கூடு.
கெடு. அடி. உதை. உலை.

### முதனிலை நீளுந் தொழிற்பெயர்.

விடு : வீடு. கொள் : கோள்.
கெடு : கேடு. படு : பாடு.

### முதனிலை நீண்டு விகுதிபெறல்.

விடு : வீடல். சொல் : சோறல்.
நொ : நோதல். வெல் : வேறல்.
வெட்டு : வேட்டம். அடு : ஆடல்.

### முதனிலை குறுகுந் தொழிற்பெயர்.

வா : வரல். கையாறு : கையறல்.
தா : தரல். தோள் : தொள்கல்.

### முதனிலை யொன்றுறூஉந் தொழிற்பெயர்.

வா : வரல், வருகை, வருதல், வரவு, வரத்து, வாரானை.

வீடு : விடை, விடுதல், விடுப்பு.
இறு : இறல், இறப்பு, இறக்கை.

## முதனிலை விகாரத் தொழிற்பெயர்.

| | | |
|---|---|---|
| பெருகு | பெருக்கு | பெருக்கம். |
| திருகு | திருக்கு | திருக்கம். |
| ஆடு | ஆட்டு | ஆட்டம். |
| அனுங்கு | அனுக்கு | அனுக்கம். |

## முதனிலை துணைபெறுந் தொழிற்பெயர்.

அலை : அலைதரல்.
உலை : உலைவரல்.
ஆ : ஆவரல்.
போ : போதரல்.

## முதனிலை யிருவகையாதல்.

இரு : இருத்தல்.
இருத்து : இருத்தல்.
எழு : எழுதல்.
எழுது : எழுதல்.
நட : நடத்தல்.
நடத்து : நடத்தல்.
எய் : எய்தல்.
எய்து : எய்தல்.

## முதனிலை யளபெழல்.

எழு : எழாஅல்.
ஒருவு : ஓராஅல்.
தழுவு : தழாஅல்.
வழுவு : வழாஅல்.
ஒவ் : ஓஒதல்.
அழு : அழாஅல்.
முழுவு : முழாஅல்.
உழு : உழாஅல்.

## பிறவினைத் தொழிற்பெயர்.

ஓவுதல் : ஓப்புதல்.
காலல் : காற்றல்.
அனுங்கல் : அனுக்கல்.
வரல் : வருவித்தல்.
பாறல் : பாற்றல்.
கூம்புதல் : கூப்புதல்.
அணங்கல் : அணக்கல்.
முருங்கல் : முருக்கல்.

## பொதுவினைத் தொழிற்பெயர்.

கரத்தல். தோற்றுதல். பூத்தல்.

ஒளித்தல். நலிதல். விள்ளல்.
தேற்றுதல். நோதல். வெளுத்தல்.

---

## எதிர்மறைத் தொழிற்பெயர்.

வரல் : வாராமை. வேட்டல் : வேளாமை.
நோற்றல் : நோலாமை. தோண்டல் : தோளாமை.
நட்டல் : நள்ளாமை. ஏற்றல் : ஏலாமை.

---

## பெயர்முதனிலைத் தொழிற்பெயர்.

நறை : நறைத்தல். முறுவல் : முறுவலித்தல்.
வெறி : வெறித்தல். தேன் : தேனித்தல்.

---

## பெயர்முதனிலை யீறுகெடுந் தொழிற்பெயர்.

ஏமுறல் : ஏமமுறல். ஏமரல் : ஏமம்வரல்.
ஐயுறல் : ஐயமுறல். காமுறல் : காமமுறல்.

---

## வடமொழிப்பெயர் முதனிலை.

உபதேசம் : உபதேசித்தல். பந்தம் : பந்தித்தல்.
போதம் : போதித்தல். விசாரம் : விசாரித்தல்.

---

## வடமொழிவினை முதனிலைபெறல்.

நச் : நசித்தல். இரை : இரைத்தல்.
பட் : படித்தல். விரு : வரித்தல்.
கம் : கமித்தல். மிரு : மரித்தல்.

---

## அடைமுதலுறூஉந் தொழிற்பெயர்.

கைபுனைதல். கடைக்கூட்டல்.
கால்சீத்தல். கைக்கொள்ளல்.
தலைக்கூடல். தலைப்பிரிதல்.

---

## உரிமுதனிலைவேறுபடுந் தொழிற்பெயர்.

கடி : கட்டல். கமம் : கமைத்தல்.
கடி : கடித்தல். கெழு : கேழ்த்தல்.

---

## எனவீற்றுத் தொழிற்பெயர்.

| | |
|---|---|
| வாவெனல். | தவ்வெனல். |
| ஞிலையெனல். | வற்கெனல். |
| விண்ணெனல். | புல்லெனல். |
| செவ்வெனல். | வெட்டெனல். |

இங்ஙனமே பெயர்ச்சொல் ஒன்றே பல்வேறு வகையாய் விரிகின்றது. ஒவ்வொரு சொல்லையும் வேறு வேறு கூறி வழாநிலை தெரிதலும், பொருள் கூறலும், உற்பத்தி கூறலும் எளிதன்று. "மொழிப் பொருட்காரணம் விழிப்பத்தோன்றா" என்பது தொல்காப்பியம். தொல்காப்பியச் சூத்திர விருத்தியிலே சிவஞானமுனிவர் கூறியதையும் இங்கே கூறுவாம்.

சிவஞானமுனிவர் கூறியது: "இந்திரனுக்குப் பிருகற்பதி இவை வழு; இவை வழுவில்லன என வடமொழிகளைத் தனித்தனி எடுத்தோதலுற்றார்க்குத் தெய்வ யாண்டில் ஆயிரம் யாண்டு சென்றது; சென்றுஞ் சொற்கண் முடிந்தில என மாபாடியத்துள் ஆசிரியர் பதஞ்சலியார் எடுத்தோதினர். தமிழ் மொழியும் அவ்வாறு பெருகிக் கிடத்தலின் அவற்றை இவை வழு இவை வழுவில்லன எனத் தனித்தனி ஓதப்புகின் முடிவு பெறாது" என்பது.

தொடர்ச் சொற்களுள்ளும் அரிதுணர்தற் பாலனவாய் அகப்பட்ட சில சொற்களன்றி மற்றைச் சொற்கள் இங்கே வாரா. தொடர்சொற்களாவன: கடுக்கையங் கண்ணிசூடி, பிரமனைப் பெற்றதாதை, அச்சுதன் முன்னர் வந்தோன் என்பன முதலியன. அவைகளை வெவ்வேறு பிரித்து முன்னும் பின்னும் வருபவை நாடிப் பொருள் கொள்க.

இச்சொற்களுள்ளே பொருள் பொருந்துமோ பொருந்தாதோ என ஆற்றல் கொள்ளற்கண் ஐயப்பாடுற்ற சொற்களின் துணிவுக்கெல்லாம் திவாகரம், பிங்கலந்தை, ஆசிரியம், சூடாமணி முதலிய நிகண்டுகளுஞ் சங்கதபாஷையிலுள்ள அமரகோசம், சப்தஸ்தோமம், சப்தரத்னாகரம் முதலிய ஆபிதானிகங்களும், பரிமேலழகர், நச்சினார்க்கினியர் முதலியோருடைய உரைநூல்களும் பெருந்துணையாயின.

நிகண்டு நூல்களிலும், அபிதானங்களிலும், பாரதம், இராமாயணம், கலித்தொகை, சிந்தாமணி, முதலிய இலக்கியங்களிலுமிருந்து புதியனவாகப் பலசொற்கள் இங்கே சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவையெல்லாம் ஆயிரத்தைந்நூற்றுக்கு மேலே இருக்கும். சொற்களன்றிப் பொருள்களும் புதியனவாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சில சில பொருள்கள் திருத்தப்பட்டு மிருக்கின்றன.

புதியனவாகச் சேர்க்கப்பட்ட சொற்களுள்ளே சில சொற்கள் தவிர மற்றெல்லாம் முதலிலே * என்னும் நட்சத்திரக் குறியினாலே வேறுபடுத்தப்பட்டிருக்கின்றன. பொருள்வேறுபாடுகளை ஆங்காங்கு நோக்கி அறிக. முன்னையனவாய் ஆங்காங்கு வரும் சிலபொருள்களும், சிலசொற்களுந் திருத்தற்பாலனவாய்த் தோன்றுகின்றன. அவற்றுள்ளுஞ் சில காட்டுதும்,

| பிழை. | திருத்தம். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| அணிலன் | அநிலன். | ஐதிகாதிகன் | ஐதிகாசிகன். |
| அரம்பிலம் | அரம். | ஓசு | ஓசம். |
| அருமறைக்கொடியோன் | மறைக்கொடியோன். | கக்கிசம | கற்கசம். |
| | | கடம்பல் | கூம்பல். |
| அவகிநம் | அவகீனம். | கவடி | கவுடி. |
| அனத்தம் | அனர்த்தம். | காரிகம் | கைரிகம். |
| ஆகுபுகு | ஆகுபுக்கு. | கிஞ்சனம் | அகிஞ்சனன். |
| ஆசமணியம் | ஆசமநீயம். | கிருடி | கிரீடி. |
| ஆற்றுமா | ஆத்துமா. | கூடபாகலம் | பாகலம். |
| ஆபச்சைவன் | ஆபன். | கொட்டம் | கோட்டம். |
| ஆர்க்குவதம் | ஆரக்குவதம். | கோகுலம் | கோகிலம். |
| இடுலி | துளி. | சுடகம் | சுட்கம். |
| இயசுரு | யசு. | செடகன் | சேடகன். |
| இயாழ் | யாழ். | செம்மரம் | சேமரம். |
| இரணம் | இருணம் (கடன்) | தராமான் | தரர்மரன். |
| ஈண்டு | இண்டு (கொடி) | தேவரங்கம் | தேவாங்கம். |
| உசற்காலம் | உஷக்காலம். | தேற்று | தேறு. (மரம்) |
| உதாசினம் | உதாசீனம், | நூங்கு | ஊங்கு. |
| உதாரத்தம் | உதாத்தம். | படிகம் | படிதம். |
| ஊமத்தம் | ஊமத்தை. | பணகரம் | பணதரம். |
| எக்கழுத்தம | ஏக்கழுத்தம். | பதத்திரம் | பத்திரம். |
| எல்லை | ஏல்லை. | பருதி | பரிதி. |
| ஏமி | எமி. | பாநாள் | பானுள். |

| பிழை. | திருத்தம். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| பாரபத்தியம் | பராபத்தியம். | வத்தமானம் | வர்த்தமானம். |
| பார்சவம் | பார்சுவம். | வதிரி | வதரி. |
| பிரதை | பிருதை. | வல்லூகம் | பல்லூகம். |
| புகர்வு | புகவு. | வாலாயம் | வாலவாயம். |
| மனோன்மணி | மனோன்மணி. | வியத்தகங்கை | வியத்கங்கை. |
| மார்ச்சரியம் | மாற்சரியம். | வியனிலை | வியநிலை. |
| மேனசை | மேனாத்துமசை. | வெஞ்சமன். | சமன். |
| யசசு | யசு. | வேரிபீதகம் | பீதகம். |
| வச்சிரதுண்டன் | வக்கிரதுண்டன். | வைதாணிகன் | வைதாளிகன். |
| வசந்ததிரு | வசந்ததரு. | வைதீகம் | வைதிகம். |

இங்ஙனம் வருஞ் சொற்களையும், பொருள்களையும் ஆராய்க. இவ்வகராதியினும் எமக்குப் புலப்படாமற் பிழைகள் வருதலுங் கூடும். அவைகளைத் திருத்தி அறிவித்தல் அறிஞர் கடன். சொற்களும் பொருள்களும் வழுவின்றி வழங்கப்படுதல் ஆவசியகம். ஓரெழுத்து வேறுபடினும் பொருளும் வேறுபட்டொழியும். பதடி என்புழித் தகரம் விலகுமாயின்; அது படி என்றாய்ப் பொருளும் வேறாய்விடும். வழுக்காணுந் தோறும் அறிஞரும் அருவருப்பர். கடைச்சங்கப்புலவருள் ஒருவராகிய சீத்தலைச்சாத்தனார் என்பவர் தாம் கேட்கும் நூல்களிலே சொற்குற்றங்களும் பொருட்குற்றங்களுங் காணுந்தோறெல்லாம் கையாலே தலையிற் குத்திக் கொள்வர் என்பது "தலைக்குத்துத் தீர்வுசாத்தற்கு" என்னும் வள்ளுவமாலையாற் பெறப்படுகின்றது. வழு வாராமற் காத்தல் அரிதாயினும் இயன்றவரையிலே காத்தல் வேண்டும். "அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா—லின்மை யரிதே வெளிறு" என்பது வள்ளுவர்.

இவ்வகராதியிலே அயலிலே மெய்வருகின்ற அக்கம், அக்கரம் முதலிய சொற்களெல்லாம் அயலிலே உயிர்மெய் வருகின்ற அகங்காரம், அகங்கை முதலிய சொற்களுக்கு முன்னே எழுதப்பட்டிருக்கின்றன. நகரவருக்க எழுத்தமைந்த வடசொற்கள் பல அநாதி, அநிலன், அநுசன், கதநம் என்பன போல நகரவருக்கமாயுஞ் சில வழக்கு நோக்கிக் கன்னிகை, கனகம், கனோபலம் என்பன போல னகரவருக்கமாயும் எழுதப்பட்டிருக்கின்றன. இருவருக்கமும் நோக்கி அறிக.

இராமயணம், பாரதம், இரகுவமிசம், கந்தபுராணம் முதலிய இலக்கியங்களிலுள்ள சொற்களுள்ளும் பல சொற்கள் பொருளையுறவினால் இங்கே எழுதப்படவில்லை. இவ்வகராதியிலே வேண்டுஞ் சொற்கள் பலவரவில்லை என்று வெறுப்பவர்கள், ஈண்டு வரும் புதுச்சொற்களையும், திருத்திச் சேர்க்கப்பட்ட பொருள்களையும் இதன் விலையையும் நோக்குவாராயின்; ஒருகால் இதுவும் வேண்டற்பாலதென்றே உவப்பவராவர்.

இதுவுந் தண்டியலங்காரப்புத்துரை முதலியன போல வித்தியாநுபாலனயந்திரசாலையிற் பிரகடனமாகி நிலவுமாறு செய்தவர் நமது நண்பரும், செந்தமிழ்ப்பண்டிதரும், நாவலரவர்களுடைய சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத் தரும்பரிபாலகருமாகிய ஸ்ரீமான். ச. பொன்னம்பலபிள்ளையவர்கள். இவர்கள் நன்றியை நாமும் இதனாற் பயன்பெறுவோரும் மறவாதிருத்தல் நன்று. அன்றி இடையிடையே இதற்குத் துணை செய்தோர் நன்றியும் நினைத்தற்பாலது.

சுன்னாகம்<br>ஆனந்தவூ<br>ஐப்பசிமீ.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

# உதாரணநூற்பெயர்.

அகநானூறு.
அமரநிகண்டு.
ஆசிரியநிகண்டு.
இரகுவமிசம்.
இராமாயணம்.
இறையனாரகப்பொருள்.
உரிச்சொனிகண்டு.
கந்தபுராணம்.
கம்பரந்தாதி.
கல்லாடம்.
கல்வளையந்தாதி.
கலித்தொகை.
காஞ்சிப்புராணம்.
கோயிற்புராணம்.
சப்தஸ்தோமம்
சப்தரத்நாகரம்.
சிலப்பதிகாரம்.
சிவஞானசித்தியார்.
சிவதருமோத்தரம்.
சீகாழிப்புராணம்.
சீவகசிந்தாமணி.
சூடாமணிநிகண்டு.
சூளாமணி.
சேதுபுராணம்.
சைவசமயநெறி.
ஞானாமிர்தம்
தணிகைப்புராணம்.
தாயுமானவர்பாடல்.
திருக்கோவை.
திருமந்திரம்.
திருமுருகாற்றுப்படை.
திருவாசகம்.
திருவாதவூரர்புராணம்.
திருவானைக்காப்புராணம்.
திருவிளையாடற்புராணம்.
திவாகரநிகண்டு.
தேவாரம்.
தொல்காப்பியம்.
நீதிநெறிவிளக்கம்.
நெடுநல்வாடை.
நைடதம்.
பட்டினப்பாலை.
பழமலையந்தாதி.
பாரதம்.
பிங்கலநிகண்டு.
பிரபுலிங்கலீலை.
புறநானூறு.
புறப்பொருள்வெண்பாமாலை.
பூவாளூர்ப்புராணம்.
பெரியபுராணம்.
பெரும்பாணாற்றுப்படை.
பொருநராற்றுப்படை.
மணிமேகலை.
மதுரைக்காஞ்சி.
மலைபடுகடாம்.
முல்லைப்பாட்டு.
யாப்பருங்கலக்காரிகை.
வாணன்கோவை.
விநாயகபுராணம்.
வெங்கைக்கோவை.
வேதாந்தசூடாமணி.

கணபதி துணை.

# இலக்கியச்சொல்லகராதி.

## அ

அ - சிவன், பிரமன், விட்டுணு, வியாழன், சந்திரவிம்பம், (சப்தரத்.) இன்மை, அன்மை, மறுதலை, அற்பம் என்னும் பொருள்களைக் காட்டும் ஒரு வடமொழி யிடைச்சொல். (சப்த) சுட்டுப்பொருளைக் காட்டும் ஓரிடைச்சொல், ஒருவிகுதி.

* அஃகம் - முறைமை, (சிந்) ஊறுநீர், (பிங்) தானியம்.

அஃகல் - வறுமை, (திவா) அஃகுதல்.

* அஃகு - ஊறுபுனல். (திவா.)

அஃகுதல் - சுருங்குதல், குறைதல், நுணுகுதல்.

அஃகுல்லி - உக்காரி என்னுஞ் சிற்றுண்டி.

அஃகேனம் - ஆய்தவெழுத்து.

* அஃது - அப்படி. (இரா)

அஃதை - கதியிலி.

அஃறிணை - தேவர் மனிதர் நரகரல்லாத மற்றைய சராசரங்கள். அல் + திணை. திணை - சாதி.

அக்கசாலை - கம்மியர்சாலை.

* அக்கடா - அப்பா என்பதுபோன்ற ஒரு வியப்புச்சொல். (இரா)

அக்கதம் - அறுகரிசி. (சூடா)

## அகங்

அக்கம் - கண், இந்திரியம், பொன், தானியம், உருத்திராக்கம்.

அக்கரம் - எழுத்து, அழிவின்மை.

அக்கவடம் - உருத்திராக்கமாலை.

அக்கன் - நாய், பிறவிக்குருடன்.

அக்கா - தாய். (சப்த)

அக்காரம் - சருக்கரை, சீலை. (பிங்)

அக்கி - கண், தேர். (சப்த)

அக்கிரகாரம் - பார்ப்பனச்சேரி.

அக்கிரபூசனை - முதல்வழிபாடு.

அக்கிரம் - முதன்மை, நுனி.

அக்கிரமம் - கிரமமின்மை.

அக்கு - எலும்பு, எருத்தின்திமில், சங்குமணி, உருத்திராக்கம்.

அக்குமாலை - உருத்திராக்கவடம்.

அக்குரோணி - இருபத்தோராயிரத்து எண்ணூற்றெழுபது யானைகளும், அத்தொகை அமைந்த தேர்களும், அறுபத்தையாயிரத்து அறுநூற்றுப்பத்துக் குதிரைகளும், ஓரிலக்கத்தொன்பதினாயிரத்துமுந்நூற்றைம்பது காலாள்களுஞ் சேர்ந்த ஒரு சேனாசமுகம். இஃது அக்கௌகிணி என்னும் வடமொழி. அக்க + ஊகிணி. (பாரத)

அகக்காழ் - உள்வயிரம்.

அகங்கரித்தல் - அகங்காரங்கொள்ளுதல். (பார)

அகங்காரம் - நானென்கை, கெர்வம். அகம் — நான். காரம்-செயல்.
அகங்காரி - கெர்வமுடையவன்.
அகங்கை - உள்ளங்கை.
அகடு - வயிறு, நடு. (சிந்)
அகண்டம் - முழுமை, முழுப்பொருள், பிளவின்மை. அ-இன்மை. கண்டம் - பிளவு, பிரிவு.
* அகண்டிதன் - பரிபூரணன்.
அகணி - மருதநிலம், வயல்.
அகத்திடு - உள்ளடக்குதல்.
அகதம் - மருந்து.
அகதி - கதியிலி. கதி - வழி, உபாயம்.
அகந்தை - நானென்கை, கெர்வம். அகம் - நான். தை - தன்மை.
அகப்பற்று-நான் என்னும்பற்று.
அகப்பா - மதில், மதிலுண்மேடை. (பிங்)
அகப்பொருள் - இன்பம். அகம்-உள். பொருள் - விடயம்.
அகம் - மனம், வீடு, பாவம், பூமி, உள், (சூடா) மரம், மலை, (சப்த)
அகம்படிமை - உள்வேலைக்குரிய அடிமை. அகம்பு + அடிமை. புறம் புறம்பு என் நின்றது போல அகம் அகம்பு எனநின்றது.
* அகம்பாடு-நானென்கை (இரா)
* அகம்பிரமஞானம் - நான்பிரமம் என்னும் அறிவு. (சித்)
அகமருடணம் - பாவநிவிர்த்தியின் பொருட்டுச் செபிக்கப்படும் ஒருமந்திரம். (பெரிய) அகம் - பாவம். மருடணம் - அழித்தல்.
அகரம் - ஊர், செயலின்மை.
அகரு - அகில். (பார)
அகல் - தகழி, சட்டி. (பெரும்)
அகலம் - விசாலம், மார்பு, வித்தாரகவி.
அகலிடம் - பூமி.
அகலியம் - மரம்.
அகலுதல் - நீங்குதல், விசாலித்தல்.
அகலுள் - பூமி, ஊர், விசாலம்.
அகவர் - மங்கலபாடகர். (மதுரை) அகவு + அர்.
அகவல் - அழைத்தல், (கலி) கூத்தாடல், மயிற்குரல், ஆசிரியப்பா. (சூடா) ஒலித்தல்.
அகவை - பிராயம். (சில)
அகழ் - அகழி. (இரா)
அகழுதல் - தோண்டுதல்.
அகளங்கம் - களங்கமின்மை.
* அகளங்கன் - சோழன்.
அகளம் - சாடி, யாழின்பத்தர்.
அகற்சி - பிரிவு, விசாலம்.
அகற்றுதல் - விசாலமாக்கல். "மடங்கொன்றறிவகற்றுங் கல்வி" (நீதிநெ) நீக்குதல்.
அகறல் - அகலம்.
அகன்மணி - தெய்வமணி.
அகன்றில் - ஆணன்றில். (விநாய)
அகாதம் - ஆழ்ந்தநீர், கபடம்.
அகாலம் - அல்லாதகாலம்.
அகி-பாம்பு, இரும்பு, விருத்திரன்.
அகிஞ்சனன் - வறியவன்.
அகிஞ்சை - கொல்லாமை, வருத்தாமை.
அகிதம் - தீமை.

அகிலம் - முழுவது, பூமி.
அகிற் கூட்டு - ஏலம் கருப்பூரம் சந்தனம் காசுக்கட்டி, தேன் என்னும் ஐந்தின் கலவை.
* அகை - கூறுபாடு. (சிந்)
அகைத்தல் - கிளைத்தல், (புற) முறித்தல், (இரா) அறுத்தல், (சிந்) அடித்தல், வருத்தல்.
அகைதல் - எரிதல், (கலி)தாமதித்தல். (சிந்) முறிதல், வருந்தல், எழுதல்.
அகோசரம் - புலப்படாதது.
அகோபிலம்-ஒருவிட்டுணுதலம்.
அகோரம் - உக்கிரம்.
அகோராத்திரம் - இராப்பகல்.
அங்கஹீநம் - அங்கக்குறைவு.
அங்கசன் - மன்மதன், மகன்.
அங்கண் - அவ்விடம், அப்படி.
அங்கணம் - சேறு,முற்றம்,மதகு.
அங்கணன் - சிவன், கடவுள்.
அங்கதம் - வாகுவலயம், பாம்பு, மார்பு, வசைக்கவி.
* அங்கநம் - முற்றம்.
அங்கநை - பெண்.
அங்கப்பிரதக்கிணம் — உருண்டு வலம்வரல்.
அங்கம் - உபாயம், (நாநா) உடம்பு, அடையாளம், உறுப்பு, எலும்பு, வேதாங்கம்.
அங்கமாலை - எலும்பு மாலை.
அங்கர் - அங்கதேசத்தார்.
அங்கர்கோமான் - கன்னன்.
அங்கராகம் - அங்கத்திற்பூசப்படுவது.
அங்கருகம் - மயிர்.ருகம்-தோன்றியது.
அங்காங்கிபாவம் - அவயவத்துக்கும் அவயவிக்கு முள்ள தொடர்ச்சி.
அங்காடி - கடைவீதி.
அங்காத்தல் - வாய்திறத்தல்.
அங்காரகன் - நெருப்பு, செவ்வாய்.
அங்காரம் - கரி.
அங்கி - அக்கினி, அவயவி, சட்டை, அத்தநாள், கார்த்திகை நாள்.
அங்கிதம் - அடையாளம், தழும்பு.
அங்கிரி - பாதம், மரவேர்.
அங்கிவேசன் — ஒருமுநிவன்.
அங்கீகரணம் - உடன்பாடு.
அங்கீகரித்தல் - உடன்படுதல்.
அங்கீகாரம் - உடன்பாடு.
அங்குசபாசமேந்தி - விநாயகன்.
அங்குசம் - தோட்டி.
அங்குட்டம் - பெருவிரல்.
அங்குட்டமாத்திரம் - பெருவிரலளவு.
அங்குட்டமாத்திரன் - வித்தியாதத்துவத்திலிருக்கும் ஓர் உருத்திரன்.
அங்குரார்ப்பணம் - மங்கள காரியங்களிலே சந்திரனை அதிதெய்வமாகக் கொண்டு மண்ணிட்டபாலிகைகளிலேநவதாநியங்களை இட்டுவளர்த்தல்.
அங்குரித்தல் - முளைத்தல்.
அங்குலம் - விரல், விரலளவு.
அங்குலி - விரல், மோதிரம்.
அங்குலிகம் - மோதிரம். (பார)
அங்குலியம் - மோதிரம்.
அங்கோலம் - அழிஞ்சில்.
அங்ஙனம் - அவ்விடம், அத்தன்மை.

அச்சம் - பயங்கரம், அசத்தி.
அச்சன் - கடவுள், பிதா. (தணி)
அச்சாணி - பண்டியச்சின் கடையாணி. (வள்)
அச்சாரம் - அஞ்ஞாநம். (தணி)
* அச்சிரம் - முன்பனி. (சிலப்)
அச்சு - அச்சுமரம், கட்டளைக்கருவி, உடம்பு, உயிரெழுத்து, பயங்கரம்.
அச்சுதம் - அழிவின்மை, அறுகரிசி. (சிந்)
அச்சுதன் - அழிவில்லான், கடவுள், விட்டுணு.
அச்சுவத்தம் - அரசமரம்.
அச்சுவம் - குதிரை.
அசக்கியம் - இயலாதது.
அசகலக்கணை - விடாதலக்கணை.
அசங்கதம் - பொருத்தமற்றது.
அசங்குதல் - நடுங்குதல். "கண்டசங்கர ஞன்முகன் கைத்தலம் விண்டசங்கிட" (இரா)
அசட்டர் - குற்றமுடையவர்.
அசடு - குற்றம்.
அசத்தன் - வலியற்றவன்.
அசத்தியம் - பொய்.
அசத்து - பிரபஞ்சம், (ஞாறு) இல்லது.
அசதி - கற்பில்லாள், சிரித்துப் பேசுதல், குட்டிநி.
அசதியாடல் - நகையாடல். (சிந்)
அசநம் - வேங்கைமரம், (இரா) உணவு.
அசநி - இடியேறு, வச்சிராயுதம்.
அசப்பியம் - சபைக்குத்தகாதது.
அசபை - நான் அவன் எனப் பொருள்படும் "ஹஞ்ச" என்னும் மந்திரம்.
அசம் - ஆடு, ஆன்மா.
அசம்பவம் - சம்பவியாதது.
அசரம் - நிலையியற்பொருள்.
அசரீரி - சரீரமில்லாதது, ஆகாயம்.
அசலம் - அசைவின்மை, மலை, பூமி.
அசலை - உமாதேவி, பூமி.
அசவல் - கொதுகு. (சூடா)
அசற்சூத்திரன் - ஒழுக்கமுந் தீக்கையுமில்லாத சூத்திரன்.
அசறு - சேறு.
அசா - தளர்ச்சி, துயர். (வெண்)
அசாத்தியம் - முடிக்கக் கூடாதது.
அசாவிடல் - இளைப்பாறுதல்.
அசாவுதல் - இளைப்படைதல்.
அசி - இகழ்ச்சிநகை, வாட்படை, ஆயுதம்.
அசித்தம் - முடிக்கப்படாதது.
அசித்தல் - சிரித்தல். (சிந்)
அசித்து - சடப்பொருள்.
அசிதம் - கருநிறம். (இரகு)
அசிந்திதன் - சிந்திக்கப்படாதவன்.
அசீதி - எண்பது. (சைவச)
அசுசி - அழுக்கு, அருவருப்பு.
அசுத்தம் - அழுக்கு, மலம்.
அசுத்தி - அழுக்கு, ஆணவமலம்.
அசுத்தை - அழுக்குடையவள்.
அசுபம் - அமங்கலம், பாவம்.
அசும்பு - நீர்ப்பொசிவு, கிணறு, சேறு, வழுக்குநிலம்.
அசும்புதல் - நீரூறல்.
அசுமம் - கல்லு.
அசுரநாள் - மூலநாள்.
அசுரம் - அசுரவிவாகம்.

அசுரமந்திரி - சுக்கிரன்.
அசுவம் - குதிரை.
அசுவினிதேவர்- தேவமருத்துவர்
அசுழம் - நாய். (திருப்பு)
அசூயை - அழுக்காறு.
அசேதநம் - அறிவில்லாதது.
அசைத்தல் - கட்டுதல், இருத்துதல், சார்த்துதல்,வீசுதல், வருத்துதல், இயக்குதல்.
அசைதல் - ஆடுதல், இருத்தல், இளைத்தல், உலாவல், ஓய்தல்.
அசைப்பு -அசைத்தல், சொல்லு.
அசைவு - வருத்தம், அசைதல்.
அசோகம் - அசோகமரம், துயரின்மை.
அசோகன் - சோகமில்லான்.
அசௌகரியம் - சுகங்கொடாதது.
அஞ்சநம் - கருநிறம், ஆணவமலம், மை, மேற்றிசையானை.
அஞ்சநி - காயா. (இரகு)
அஞ்சநை - அநுமன்றாய்.
அஞ்சம் - அன்னப்பறவை, அசபாமந்திரம், ஒருவகைச்சந்நியாசம்.
அஞ்சல் - அஞ்சுதல், தோல்வி.
அஞ்சலி - கும்பிடுதல், வௌவால்.
அஞ்சலினவர் - பாஞ்சராத்திரமதத்தவர். (கந்) அஞ்சு+அல்+இன்.
அஞ்சாமை - திண்மை. (வள்ளு)
அஞ்சித்தல் - பூசைசெய்தல்.
அஞ்சிலோதி - அழகியசிலவாகியகூந்தல். (குறி)
அஞ்சுமாலி - சூரியன். அஞ்சு - கிரணம்.
அஞ்ஞதை - அறியாமை.
அஞ்ஞாதம் - அறியப்படாதது.
அஞ்ஞாநம் - அறிவின்மை, ஆணவமலம்.
அஞ்ஞாநி - அறிவிலி.
அஞ்ஞை - தாய், (சில) அறிவிலான்.
அஞர் - துன்பம். (கந்தபு)
அஞலம் - கொசுகு, நுளம்பு.
அட்டகம் - எட்டன்கூட்டம்.
அட்டகாசம் - பெருஞ்சிரிப்பு.
அட்டகை - ஒருவகைச்சிராத்தம்.
அட்டதாது — எண்வகைலோகம்.
அட்டபாதம் — எண்காற்பறவை.
அட்டம் - அருகு, குறுக்கு.
அட்டமங்கலம் - எண்வகைமங்கலம்.
அட்டமம் - எட்டாவது.
அட்டமூர்த்தம் — சிவபிரானுடைய எண்வகைவடிவம். அவ்வடிவங்கள் நிலம், நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், இயமாநன் என்பன.
அட்டமூர்த்தி - சிவன்.
அட்டல் - அழித்தல். (கந்தபு)
அட்டாலம் - மேல்வீடு.
அட்டாலிகை - மேல்வீடு.
அடக்கல் - ஒடுக்கல். (புறம்)
அடகு - இலை, இலைக்கறி.
அடங்கலர் - பகைவர். (சிந்)
அடங்கார் - பகைவர்.
அடம் - பொல்லாங்கு, வலாற்காரம்.
அடர் - தகட்டுவடிவம், நெருங்குதல்.
அடர்த்தல் - நெருக்குதல், வருத்துதல்.

அடர்தல் - நெருங்குதல்.
அடல் - வலி, வெற்றி, கொலை, போர்.
அடலை - சாம்பர், விபூதி.
அடவி - காடு, சோலை, திரள்.
அடாத்து - வலாற்காரம்.
* அடார் - ஒருவகைப்பொறி.(புறம்) இதனை இக்காலத்து இடார் என்பர்.
அடி - முதல், பாதம், அடித்தல்.
அடிகள் - கடவுள், சுவாமி, தலைவி. (சிந்)
அடிச்சி - குற்றேவன்மகள்.
அடிசில் - சோறு, உணவு.
அடியிடுதல் — கால்வைத்தல், தொடங்கல்.
அடியுறை - பாதகாணிக்கை, தாசன்.
அடிவீழ்ச்சி - வணக்கம். (சிந்)
அடுக்கம் - பக்கமலை, மரநெருக்கம். (சிலப்)
அடுக்கல் - மலை, அடுக்கு, அடுக்கப்பட்டது.
அடுகலம் - பாகபாத்திரம்.
அடுகளம் - யுத்தகளம்.
அடுத்தல் - அடைதல், பொருத்தல்.
அடுதல் - கொல்லல், வருத்துதல், பாகம்பண்ணல், போராடல்.
அடை - பொருளுணர்த்துஞ்சொல்லை அடுத்து நின்று சிறப்பிக்குஞ்சொல், இலை, வெற்றிலை, அடுத்துநிற்பது.
அடைகுறடு - கம்மப்பட்டடை.
அடைகொளி - அடைசொல்லைக்கொண்டுநிற்குஞ் சொல்.
அடைச்சுதல் — அடைவித்தல்.
அடைசுதல் - நெருங்கல், செருகல்.
அடைத்தல் - அமைத்தல், (கல்லா) தடுத்தல், காவல்செய்தல்.
அடைதல் - அடுத்தல், சேர்தல்.
அடைப்பை - வெற்றிலைப்பை.
அடைய - முழுவதும்.
அடையலர் - பகைவர்.
அடைவு - அடைதல், முன்றை.
அண்டசம் - முட்டையிற் பிறப்பது.
அண்டப்புத்தேள் - விராட்புருடன். (கந்தபு)
அண்டம்-ஆகாயம், மேலுலகம், முட்டை, வித்து.
அண்டமுகடு - அண்டத்தினுச்சி.
அண்டர் - தேவர், பகைவர், இடையர்.
அண்டிகம் - செந்நாய்.
அண்ணம் - மேல்வாய்.
அண்ணல் - பெருமை, பெருமையிற்சிறந்தோன்,தலைமை, தலைவன்.
அண்ணு - அண்ணுமலை, (தேவாரம்) உண்ணுக்கு.
அண்ணுத்தல் - வாய்திறத்தல், (வள்) தலையெடுத்தல்.
அண்ணித்தல் - கிட்டுதல்.
அண்ணுதல் - அணுகுதல்.
அண்பல் - மேல்வாய்ப்பல்லு.
அண்முதல் - கிட்டுதல்.
* அணக்குதல்-வருத்தல்(வெண்)
அணங்காடுதல் - வெறியாடுதல்.
அணங்கு - தெய்வம், தெய்வப்பெண், கொலை, மயக்கநோய்,

வருத்தம், ஆசை, அச்சம், கொல்லிப்பாவை, பேய்.
* அணங்குசார்ந்தாள் - படிமத்தாள்.
அணங்குதல் - கொல்லல், வருத்துதல், விரும்புதல்.
அணரி - மேல்வாய்.
அணல் - தாடி. (புறம்)
அணவரல்-ஆசைப்படடல். (குறு)
அணவுதல் - கிட்டுதல்.
அணுப்புதல் - ஏய்த்துவிடல்.
அணி - ஆபரணம், அலங்காரம், பெருமை, படைவகுப்பு, அழகு, வரிசை.
அணிகலம் - ஆபரணம்.
அணிமா - அட்டசித்திகளுள் ஒன்று. அஃது அணுபரிமாணமாதல்.
அணியல் - அணிதல், மாலிகை.
அணு - உயிர், நுண்மை.
அணுக்கம் - சமீபம். (பெரியபு)
அணுக்கர் - அணிமையில் நிற்றற்குரியவர். (பெரிய) உழையர்.
அணுக்கு - அணிமை.
அணுகம் - நுண்ணியது.
அணுகுதல் - கிட்டுதல்.
அணுவலி - ஆன்மசக்தி.
அணை - நீர்தடுக்கும் வரம்பு, வரம்பு, ஆசநம், படுக்கை, மெத்தை.
அணைத்தல் - சேர்த்தல், தழுவுதல்.
அணைதல் - சேர்தல், புணர்தல்.
அத்தம் - அத்தகிரி, கைத்தலம், அத்தநாள், பொருள், சொற்பொருள்,அருநெறி, கண்ணடி, ஆண்டு, பாதி.
அத்தவாளம் - மேற்போர்வை.
அத்தன் - கடவுள், பிதா, உயர்ந்தவன்.
அத்தாணி - அரசுவீற்றிருக்குமிடம்.
அத்தி - அத்திமரம், யானை, எலும்பு, கொலை, கடல்.
அத்திசஞ்சயம் - தகநத்தின்பின் புண்ணியதீர்த்தத்திற் போடும்படி எலும்பு திரட்டுகை.
அத்திநி - பெண்யானை, பதுமிநி முதலிய பெண்களுள் ஒருத்தி.
அத்தியசநம் - அளவுகடந்துண்ணல்.
அத்தியட்சன் - மேலதிகாரி.
அத்தியந்தம் - அளவின்மிக்கது.
அத்தியயநம் - படித்தல்.
அத்தியவசாயம் - பொருட்டுணிவு, நிச்சயம்.
அத்தியாகாரம் - அளவுகடந்துண்ணல், அவாய்நிலையாற் சொல்வருவித்தல், தர்க்கம்.
அத்தியாசம் - விபரீதவுணர்ச்சி.
அத்தியாபகன் - உபாத்தியாயன்.
அத்தியாபநம் - படிப்பித்தல்.
அத்தியாரோபம் - விபரீதவுணர்ச்சி.
அத்தியாவசியகம் - மிகவும் இன்றியமையாதது.
அத்திரம் - அம்பு, வில்லு, எறியும்படை, நிலையின்மை.
அத்திரி — குதிரை, கழுதை, கோவேறுகழுதை, ஒட்டகம், மலை, உலைத்துருத்தி.
அத்து - அரைப்பட்டிகை, தைப்பு, சிவப்பு.
அத்துவயம் - இரண்டன்மை.

அத்துவரியு - யாகபுரோகிதன்.
அத்துவர் - வழி, (சித்)
அத்துவிதம் - இருவிதமாகாமை.
அத்தேயம்-கள்ளாமை. தேயம்-களவு.
அத்தை - மாதா, மாமி, தலைவி.
அதகம் - மருந்து.
அதட்டம் - பாம்பின் நச்சுப்பல்லு.
அதம் - கேடு. (கந்தபு)
அதமம் - இழிவு.
அதமருணிகன்-கடன்பட்டவன். இருணம் - கடன்.
அதர் - வழி.
அதர்கோள் - வழிப்பறித்தல்.
அதர்மம் - பாவம்.
அதரம் - உதடு, இழிவு.
அதரிகொள்ளுதல் - கடாவிடுதல். (சில)
அதரிதிரித்தல் - கடாவிடுதல்.
அதவம் - அத்திமரம்.
அதவு - அத்திமரம்.
அதழ் - பூவிதழ். (கலி)
அதள் - தோல். (புறம்)
அதாதா - உலோபி.
அதி - அதிகம், அப்பால் மேன்மை முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல். (சப்த)
அதிக்கிரமம் - நெறிதவறல், கடத்தல், மீறுதல்.
அதிக்கிராந்தம் - கடந்தது.
அதிகரணம் - நிலைக்களம்.
அதிகரித்தல் - மேற்படல்.
அதிகன் - மகான். (கந்தபு)
அதிகாரம் - அதிகரித்தல், நூற்பொருட் பாகுபாடு, ஆரம்பம், தலைமை.
அதிகாரி - தலைவன், சம்பந்தமுடையவன்.
அதிங்கம் - அதிமதுரம்.
அதிசயம் - மேம்பாடு.
அதிசயன் - அருகன்.
அதிசாரம் - வயிற்றுளைவு.
அதிட்டானம் - நிலைபெறுமிடம்.
அதிட்டித்தல் - நிலைக்களமாக்கொண்டு நடத்துதல்.
அதிட்டேயம் - அதிட்டிக்கும் ஸ்தானம்.
அதிதி - புதியவன், அசுரமாதா.
அதிதிசேவை - விருந்தோம்பல்.
அதிதிநாள் - புநர்பூசம்.
அதிதேசம் - அதுபோலக் கொள்க என உவமை காட்டி உணர்த்தல்.
அதிப்பிரசங்கம்—அதிகம்பேசல்.
அதிபதி - தலைவன்.
அதிபன் - தலைவன்.
அதிபாதகம் - பெரும்பாதகம்.
அதிமிதம் - அளவுகடந்தது.
* அதிரதர்-அளவிறந்த தேர்வீரரை எதிர்த்துப் பொருபவர்.
அதிரல் - புனலிமரம், விரிதூறு.
அதிரேகம் - மேன்மை. (இரா)
அதிவிரகன் - உபாயம்மிக்கவன்.
அதீதம் - கடந்தது.
அதுக்கல் - அடித்தல், கறித்தல்.
அதுல்லியம் - ஒப்பின்மை.
அதுலன் - ஒப்பில்லாதவன்.
* அதெந்து — அது என்ன.(திருவாச)
அதோகதி — நரகம். அதோ — கீழ்.
அதோமாயை - அசுத்தமாயை.
அதோமுகம் - கழிமுகம்.

அந் - இன்மை. (இலக்கணக்கொ)
அந்தக்கரணம் - மநம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் உட்கருவி.
அந்தகன் - இயமன், குருடன்.
அந்தகாரம் - இருள், அஞ்ஞாநம்.
அந்தணன் - வேதியன், வியாழன்.
அந்ததரம் - சித்தாந்தம். (சிவஞா)
அந்தப்புரம் - அரசன் மனைவிவீடு.
அந்தம் - இறுதி, அழகு, குருடு, முடிவு.
அந்தர்வேதி - நடுவேயுள்ள சமபூமி.
அந்தரங்கம் - இரகசியம்.
அந்தரம் - தீமை, (ஞாஹ) ஆகாயம், வேறுபாடு, தனிமை, இருள், நடு.
அந்தரி - உமாதேவி, ஆகாயவாணி.
அந்தரியாகம். - உட்பூசை.
அந்தரியாமி - உள்ளே நின்று இந்திரியங்களை இயக்குவோன், கடவுள், ஆன்மா.
அந்தரீயம் - உள்ளுடை.
அந்தளம் - கவசம்.
அந்தன் - குருடன், சனி.
அந்தி - முச்சந்தி, மாலைக்காலம்.
அந்தித்தல் - முடிவுசெய்தல்.
*அந்தியசர் - புலையர். (பிராய)
அந்தியம் - முடிவு.
அந்தியேட்டி - இறுதியிற் செய்யும் யாகம். இட்டி - யாகம்.
அந்தில் - அவ்விடம், ஓர் அசைச்சொல்.
அந்து - நெல்லுப்பூச்சி. (கந்)

அந்நம் - உணவு, சோறு.
அந்நமயம் - உணவாலாயது.
அந்நியம் - வேறு.
அந்நியர் - பிறர்.
அந்நியோந்நியம் - ஒன்றற் கொன்று.
அந்நியோந்நியாச்சிரயம் — ஒன்றனை ஒன்றுபற்றல். ஆச்சிரயம் - பற்றல்.
அந்நுவயம் - இயைபு, பொருத்தம்.
அநகன் - பாவமில்லாதவன், கடவுள்.
அநங்கம் - ஆகாயம், மல்லிகை.
அநங்கன் - மன்மதன்.
அநசநம் - உபவாசம். அசநம் - உண.
அநசூயை - அழுக்காறின்மை.
அநந்தசாயி - விட்டுணு. (பாரத)
அநந்தம் - முடிவில்லது, அளவில்லது.
அநந்தரம் - பின்.
அநந்தன்—கடவுள், ஆதிசேடன்.
அநபத்தியம் - பிள்ளையின்மை.
அநர்த்தம் - பயனின்மை.
அநலன் - அக்கினி.
அநலி - அக்கினி, சூரியன்.
அநவத்திதம் - நிலையற்றது.
அநாசாரம் - ஒழுக்கமின்மை.
அநாதன் - தலைவனில்லாதவன்.
அநாதி - ஆதியில்லாதது.
அநாமயம் - நோயின்மை.
அநாமிகை - ஆழிவிரல்.
அநாயம் - அநீதி. (இரா)
அநாவிருட்டி - மழையின்மை.
அநிகம் - சேனை.
*அநிர்வசநம் - சொல்லொணாதது

அநிருதம் - பொய்.
அநிலம் - காற்று.
அநீகிநி - சேனை.
அநு - பின் போல கூட சமீபம் முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல். (சப்த)
அநுக்கிரகம் - கிருபை.
அநுக்கிரமணிகை - விஷயவரிசை.
அநுகம்பம் - இரக்கம்.
அநுகரணம் - ஒன்று போலச் செய்தல்.
அநுசன் - தம்பி.
அநுஞ்ஞை - சம்மதம்
அநுட்டானம் - ஒழுக்கம்.
அநுதாபம் - பின்னிரங்கல்.
* அநுதோடம் - உபபாதகம்.
அநுபந்தம் - பின்சேர்த்தல்.
* அநுபமன் — ஒப்பில்லாதவன்.
அநுபாலநம் - காத்தல்.
அநுமதம் - சம்மதம்.
அநுமதி - சம்மதம், பூரணை.
அநுமாநம் - வழியளவை, ஐயம்.
அநுயோகம் - வினா.
அநுராகம் - மிக்கபிரியம்.
அநுவதித்தல் - வழிமொழிதல்.
அநுவழி - புதவாரம்.
அநுவாதம் - வழிமொழிதல்.
அநுவுரு - ஒத்தவடிவம்.(பாரத)
அநேகம் - பல.
அநேகன் - கடவுள்.
அப்பியங்கம் - எண்ணெய்தேய்த்தல்.
அப்பியாகதன் - முன்னறியப்படாத அதிதி, விசேடமாகவந்தவன்.
அப்பியாசம் - பலமுறைபழகுகை, பலமுறைசெய்கை.
அப்பியாசி - நன்குபயின்றவன்.
அப்புதல் - பூசுதல், ஒற்றுதல்.
அப - இன்மை இழத்தல் எதிர்மறை தவறு நீக்கம் என்னும் பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச் சொல்.
அபகரித்தல் - கவர்தல்.
அபகாரம் - தீங்கு, களவு.
அபகீர்த்தி - நிந்தை.
* அபங்கன் — பங்கமில்லான்.
அபசயம் - தோல்வி, குறைவு.
அபசவ்வியம் - வலப்பக்கம்.
அபசாரம் - தீங்கு, புறப்படுதல்.
அபத்தம் - தவறு, பொய்.
அபத்தியம் - பிள்ளை.
அபதேசம் - கபடம், மறுப்பு.
அபயம் - பயமின்மை, அடைக்கலம்.
அபயன் - பயமில்லாதவன், சோழன்.
அபரகாத்திரம் - கால், பின்கால்.
* அபரஞ்சி - புடமிட்டபொன்.
அபரம் - பின், முதுகு, மேற்கு, பொய், பிணக்கு, கவசம்.
அபராங்கம் - சரீரத்தின் பின்பாகம். (பார)
அபராணம் - பின்பகல்.(நாலடி)
அபராதம் - பாவம், குற்றம்.
அபராந்தம் - மேலைத்தேசம்.
* அபராந்தர்-மேலைத்தேசத்தார்.
அபரிமிதம் - அளவின்மை.
அபவர்க்கம் - மோட்சம்.
அபாங்கம் - கடைக்கண்.
அபாநம் - மலவாயில்.
அபாம்பதி - வருணன். (சேது)

அபாயம் - ஆபத்து.
அபாரம் - அளவின்மை.
அபாவம் - இன்மை.
அபி - அதட்டல் கண்டித்தல் கேள்வி ஐயம் அதிகம் முதலிய பொருள்களை உணர்த்தும் ஒருவடமொழியிடைச்சொல்.
அபிசாரி - வேசை.
அபிடேகம் - திருமஞ்சநம்.
அபிதாநம் - நாமம்.
அபிதேயம் - நாமமிடத்தக்கது.
அபிநயம் - அங்கசேட்டை, கூத்து
அபிநயர் - கூத்தர்.
அபிநவம் - புதியது.
அபிப்பிராயம் - கருத்து.
அபிமாநம் - செல்வச்செருக்கு, செருக்கு, அறிவு, கொலை, (சப்த) உள்ளக்களிப்பு. (சூ)
அபிமாநி - அபிமானமுடையவன்.
அபிமுகம் - எதிர்முகம்.
அபியோகம் - முறையீடு.
அபிராமம் - அழகு, பிரியம்.
அபிராமி - உமாதேவி.
அபிவிருத்தி - மிகவளர்தல்.
அபுத்தி - அறியாமை.
அபுத்திபூருவம் - அறியாமற் செய்தது.
அபூபம் - அப்பம்.
அபூர்வம் - முன்னில்லது.
அபேதம் - பேதமின்மை.
அம் - அழகு, நீர்.
அம்பகம் - கண்.
அம்பணத்தி - துர்க்கை.
அம்பணம் - மரக்கால், ஆமை, வாழை.
அம்பர் - அவ்விடம், ஓர்க்கோலை.
அம்பரம் - ஆகாயம், சீலை, கடல், திக்கு.
அம்பல் - வசைச்சொல், சிலரறிந்துபுறங்கூறல். அரும்பல் என்பது அம்பல் என்றுமாயிற்று.
அம்பலம் - சபை, சித்திரகூடம்.
அம்பி - தோணி, இறைகூடை.
அம்பிகேயன் - திருதராட்டிரன்.
அம்பிகை - மாதா, தாய்.
அம்பு - நீர், பாணம்.
அம்புசாதம் - தாமரை. (வாத)
அம்புதம் - மேகம். (இரா)
அம்புதி - கடல். (கந்தபு)
அம்புயம் - தாமரை.
அம்புயன் - பிரமன்.
அம்புயாதம் - தாமரை. (பார)
அம்புயை - இலக்குமி. (திருவர)
அம்புராசி - கடல். (பார)
அம்புலி - சந்திரன்.
அம்பை - தாய், உமாதேவி.
அம்போருகம் - தாமரை.
அம்போருகை - இலக்குமி.
அம்ம - கேட்க எனப்பொருள்படும் ஓரிடைச்சொல்.
அம்மம் - முலை. (இரகு)
அம்மனை - நெருப்பு, (பாரத) தாய், அம்மனைவிளையாட்டு.
அம்மான் - பிதா, கடவுள், மாமன்.
அம்மானை - அம்மனைக் காய் எறிந்து விளையாடுதல்.
அம்மை - அமைதி, (சிந்) தாய், உமாதேவி, வருபிறப்பு.
அமங்கலம் - மங்கலமல்லாதது.
அமங்கலி - கைம்பெண்.
அமணர் - சமணர்.
அமயம் - காலம்.

அமர் - யுத்தம்.
அமர்தல் - இருத்தல், விரும்பல்.
அமரர் - தேவர். அ - இன்மை.
அமரார் - பகைவர்.
அமராவதி - தேவுலகம்.
அமரி - அமுதம். அ - இன்மை. மரி - மரணம்.
அமலம் - அழுக்கின்மை, அழகு.
அமலன் - மலமில்லாதவன், கடவுள்.
அமலுதல் - நெருங்குதல். (தணி)
அமலை - உமாதேவி, இலக்குமி, ஆரவாரம், கூத்து, சோறு, மிகுதி.
அமளி - படுக்கை, மிகுதி.
அமறல் - நெருங்கல், பொலிதல்.
அமாத்தியன் - மந்திரி.
அமானம் - அளவின்மை.
அமிசம் - பங்கு, உரிமைப்பங்கு.
அமித்திரர்-பகைவர். அ-இன்மை
அமிதம் - அளவின்மை.
அமிர்தம் - இரப்பின்றி வந்த பொருள், (காஞ்) உணவு, சோறு, பால், தேவருணவு, இனிமை.
அமிழ்து — அமிர்தம்.
அமிழ்ந்தல் - ஆழுதல். (இரா)
அமுக்கல் - ஆழ்த்துதல்.
அமுதம் - அமிர்தம், உப்பு.
அமுதர் - தேவர், இடையர்.
அமுதவல்லி - சீந்திற்கொடி.
அமுது - அமிர்தம், உணவு, பால்.
அமுதுசெய்தல் - உண்ணல்.
அமுதுபடி - அரிசி.
அமுரி - சிறுநீர்.
அமேத்தியம் - மலம்.
அமேயன் - அளவுபடாதவன்.
அமை - அமாவாசி, மூங்கில், அழகு.
அமைச்சன் - மந்திரி.
அமைத்தல் - அழுத்துதல், (கல்லா) செய்தல், அடக்கல், நியமித்தல்.
அமைதல் - அடங்குதல், பொருந்தல், நிறைதல்.
அமைதி - சிறப்பு. (சிந்) நிறைவு, அடக்கம், சமயம்.
அமைவு - அடக்கம், அமைதல்.
அமோகம் - மோகமின்மை, இலக்குத்தவறுமை.
அயத்தொடர் - இருப்புச்சங்கிலி.
அயநம் - ஆண்டிற்பாதி, போதல், சரித்திரம், வழி.
அயம் - ஆடு, குதிரை, நீர், இரும்பு.
அயர்ச்சி - மறவி, தளர்ச்சி.
அயர்தல் - செய்தல், தளர்தல், அறிவழிதல்.
அயர்வு - தளர்வு, மறப்பு, துயர்.
அயர்வுயிர்த்தல் - தளர்வுநீக்கல்.
அயல் - அருகு, அந்நியம்.
அயவணம் - ஒட்டகம்.
அயவாகநன் - அக்கினி.
அயறு - புண்வழலை. (புறம்)
அயன் - பிரமன், சிவன்.
அயனுள் - உரோகணி.
அயா - வருத்தம். (இரா)
அயாவுயிர்த்தல் - வருத்தம் நீக்கல். (கலி) அயா - வருத்தம்.
அயங்கிதை - கொல்லாமை.
அயிர் - நுண்மணல், சர்க்கரை.
அயிர்த்தல் - சந்தேகித்தல்.
அயிராணி - இந்திராணி.
அயிராவணம் - அயிராவதயானை.

அயிரி - ஒருவகைக்கத்தி.
அயிரை - ஒருவகைமீன்.
அயில் - வேல், கூர்மை.
அயிலல் - உண்ணல்.
அயினி - உணவு, சோறு.
அயோக்கியம் - தகுதியின்மை.
அர்க்கம் - நீர்க்காகம், எருக்கு.
அர்க்கன் - சூரியன்.
அர்ச்சனை - பூசை.
அர்த்தம் - பாதி, திரவியம்.
அர்ப்பணம் - ஒப்பித்தல்.
அர்ப்புதம் - ஓரெண்.
அரக்கல் - புடைபெயர்தல், தேய்த்தல்.
அரக்கு - செம்மெழுகு, சிவப்பு.
அரங்கம் - சபை, ஆற்றிடைக்குறை.
அரங்குதல் - அழிதல். (இரா)
அரசிருக்கை - அரசுவீற்றிருக்கும் இடம்.
அரசி - தலைவி.
அரசு - இராச்சியம், அரசன்.
அரசுகட்டில் - சிங்காதநம்.(சில)
அரசுவா - அரசயானை.
அரட்டர் - குறுநிலமன்னர், துட்டர்.
அரண் - காவல், காவற்காடு, மதில்.
அரணம் - கவசம், கோட்டை, மதில்.
அரணி - தீக்கடைகோல். (பாரத)
அரணியம் - காடு.
அரத்தகம் - செம்பஞ்சு.
அரத்தம் - சிவப்பு, செங்குவளை, செம்மெழுகு, இரத்தம்.
அரதநம் - இரத்திநம், சிரேட்டம்.
அரந்தை - வருத்தம், குறிஞ்சியாழிசை.
அரம் - பாதலம்.
அரம்பு - தீங்கு, குறும்பு. (சிந்)
அரம்பை - தேவப்பெண், வாழை.
அரமியம் - நிலாமுற்றம், மேல்வீடு.
அரலை - விதை, கழலை, குற்றம்.
அரவக்கிரி - வேங்கடமலை.
அரவம் - பாம்பு, பேரொலி, சிலம்பு.
அரவிந்தம் - தாமரை.
அரவிந்தை - இலக்குமி.
அரவு - பாம்பு.
அராற்றுதல் - அழுதல், ஒலித்தல்.
அரா - பாம்பு, ஆயிலியம்.
அராகம் - விருப்பு, சிவப்பு, பாலையாழ்.
அரார்பதம் - வண்டு. (பாரத)
அரி - விட்டுணு, இந்திரன், அக்கினி, இயமன், வாயு, சிங்கம், குதிரை, குரங்கு, பன்றி, கிளி, கடல், தகடு, அழகு, தேர், வரி, உள்ளிடுமணி, மூங்கில், பகை, சோலை, மரகதம், மரவயிரம், வண்டு, தவளை.
அரிகயிறு - அரிநூற்பொறி (சிந்)
அரிகரகுமரன் - மாசாத்தன்.
அரிசந்தநம் - ஐந்தருவுள் ஒன்று.
அரிசநம் - மஞ்சள்.
அரிட்டம் - காகம், மோர், முட்டை, கள்ளு, பிரசவமண்டபம்.
* அரிடம் - அதிட்டகிநம்.(பார)
அரிணம் - சிவப்பு, மான்.
அரிதகி - கடுமரம்.
* அரிதசுவம் - பச்சைக்குதிரை.
அரிதம் - திக்கு, பொன்மை.
அரிந்தமன் - விட்டுணு. அரி = பகை.

அரிப்பிரியை - இலக்குமி.
அரிப்பு - அரித்தல், கோபம்.
அரிமணி — மரகதம், (பாரத)
அரிமா - சிங்கம். (நாலடி)
அரியகம் - பாதசாலம். (சில)
அரியணை - சிங்காதநம்.
அரியமா - சூரியன்.
அரியல்-அரித்தல், கள்ளு.(தணி)
அரில் - குற்றம், சிறுதூறு, பகை.
அரிவை - பெண்.
அருக்கம் — சுருக்கம், எருக்கு.
அருக்குதல் - அருமைப்படுத்தல், சுருக்குதல், குறைத்தல்.
அருகந்தர் - சமணர். (பெரிய)
அருகம் - தக்கது.
அருகர் - தக்கவர்.
அருகல்-குறைதல், சாதல் (திவா)
அருகுறல் - கிட்டல்.
அருங்கலம் - ஆபரணம்.
அருச்சநை - பூசை.
* அருச்சி - பூசை. (திருவி)
அருச்சுநம்-சுத்தம், (பாரத) மருதமரம், எருக்கு.
அருச்சுநவட்டம் - திருவிடைமருதூர்.
அருஞ்சிறை - கடுஞ்சிறை, நரகம்.
அருட்குறி - சிவலிங்கம். (காஞ்)
அருட்டுதல் — எழுப்புதல். (திருப்பு)
அருணம் - ஆடு, சிவப்பு, எலுமிச்சை.
அருணன் - சூரியன், புதன்.
அருணை — அண்ணுமலை.
அருத்தகங்கை — காவேரி.
அருத்தம் - பாதி, பொருள்.
அருத்தவாதம் - புனைந்துரை.
அருத்தாபத்தி-சொல்லியது கொண்டு சொல்லப்படாத பொருளைப் பெறுதல்.
அருத்தி - விருப்பம், செல்வன்.
அருந்ததி - வசிட்டன்மனைவி.
அருந்தல் - உண்ணல், அருமை.
அருந்துதன் — பீடைசெய்பவன்.
அருநெறி — போதற்கரியவழி.
அருப்பம்—அருமை, அற்பம், ஊர், காடு, கோட்டை, பிட்டு, மோர்.
அரும்பித்தல் - அரும்புதல்.(தே)
அரும்புதல் - தோன்றுதல், முகிழ்த்தல்.
அரும்பெறல் - பெறற்கரியது.
அருமை - இன்மை, பிரயாசம்,
அருவம் - உருவில்லது.
அருவி - கழிமுகம், மலையாறு.
அருள் - இரக்கம்.
அருளல் - கொடுத்தல், தயைசெய்தல், இரங்குதல்.
அரூபி — உருவில்லது.
அரை - அல்குல், ஒருமரம்.
அரைசிலை - அம்மிக்கல்.
அரையன் - அரசன்.
அரையிருள் — அர்த்தராத்திரி.
அரோசகம் - வெறுப்பு. (பாரத)
அல்—இரவு, ஒற்றெழுத்து, மதில்.
அல்கல் - சுருங்குதல், தங்குதல், நாள், வறுமை.
அல்லகண்டம் - துன்பம்.
அல்லகம் - நீலோற்பலம்.
அல்லகாத்திரி - தணிகைமலை.
அல்லது - தீங்கு.
அல்லம் - இஞ்சி.
அல்லல் - துன்பம்.
அல்லவை - தீயன.
அல்லாத்தல் - துயருறல். (தணி)
அல்லி-அகவிதழ், ஆம்பல், காயா.

அல்லியம் - விட்டுணுவாடிய கூத்து.
அலக்கண் - துன்பம்.
அலக்கு - வரிச்சு. (பெரிய)
அலகிடல் — அலகுவைத்தெண்ணல், துரால்களைதல், எண்ணுதல்.
அலகு - அளவு, பலகறை, நெற்கதிர், பறவைமூக்கு,கொகு, சோதிடம், விளக்குமாறு.
அலகை — பிசாசம்.
அலகைத்தேர் - கானல்.
அலங்கம் — கொத்தளம்.
அலங்கல் - அசைதல், ஒளிர்தல், பூமாலை, தளிர், மாங்கலங்கல்.
அலங்காரம் - அழகு, அணி.
அலங்கிருதி — அலங்காரம்.
அலசம் - சோம்பு.
அலசல் - சோம்பல்.
அலத்தகம் - செம்பஞ்சு.
அலத்தல் - துயருறல், வறுமைப்படல்.
அலந்தலை - துன்பம். (ஞான)
அலந்தை - நீர்நிலை, துன்பம்.
அலம் - போதுமெனல், அலமரல், கலப்பை, தேள்.
அலம்புதல்—ஒலித்தல், கழுவுதல்.
அலம்வரல் - சுழலல்.
அலமரல் - சுழலல், துயருறல்.
அலர் — மலர்ந்தபூ, பலரறிந்து தூற்றும் பழி, பழிச்சொல், மகிழ்வு.
அலர்த்தல் - விரித்தல்.
அலர்தல் - விரிதல்.
அலரவன் - பிரமன். (கந்)
அலரி — ஆதித்தன், பூ, அழகு, கண்வரி.
அலவன் — ஞெண்டு, சந்திரன், பூனை.
அலவு - அலைதல். (இரா)
அலறல்—அழுதல், ஆரவாரித்தல்.
அலாதம் - நெருப்புக்கொள்ளி, கரி.
அலாபு - சுரைக்கொடி.
அலாயுதன் - பலராமன்.
அலி - நறுவிலிமரம், பலராமன், "அலிமுகந்தொழு" (பார) ஆண்மைமிக்க நபுஞ்சகன், உழவன், வயிரமில்லாமரம்.
அலுத்தல் - இளைத்தல். (கந்த)
அலை - கடல், கடற்றிரை,கொலை.
அலைத்தல் — அசைத்தல்,தாக்கல்.
அலைவாய்-கடல், திருச்செந்தூர்.
அலைவு - அசைவு, வருத்தம்.
அலெளகிகம்—உலகியலல்லாதது
அவ்-அவை, அங்கு. (இரா)
அவ்வித்தல்—பொறாமையடைதல்
அவ்வியத்தம்-வெளிப்படாதது.
அவ்வியம்—பொறாமை, அவி.
அவ்வியயம் - இடைச்சொல்.
அவ்வியாத்தி — வியாபித்தலின்மை.
அவ்வை - மாதா, தவப்பெண்.
அவ - நிச்சயம், நிறைவு, வெறுப்பு, நிந்தை, சுத்தம், அப்பால் முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல். (சப்)
அவகடம் - வஞ்சகம், எதிர்.
அவகாசம் - தக்ககாலம், தக்கவிடம்.
அவகீர்த்தி - இகழ்ச்சி.
அவகுண்டனம்- முகமறைக்குஞ்சீலை.

அவகேசி - காயாதமரம்.
அவச்சேதம் - வரையறுத்தல்.
அவசகுநம் - துன்னிமித்தம்.
அவசம்-தன்வயமின்மை,அயர்வு
அவசரம் — சமயம்.
அவசாரம் - புறம்போதல்.
அவசாரி - வேசை.
அவசியம் - நிச்சயம், இன்றியமையாமை.
அவஞாநம் - அவமாநம்.
அவண் - அவ்விடம்.
அவத்தம் - பொய், வீண்.
அவத்தன் - பொய்யன், வீணன்.
அவத்தை - நிலை.
அவதஞ்சம் - காதணி, தலையணி.
அவதந்திரம் - அநியாயவழி.
அவதாநம் - மறப்பின்மை.
அவதாரம் - பிறத்தல், இறங்குதல்.
அவதாரிகை - வாக்கியத்தின்முகவுரை.
அவதி - அளவு, எல்லை, துயர்.
அவந்திகன் - அவந்திதேசராசன்.
அவந்திகை - கிளிப்பறவை.
அவநதன் - தலைகுனிந்தவன்.
அவநி - பூமி.
அவநிபன் - அரசன். பன் - காப்பவன்.
அவநீதி - அநியாயம்.
அவநுதி - உண்மையைமறுத்தல்.
அவப்பிரஞ்சம் - இழிசநர்மொழி.
அவபிருதம் - யாகாந்தஸ்நாநம்.
அவம் - தீமை, வீண்.
அவமதி - நிந்தை.
அவமதித்தல் - இகழ்தல்.
அவமாநம் - அவமதிப்பு.
அவமிருத்து - அகாலமரணம்.
அவயவம் - உறுப்பு, உடம்பு.
அவரோகணம் - இறங்குதல்.
அவல் — ஒருசிற்றுண்டி, பள்ளம், விளைநிலம், நீர்நிலை.
அவலம் - வலியின்மை, அழுகை, துயர், சோர்வு, வறுமை.
அவவு - அவா. (கலி)
அவளிகை - இடுதிரை. இது யவளிகை என்னும் வடசொல்.
அவா - பேராசை.
அவாசி - தெற்குத்திசை.
அவாந்தரம் - இடைக்காலம்.
அவாய்நிலை — அவாவிநிற்றல்.
அவி - தேவர்களை உத்தேசித்து ஓமாக்கினியில் விடும் நெய்முதலியன, ஆடு.
அவிகாரம் - விகாரமின்மை.
அவிகாரி - விகாரமில்லான், கடவுள்.
அவிடி - திரைச்சீலை.
அவித்தல் - அவியவிடல், அடக்குதல், அழித்தல், கெடுத்தல்.
அவித்துவையல் - பச்சடி.(பிங்)
அவித்தை - அஞ்ஞாநம், ஆணவமலம்.
அவிதல் - அடங்கல், வேகுதல், தணிதல்.
அவிதா - "உதவிசெய்க" எனப்பொருள்படும் ஒரு வடமொழியிடைச்சொல் (பார)
அவிநயம் — அபிநயம், விநயமின்மை.
அவிநாசி - அழியாவஸ்து.
அவிநாபாவம் - நீங்காதிருத்தல்.
அவிமுத்தம் - காசிமாநகரம்.
அவிர்தல் - ஒளிவிடுதல்.
அவிரோதம் - விரோதமின்மை.

அவிவேகம் - விவேகமின்மை.
அவிவேகி-விவேகமில்லாதவன்.
அவிழ்தல்-அலர்தல்,நெகிழ்தல்.
அவை - சபை, கூட்டம், புலவர்.
அவைத்தல் - குற்றல், நெரித்தல்.
அவைதிகம் - வேதசம்பந்தமில்லது.
அவைப்பு - குற்றப்பட்டவரிசி.
அவையல்கிளவி - அசப்பியவார்த்தை.
அழம் - பிணம். (தணி)
அழல் - நெருப்பு, வெப்பம்,அழுதல்.
அழலுதல் - கோபித்தல், உக்கிரமாதல்.
அழற்கதிர் - சூரியன்.
அழற்றுதல் — சுடுதல்.
அழனம் - நெருப்பு, வெப்பம்.
அழாஅல் — அழுதல். (புற)
அழி-இரத்தம்,வைக்கோல்.(புற)
அழிசி - ஆர்க்காட்டிலிருந்தவொருதலைவன், சோழர்குலத்தான்
அழிதகன்—வன்கண்ணன்.(கந்த)
அழிதல் - பெருகுதல், (சிந்) கெடுதல், சாதல், கலங்குதல்.
அழிதலை - தலையோடு. (தேவா)
அழிதூ - அலி. (கந்த)
அழிவிலான் - கடவுள்.
அழிவு — சாவு, கேடு, கழிமுகம்.
அழுக்கம் - கவலை. (திருவி)
அழுக்கறுத்தல் - அழுக்காறுகொள்ளல்.
அழுக்காறு - மனவழுக்கு, பொறாமை.
அழுக்கு-பொல்லாங்கு. (ஞானு)
அழுங்கல் - இரங்குதல், ஒளிமழுங்குதல், தாமதித்தல், அலைதல், துயருறல், கெடுதல்,ஒலித்தல்.
அழுத்துதல் - பதித்தல், தாழ்த்தல்.
அழுந்தல் — இறுகுதல், (புறம்) வருந்துதல், பதிதல்.
அழுந்து - ஆழம், அழுந்துதல்.
அழுவம் — ஆழம், பரப்பு, கடல், நாடு, பெருமை.
அள் - காது, கூர்மை, நெருக்கம், பற்றிரும்பு.
அள்ளல் - அள்ளுதல், சேறு, நரகம்.
அளக்கர் - கடல்,சேறு,நீள்வழி, கார்த்திகைநாள், உப்பளம்.
அளகம் - நீர், கூந்தல்.
அளகாதிபன் - குபேரன்.
அளகு - பறவைப்பேடு, கார்த்திகைநாள்.
அளகேசன் - குபேரன்.
அளகை - குபேரனகரம்.
அளத்தி - நெய்தனிலப்பெண்.
அளபு - அளபெடை.
அளம் - உப்பளம்,நெய்தனிலம்.
அளமரல் - அலமரல்.
அளவர் - உப்பமைப்போர்.
அள்வளாவுதல் - கலத்தல்.
அளவி - அளவு. (திருக்கோ)
அளவுதல் — கலத்தல்.
அளவை - அளவு, எல்லை, அளவைக்கருவி, தன்மை.
அளறு - சேறு, நரகம்.
அளறுதல் - தொனித்தல். (பிங்)
அளாவுதல் - கலத்தல்.
அளி - அன்பு, வண்டு, எளிமை.
அளிகம் - நெற்றி, பொய்.
அளித்தல் - படைத்தல்,காத்தல், கொடுத்தல், அருள்செய்தல், செறித்தல்.

அளிதல் - கனிதல், உருகுதல்.
அளிது - இரங்கத்தக்கது.
அளிந்தம் - நகரவாயிற்றிண்ணை.
அளியர் - அருளுடையர், அருள் பெறற்குரியர், எளியவர்.
அளை - தயிர், மோர், புற்று, குகை.
அளைதல் - கலத்தல், குழைதல்.
அளைவு — அளைதல்.
அற்பம் - அணு, சிறுமை.
அற்பர் - கீழ்மக்கள்.
அற்பாயு - அற்பவயசு. (சிவத)
அற்புதம் - அழகு, ஆச்சரியம்.
அற்புதன் - கடவுள்.
அற்றம் - குற்றம், (கலி) அவகாசம், அழிவு, சோர்வு, துன்பம், மெலிவு.
அற - மிக. (வள்)
அறக்கடவுள் - இயமன்.
அறத்தின்சேய் - யுதிட்டிரன்.
அறப்புறம் - ஓதுவிக்குஞ் சாலை, தருமத்தின் பொருட்டு வரியின்றி விட்டநிலம். (சிந்)
அறம் - தருமம், நீதி.
அறல் - அறுதல், கருமணல், சிறுதூறு, கடற்றிரை, நீர், அரித்தொழுகல்.
அறவர் - முநிவர், வேதியர்.
அறவன் — புண்ணியரூபன், புத்தன்.
அறவாழி - தருமசக்கரம்.
அறவாழியந்தணன் - கடவுள், அருகன்.
அறவு - அறுகை, அறுமிடம்.
அறவை - துணையிலி.
அறன்கடை - பாவம். (வள்)
அறிகுறி - அடையாளம்.
அறிஞர் - அறிவாளர், முனிவர்.
அறிஞன் - அறிவாளன், புத்தன், புதன்.
அறிதுயில் - யோகநித்திரை.
அறிமடம் - அறிந்தும் அறியார் போன்றிருத்தல்.
அறிவர் - அறிஞர், கம்மாளர்.
அறிவழி - பேய், கள்ளு.
அறிவறை - அறிவிலி.
அறிவன் - அறிஞன், கடவுள், செவ்வாய்.
அறிவனாள் - உத்தரட்டாதி.
அறிவுறுஅல் - அறிவுறுத்தல்.
அறுகால் - வண்டு.
அறுகு - அறுகம்புல், சிங்கம், யானை, யாளி.
அறுகுறை - கவந்தம்.
அறுதி - முடிவு, வரையறுத்தல், அறுதல்.
அறுதொழிலோர் - பிராமணர்.
அறுபதம் - வண்டு.
அறுமீன் - கார்த்திகைநாள்.
அறுவை - சீலை, சித்திரைநாள்.
அறை - அடித்தல், சொல், கற்பாறை, ஒலி, மாளிகை, குகை, அறுதலுடையது, அறுத்தல்.
அறைகூவல் - பொரவழைத்தல்.
அறைதல் - அடித்தல், ஒலித்தல், கடாவுதல்.
அறைபோதல் - அற்றுப்போதல், (கலி) கீழறுத்தல், வஞ்சித்தல்.
அன்பன் - கணவன், அன்புடையவன்.
அன்மை - தீமை. (சேது)
அன்றில் - அன்றிற்பறவை, மூலநாள்.
அன்றினர் - பகைவர்.
அன்னணம் - அப்படி.

அன்னவம் - சமுத்திரம்.
அன்னவூர்தி - பிரமன்.
அனந்தல் - நித்திரை, செருக்கு.
அனுக்கம் - வருத்தம், சோம்பு, வாட்டம், கேடு, புலம்புதல்.
அனுக்கல் — கெடுத்தல், வாட்டுதல்.
அனுங்கல் - கெடுதல், வாடுதல், வருந்துதல்.

## ஆ

ஆ - பசு, எருது, அச்சாமரம், எருமை, (பிங்) வடமொழியாய் நின்று வரைக்கும், அற்பம், ஆக்கேபம், நினைவு, எதிர், சம்மதம், நிந்தை, துயர் முதலிய பொருள்களை உணர்த்தும் ஓர் இடைச்சொல். (சப்)
ஆக்கம் - இலக்குமி, செல்வம், மென்மேலுயர்தல், ஆக்குதல், வளர்ச்சி.
ஆக்கல் - செய்தல், உயர்த்தல், சிருட்டித்தல்.
ஆக்கினேயம் - அக்கினித்தொடர்புடையது.
ஆக்கியானம் - கட்டுக்கதை.
ஆக்கிரமம் - வீரம், மீறுதல்.
ஆக்கிராணம் - மணங்கவர்தல், மூக்கு.
ஆக்கேபம் - தடைமொழி.
ஆக்கை - உடம்பு.
ஆகண்டலன் - இந்திரன்.
ஆகந்துகம் - புதிதாய்வந்தது.
ஆகந்துகன் - புதியனாய் வந்தவன்.
ஆகம் - உடம்பு, மார்பு.
ஆகமநம் - வருதல்.
ஆகமம் - முதனூல், வருகை, தருமநூல்.
ஆகரம் - உறைவிடம், கவர்தல்.
ஆகருடணம் - இழுத்தல், அழைத்தல்.
ஆகருடணை - அழைத்தல்.
ஆகவநீயம் - யாகத்திலே வடக்கில் வைக்கும் அக்கினி.
ஆகவம் - யுத்தகளம், சீலை.
ஆகன்னம் - காதுவரைக்கும்.
ஆகாசகாமி - ஆகாசத்திற் செல்லும் பரி.
ஆகாசவாணி - ஆகாயத்திற்றோன்றும் வார்த்தை.
ஆகாரம் - உடம்பு, உணவு, நெய்.
ஆகிருதி - தேகம், வடிவம்.
ஆகு - எலி, பெருச்சாளி.
ஆகுதி - ஓமஞ்செய்யும் அவி.
ஆகுலம் - ஆரவாரம், வருத்தம்.
ஆகுலித்தல் - ஆரவாரித்தல், வருந்தல்.
ஆகுவாகனன் - விநாயகன்.
ஆகுளி - சிறுபறை.
ஆகூதி - அழைத்தல்.
ஆகோள் - பசுக்கவர்தல். (வெண்)
ஆங்காரம் - அகங்காரம்.
ஆங்஗னம் - அத்தன்மை, அவ்விடம்.
ஆச்சாதனம் - மறைப்பு, ஆணவமலம்.
ஆச்சியம் - நெய்.
ஆச்சிரமம் - நிலை, முனிவர்வாசம்.
ஆச்சிரயம் - ஆதாரம், சார்பு.
ஆச்சிரவம் - அங்கீகாரம், கிலேசம்.
ஆசங்கை - சற்றே தர்க்கித்தாராய்தல், அச்சம், விசாரணை.
ஆசந்தி - பாடை. (திருமந்)
ஆசநம் - இருக்கை, இருத்தல்.

ஆசம் - ஆசநம், நகைப்பு.
ஆசமநம் - உறிஞ்சுதல்.
ஆசமித்தல் - உறிஞ்சுதல்.
ஆசயம் - தங்குமிடம்.
ஆசரணம் - அநுசரித்தல்.
ஆசரித்தல் - ஒழுகுதல், செய்தல்.
ஆசவம் - கள்ளு. (சூ)
ஆசற - முழுமையும். (இரா)
ஆசாரம் - அரசிருக்கை, ஒழுக்கம், பெருமழை, சீலை.
ஆசாரவாயில் - அரசிருக்கைவாயில்.
ஆசாரியன் - உபாத்தியாயன், குரு.
ஆசாள் - தலைவி.
ஆசான் - அருகன், முருகக்கடவுள், குரு, தலைவன்.
ஆசி - வாழ்த்து.
ஆசிடை - வாழ்த்து. (சூளா)
ஆசியம் - முகம், சிரிப்பு, அவமதிப்பு.
ஆசிரயம் - ஆச்சிரயம்.
ஆசிரயித்தல் - சார்தல்.
ஆசிரியம் - அகவற்பா.
ஆசிரியன் - குரு, உபாத்தியாயன்.
ஆசினி - ஆகாயம், ஈரப்பலா, மரவைரம்.
ஆசீர்வாதம் - ஆசிகூறல்.
ஆசீர்வதித்தல் - ஆசிகூறல்.
ஆசு - அற்பம், விரைவு, ஆசுகவி, குற்றம், பற்றுசு, கவசம்.
ஆசுகம் - அம்பு, காற்று, பறவை.
ஆசுகன் - வாயு. (பார)
ஆசுசுக்கணி - அக்கினிதேவன்.
ஆசுரம் - அசுரசம்பந்தமுள்ளது.
ஆசூசம் - அசுத்தி.
ஆசை - அவா, திக்கு, பொன்.
ஆசௌசம் - சுத்தியின்மை.

ஆஞ்சநேயன் - அநுமான்.
ஆஞ்சி - அலைதல், ஏலம்.
ஆஞ்ஞாபநம் - அறிவித்தல்.
ஆஞ்ஞை - கட்டளை.
ஆட்சி - ஆளுதல், உரிமை, ஆளப்படுவது.
ஆட்டி - பெண், ஆட்டுபவன்.
ஆட்டு - அசைப்பு, கூத்து, முழுக்கு.
ஆட்டைத்திவசம் - வருடத்திவசம்.
ஆட்படுதல் - அடிமையாதல்.
ஆடகம் - பொன், துவரை.
ஆடகன் - ஆடகேசவுருத்திரன், இரணியன்.
ஆடகி - துவரை.
ஆடம்பரம் - பெருமகிழ்ச்சி, செருக்கு, உற்சாகம், இறுமாப்பு.
ஆடல் - அசைதல், செய்தல், ஆளுதல், விளையாடல், முழுகுதல், வெற்றி, சொல்லல், வீரம்.
ஆடி - உத்தராடம், கண்ணாடி.
ஆடு - அடுதல், வருத்தம், வெற்றி.
ஆடுதல் - அசைதல், முழுகுதல்.
ஆடூஉ - ஆடவன்.
ஆடை - சீலை, பாலாடை. (சேது)
ஆடோபம் - செருக்கு, உற்சாகம்.
ஆண் - ஆண்பால், ஆணென்னுமரம்.
ஆண்டகை - ஆண்மக்களுட் சிறந்தவன்.
ஆண்டலை - கோழிப்பறவை.
ஆண்டளப்பான் - வியாழன்.
ஆண்டு - அவ்விடம், வருடம்.
ஆண்டையர் - அங்குள்ளார், மனிதர். (இர)
ஆண்டொழில் - பராக்கிரமம்.

ஆண்மை - ஆளுந்தன்மை, வலிமை, வெற்றி, உண்மை, வீரம்.
ஆணம் - அன்பு, சிறுமை, குழம்பு.
ஆணவம் - ஆணவமலம், அதிகநுண்மை.
ஆணி - எழுத்தாணி, மேன்மை.
ஆணு - அன்பு, நன்மை.
ஆணை - அடையாளம், கட்டளை, ஏவல், சத்தியம், சபதம், வெற்றி.
ஆத்தம் - குருசேவை. (வேதா)
ஆத்தன் - உண்மைகூறுவோன், நம்பத்தக்கவன், அருகன், சிவன், கடவுள்.
ஆத்தாநம் - நகரவாயில், தருமசபை.
ஆத்திக்கியம் - வைதிகதருமநம்பிக்கை.
ஆத்திகம் - கடவுளுண்டென்னும் சிரத்தை.
ஆத்திகன் - கடவுளுண்டென்பவன்.
ஆத்தியான்மிகம்- ஆன்மாவினால் வருந் துக்கம், (ஞானு) தன்னால் வருந்துக்கம் என்பாருமுளர். அதி+ஆன்மா+இக.
ஆத்துமசன் — புத்திரன்.
ஆத்துமா - சீவன், சரீரம், பரப்பிரமம்.
ஆதங்கம் - அச்சம், ஆபத்து, துக்கம்.
* ஆததாயி - அக்கினி, நஞ்சு முதலியவற்றாற் கேடுசூழுங் கொடுமையாளன். (திருவி)
ஆதபத்திரம் - குடை. திரம்-காப்பது.
ஆதபம் - வெய்யில், ஒளி.
ஆதபன் - சூரியன், பிராமணன்.
ஆதம் — அறிவின்மை, (ஞானு) ஆதரவு, விருப்பு.
ஆதரம் - அன்பு, ஆசை, தொடக்கம்.
ஆதரவு - அன்பு, விருப்பம்.
ஆதரிசம் - கண்ணுடி.
ஆதன் - அருகன், அறிவில்லான், சீவன்.
ஆதாநம் - எடுத்தல், செய்தல்.
ஆதாரம் - இடம், சார்ந்திருக்குமிடம்.
ஆதி - முதல், காரணம், தலைவன், நேரோடல், முதன்மை, முதற்கணுள்ளது, தொடக்கம், மநக்கவலை, பிணிப்பு.
ஆதிக்கம் - முதன்மை, மேன்மை.
ஆதிக்கியம் - மேன்மை.
ஆதிகவி - வான்மீகி.
ஆதிசைவர் - சிவப்பிராமணர்.
ஆதித்தர் - தேவர், சூரியர்.
ஆதித்தியம் - விருந்தோம்பல்.
ஆதிதேயம் - விருந்தோம்பல்.
ஆதிதேயர் — விருந்தோம்புவோர். (பார)
ஆதிதைவிகம் — தெய்வத்தால் வருந்துக்கம். அதி+தேவ+இக.
ஆதிநூல் - முதனூல்.
ஆதிபத்தியம் - பிரபுத்துவம்.
ஆதிபன் - அரசன், தலைவன்.
ஆதிபௌதிகம் - பிறவுயிர்களால் வருந்துக்கம். அதி+பூத+இக.
ஆதிமலை - இமயமலை.
ஆதிமீன் - அசுவதிநாள். (சேது)

ஆதிவராகன் - விட்டுணு.
ஆதீநம் - மேம்பாட்டுக்குரியது; ஆளுகை. அதி+ஈந.
ஆதுநிகம் - இக்காலத்துள்ளது.
ஆதுநிகர் - இக்காலத்தார்.
ஆதுரம் - நோய்.
ஆதுலன் - வறியவன், நோயாளி.
ஆதேசம் - உபதேசம், கட்டளை.
ஆதேயம் - ஆதாரத்திருப்பது.
ஆதோரணர் - யானைப்பாகர்.
ஆந்தரங்கம் - இரகசியம்.
ஆந்தரம் - அகத்தது.
ஆந்திரம் - குடர், தெலுங்குப் பாடை.
ஆந்தோளி - ஒருவகைச்சிவிகை.
ஆநகதுந்துபி - வசுதேவன், ஒருவகைவாச்சியம்.
ஆநகம் - படகம், மத்தளம்.
ஆநந்தம் - பெருமகிழ்ச்சி, பேரின்பம், சாக்காடு.
ஆநந்தன் - அருகன், சிவன்.
ஆநநம் - முகம்.
ஆநி - கேடு, (இரா) விடல்.
ஆநியம் - பகல், நாள்.
ஆநிலன் } அனுமன், வீமன்.
ஆநிலி }
ஆப்பி - பசுச்சாணி. (தணி)
ஆபகை - நதி, நீரோட்டம்.
ஆபத்தி - அடைதல்.
ஆபத்து } இடையூறு. (பாரத)
ஆபதம் }
ஆபன் - வசுக்களுள் ஒருவன்.
ஆபாசம் - பிரதிவிம்பம், போலி.
ஆபாடணம் - பேசுதல்.
ஆபாதசூடம் - பாதந்தொடங்கி முடிவரையும். (பாரத)
ஆபாலவிருத்தர் - பாலர்தொடங்கிவிருத்தர் வரையும்.
ஆபீநம் - பசுவின்மடி, இடையர்வீதி.
ஆபீரம் - இடைச்சேரி.
ஆபூபிகம் - அப்பவரிசை.
ஆபோகம் - அநுபவம், நிறைவு.
ஆம் - நீர், (கலி.) சம்மதியை அறிவிக்கும் ஓரிடைச் சொல்.
ஆம்பல்-மூங்கில், யானை, கள்ளு.
ஆம்பி - குடைக் காளான், பன்றிப் பத்தல் என்னும் இறைத்தற்கருவி.
ஆம்பிரம் - மாமரம்.
ஆமந்திரிகை - இடக்கைப்பறை.
ஆமம் - பாகம்பெறுத போசன பதார்த்தம்.
ஆமயம் - நோய், பசுச்சாணி.
ஆமலகம் - நெல்லிமரம், பளிங்கு.
ஆமா - காட்டுப்பசு.
ஆமாத்தியன்-ஆலோசனைகாரன்.
ஆமிடம் - மாமிசம், உணவு.
ஆமிநாயம் - வேதம், ஆகமம்.
ஆமிரம் - மாமரம், புளிப்பு.
ஆமிரவணம் - மாஞ்சோலை.
ஆமிலம் - புளிப்பு, புளியமரம்.
ஆமோதம்-மகிழ்ச்சி, நற்குணம்.
ஆமோதித்தல் - மகிழ்தல்.
ஆய் - தாய், உள்ளதினுணுக்கம்.
ஆய்ச்சி - இடைச்சி.
ஆய்தல் - ஆராய்தல், உள்ளதனிற் சுருங்கல்.
ஆய்ந்தோர்-அறிஞர், பிராமணர்.
ஆய்ப்பாடி - இடைச்சேரி.
ஆய்வு - ஆராய்வு, நுட்பம், அகலம், வருத்தம், குறைவு.
* ஆயகன் - தலைமயன். (இரா)

*ஆயசம்-இருப்பாயுதம்.(பாரத)
ஆயதநம் - வீடு, ஆலயம், இடம்.
ஆயதம் - நீளம்.
ஆயநம் - ஆண்டு.
ஆயம் - மகளிர் கூட்டம், ஆடவர் கூட்டம், கூட்டம், இலாபம்.
ஆயன் - இடையன்.
ஆயவியயம் - வரவுசெலவு.
ஆயாசம் - இளைப்பு, முயற்சி.
ஆயாமம் - தடுத்தல், பிராணுயாமம்.
* ஆயான் - தமயன். (இராமா)
ஆயி - தாய்.
ஆயிரங்கண்ணன் - இந்திரன்.
ஆயிரநாமன் - சிவன், விட்டுணு.
ஆயில் - ஆயின்மரம், ஆயிலியம்.
ஆயு - சீவநகாலம்.
ஆயுர்வேதம் - வைத்தியநூல்.
ஆயுள் - சீவநகாலம்.
ஆயோதநம் - போர்.
ஆர் - ஆத்திமரம், கூர்மை, பூமி, நிறைவு, அழகு,தேர்ச்சில்லின் நடுவிலுள்ள குறட்டிலிருந்து விளிம்புவலயத்திற் சென்று பொருந்துமாறு தைக்கப்பட்டிருக்கும் கம்பு.
ஆர்கலி - கடல்.
ஆர்ச்சநம் - தேடுதல், (கோயி) பூசை.
ஆர்த்தர் - நோயாளர்.
ஆர்த்தல் — ஆரவாரித்தல், உண்பித்தல், நிறைத்தல், பொருத்தல், கட்டுதல்.
ஆர்த்தி - துன்பம், விருப்பம்.
ஆர்த்திகை - பீடை, (கந்தபு) மின்னுனி.
ஆர்தல் - அருந்துதல், பொருந்துதல், நிறைதல்.
ஆர்ப்பரவம் - ஆரவாரம்.(சேது)
ஆர்ப்பு - ஒலி, நகை, யுத்தம், கட்டு.
ஆர்பதம் - வண்டு. (இரகு)
ஆர்வம் - ஆசை, பெறக்கருதிய பொருண்மேற்செய்யும்பற்று.
ஆர்வலர் - விருப்புடையவர்.
ஆர்வு - விருப்பம், நிறைவு, உண்ணுகை.
ஆரக்குவதம் - கொன்றைமரம்.
ஆரகூடம் - பித்தளை.
ஆரணங்கு - தெய்வம்.
ஆரணம் - வேதம்.
ஆரணன் - பிரமன், சிவன், விட்டுணு.
ஆரணி - உமாதேவி, காளி.
ஆரணியம் - காடு, காட்டுக்குரியது.
ஆரம் - முத்து, ஆத்தி, மணிவடம், சந்தநம், மாலை, தோட்டம், தேர்ச்சில்லின் குறட்டிலே தைக்கப்பட்டிருக்கும் ஆர்.
ஆரம்பம் - தொடக்கம், முயற்சி.
ஆரல் - ஆரான்மீன், நெருப்பு, செவ்வாய்.
ஆரவம் - ஒலி. (பாரத)
ஆரவாரம்-ஒலி, வருத்தம்.(பிங்)
ஆராதநம் } பூசை, வழிபாடு.
ஆராதனை } பூசை, வழிபாடு.
ஆராதித்தல் - பூசைசெய்தல்.
ஆராமம் - சோலை, மகிழ்ச்சி.
ஆராமை - நிறையாமை.
ஆராய்தல் - விசாரணைசெய்தல்.
ஆரால் - ஆரன்மீன்.
ஆரிடம் - ஸ்மிருதி, ஆகமம்.
ஆரிடர் - முநிவர்.

ஆரியம் - அழகு, மேன்மை.
ஆரியன் - குரு, குடிப்பிறப்புடையவன், சிரேட்டன், ஐயனார்.
ஆரியை - உமாதேவி, துர்க்கை.
* ஆரீதம்-பச்சைக்குருவி.(இரகு)
ஆருகதம் - அருகசமயம், நாவல்.
ஆருடம் - ஏறுதல்.
ஆரை - மதில், கொத்தளிப்பாய்.
ஆரோக்கியம் - சுவாத்தியம்.
ஆரோகணம் - ஏறுதல், ஏணி, படி.
ஆரோபணம் - ஏற்றுதல்.
ஆரோபம் - ஏற்றுதல்.
ஆலகாலம் - ஒருவகைநஞ்சு.
ஆலசியம் - சோம்புத்தன்மை.
ஆலம் - ஆலமரம், நஞ்சு, நீர், கலப்பை.
ஆலம்பம் - ஆதாரம், புகலிடம்.
ஆலயம் - தேவர்கோயில், வீடு, யானைப்பந்தி, தங்குமிடம்.
ஆலல் - ஆடுதல், ஒலித்தல்.
ஆலாலம் - நஞ்சு, வெளவால்.
ஆலவாய் - பாம்பு, மதுரைநகர்.
ஆலவாலம் - பாத்தி.
ஆலாசியம் - மதுரைநகர்.
ஆலாபம் - சம்பாஷணை.
ஆலாலம் - நஞ்சு.
ஆலி - கன்மழை, துளி, கள்ளு, மழை.
ஆலிங்கநம் - தழுவுதல்.
ஆலித்தல் - துளித்தல், களித்தல்.
ஆலீடம் - வலக்காலை மண்டலித்து இடக்காலை முன்வைத்து நின்று பாணஞ் செலுத்தும் நிலை. (திவா)
ஆலேக்கியம் - சித்திரப்படம்.
ஆலேகநம் - சித்திரித்தல்.
ஆலை - கரும்பாட்டும் யந்திரம், கரும்பு, கள்ளு, யானைப்பந்தி.
ஆலோகம் - பிரகாசம்.
ஆலோலம் - அசைவு.
ஆலோன் - சந்திரன்.
ஆவ - ஓரிரக்கக்குறிப்பு.
ஆவசியகம் - அவசியஞ்செயற்பாலது.
ஆவணம் - அடிமைச்சீட்டு, கடைவீதி, தெரு, உரிமை, புநர்பூசம்.
ஆவணி - அவிட்டநாள்.
ஆவநாழிகை - அம்புக்கூடு.
ஆவம் - அம்புக்கூடு, வின்னாண்.
ஆவர்த்தம் - சுழி, திரும்புதல்.
ஆவரணம் - மறைப்பு, மதில், சீலை.
ஆவல் - விருப்பம்.
ஆவலங்கொட்டல் - வாயிற் கையாலடித்தல்.
ஆவலர் - ஆவலுடையவர், நண்பர்.
ஆவலி - வரிசை. (கம்பர)
ஆவலித்தல் - அழுதல், புலம்பல்.
ஆவாகநம் - அழைத்தல்.
ஆவாசம் - மருதநிலத்தூர், வாசஞ்செய்யுமிடம்.
ஆவாரகம் - மறைப்பு.
ஆவி - உயிர், குளம், புகை, மணம்.
ஆவித்தல் - உயிர்த்தல், புகைத்தல்.
ஆவிநன்குடி - பழனிமலை. (கந்)
ஆவிருத்தி - திரும்பிவருதல்.
ஆவிலம் - அழுக்கு, கலங்கனீர்.
ஆவுதி - ஆகுதி. (மதுரைக்)
ஆவெனல் - வாய்திறத்தல்.
ஆவேசநம் - சிற்பர்வீதி, அக்கசாலை.

ஆவேசம் - உட்புகுதல், உற்சாகம்.
ஆவேசவாதி - காபாலசமயி.
ஆவேதநம் - அறிவிப்பு.
ஆழ்தல் - அழுந்துதல், தாழ்தல்.
ஆழ்வு - ஆழம். (இரகு)
ஆழி - சக்கரம், வட்டம், மோதிரம், கடல், தேர்ச்சில்லு, கூடற்சுழி.
ஆழியான் - விட்டுணு. (பாரத)
* ஆழியிழைத்தல்-தலைவி தலைவனைக் கூடுதல் கைகூடுமோ கூடாதோ என்பதனை அறிதற்கு அறிகுறியாகக் கண்ணை மூடிக் கொண்டு மணலிலே வட்டமாகச் சுழித்தல். சுழியின் ஆதியும் அந்தமும் பொருந்துமாயின் கூடற்கு அறிகுறியாகும்.
ஆழிவிரல் - மோதிரவிரல்.
ஆள்வினை - முயற்சி, தைரியம்.
ஆளரி - சிங்கம். (கந்)
ஆளாநம் - யானைகட்டுந்தூண்.
ஆளாபம் - ஆளாபநம்.
ஆளி-சிங்கம், ஆட்சியுடையவன்.
ஆளியூர்தி - துர்க்கை, காளி.
ஆற்ற - மிக. (தணி)
ஆற்றல் - வலி, செய்தல், தாங்குதல், ஈட்டுதல், அறிவு, வெற்றி, தணித்தல்.
ஆற்றறுத்தல் - வலியறுத்தல், (கலி) கைவிடல். (வள்)
ஆற்றுக்காலாட்டி - மருதநிலப் பெண்.
ஆற்றுணா - கட்டுச்சோறு, வழிப் போசநம். (சிந்) ஆறு - வழி.
ஆற்றுப்படுத்தல்-வழிப்படுத்தல்.
ஆற்றுப்படை - வழிப்படுத்தல்.
ஆறலை - வழியினின்றுபறித்தல்.
ஆறு - வழி, நதி, தன்மை, விதம்.
ஆன் - அவ்விடம், எருது, பசு.
ஆன்மிகம்-ஆன்மாவால்வருவது.
ஆன்றல் - அகலம், மிகுதி.
ஆன்றவர் - அறிவுடையவர், அமைந்தவர்.
* ஆனம் - தகுதி. (இரா)
ஆனாமை - தணியாமை, நீங்காமை. (இரா)
ஆனி - உத்தராடம், மூலம்.
ஆனிலை — பசுக்கொட்டில்.
ஆனைத்தீ - பெரும்பசியை விளைக்கும் ஒருநோய். (சிந்)
ஆனைமீன் - பெருமீன்.

## இ

இக்கு - கரும்பு, கள்ளு.
இக - இங்கே, இவ்வுலகம்.
இகத்தல் - கடத்தல், நடத்தல்.
இகந்துபடல் - கடந்துபோதல்.
இகபரம் - இம்மைமறுமை.
இகம் - இவ்விடம்.
இகல் - பகை, யுத்தம், வலி, ஒப்பு.
இகலல் - பகைத்தல், போராடல், ஒப்பாதல்.
இகலன் - நரி, பகைவன்.
இகழ்தல்-தள்ளுதல், நிந்தித்தல்.
இகாமுத்திர - இங்குமங்கும். அமுத்திர-அங்கே.
இகுத்தல்-அழைத்தல், ஒலித்தல், கொடுத்தல், சொரிதல், தாழ்த்தல், புடைத்தல், அழித்தல், வீழ்த்தல்.
இகுள், இகுளி } இடியேறு. (இரகு)
இகுளை - பாங்கி, சுற்றம்.

இங்கண் - இவ்விடம்.
இங்கிதம் - கருத்து, கருத்தினைக் குறிப்பிக்கும் உறுப்பின் தொழில்.
இங்கு - பெருங்காயம், இவ்விடம்.
* இங்குதல் - தங்குதல். (சிந்)
இங்குலிகம் - சாதிலிங்கம், சிவப்பு.
இங்ஙனம் - இத்தன்மை, இவ்விடம்.
இசித்தல் - முறித்தல்.
இசும்பு - வழுக்கு. (திருக்கோ)
இசை-ஒலி, கீர்த்தி, சொல், பண்.
இசைத்தல் - ஒலித்தல், சொல்லுதல்.
* இசைப்பொறி-காது. (சேது)
இஞ்சி - இஞ்சிப்பூண்டு, மதில்.
இஞ்சை - தீங்கு, கொலை.(சேது)
இட்டகை - செங்கல்லு.
இட்டளம் - துன்பம், தளர்ச்சி.
* இட்டாறு-உலோபம். (நாலடி)
இட்டி - ஈட்டி, யாகம்.
இட்டிடை - அற்பம், துன்பம்.
இட்டு - அற்பம், பிரியம்.
இடக்கயம் - துகிற்கொடி.
இடக்கர் - அசப்பியவார்த்தை, குடம்.
இடக்கல் - அகழ்தல். (பெரிய)
இடக்கை - ஒருவாச்சியம்.
இடங்கம் - கல்லுளி, கோபம்.
இடங்கணி - சங்கிலி.
இடங்கர் - முதலை, தூர்த்தர், குடம்.
இடங்கழி - நெருங்கல், மீதூரல்.
இடங்கழியர் - தூர்த்தர்.
இடத்தல் - பெயர்த்தல், (சிந்) சொலித்திடல்.
இடந்தலைப்பாடு - இடத்திற்கூடுதல்.
இடபம் - எருது, இடபராசி.
இடம் - வலி, செல்வம், விசாலம், வீடு.
இடம்புரி - இடம்புரிச்சங்கு.
இடர் - துன்பம், வறுமை.
இடல் - விடுதல், கொடுத்தல்.
இடவை - வழி. (திவா)
இடறுதல்-எற்றுதல், தள்ளுதல்.
இடன்-அகலம், செல்வம், இடம்.
இடார் - இறைகூடை.
இடி - இடியேறு, உறுதிமொழி, மா.
இடிஞ்சில் - விளக்குத்தகளி.
இடித்தல் - தகர்த்தல், முழங்கல், உறுதிகூறல், வெட்டல்.
இடித்துரை - உறுதிமொழி.
* இடிப்பணி - வியாக்கியானம்.
இடுக்கண் - துன்பம், வறுமை.
இடுக்கம்-ஒடுக்கம். இடுகு+அம்.
இடுக்கு - ஒடுங்கியவிடம்,(இரா) சுருக்கம், ஒடுக்கம், உலோபம்.
இடுகாடு - பிணக்காடு.
இடுகுதல் - சுருங்குதல், குறைதல். (சிந்)
இடுங்கலம் - கொள்கலம்.
* இடுங்குதல்-சோர்தல். (இரா)
இடுதல் - கொடுத்தல், விடுதல், வைத்தல்.
இடும்பை - துன்பம், வறுமை.
* இடுவந்தி-அபவாதம். (சில)
இடை - இடம், நடு, அவகாசம்.
இடைகழி - வாயில். (சிந்)
இடைதல் - சாய்தல், மெலிதல்.
இடையல் - துகில், மெலிதல்.

இடையீடு—இடைவிடுதல், தடை.
இடையுவா - பௌர்ணிமை.
இடையூறு - தீங்கு, தடை.
இடையெழுஞ்சநி - பூரநாள்.
இடைவு - தோல்வி, மெலிவு.
இண்டு - புலிதொடக்கிக்கொடி.
இண்டை - தாமரை, புலிதொடக்கி.
இணக்கம் - இசைவு, சம்மதம்.
இணங்கன் - பாங்கன்.
* இணங்கி - தோழி. (சேது)
இணர் - பூங்கொத்து, தளிர், பூ.
* இணுங்குதல்-முரித்தல். (சிந்)
இணை - ஒப்பு, தம்முளொத்த இரண்டு.
இணைத்தல் - தொடுத்தல்.
இணைதல் - ஒப்பாதல், இசைதல்.
இணைவிழைச்சு-காமப்புணர்ச்சி.
இதண் - காவற்பரண். (கல்லா)
இதணம் - காவற்பரண், பரண்.
இதம் - நன்மை, இனிமை.
* இதமித்தல்-இதஞ் செய்தல்.
இதயம் - மநம்.
இதரம் - கீழ்மை, தீங்கு, வேறு.
இதரேதரம் - ஒன்றற் கொன்று.
இதலை - கொப்பூழ்.
இதழ் - உதடு, கண்ணிமை, பூவிதழ்.
இதாகிதம் - நன்மைதீமை.
இதிகம் - உபதேசபரம்பரை.
இதிகாசம் - பரம்பரைச் சரித்திரம், உதாரணம், அறிவு.
இதை - ஒருவகைப்பயறு, புதுக்கொல்லை, மரக்கலப்பாய்.
இதைப்புனம் - புதுக்கொல்லை.
இந்தநம் - விறகு, நறும்புகை.
இந்தளம் - நெருப்பிடுங்கலம்.
* இந்தா - இங்கேவா. (கந்த) இந்து-இங்கே. ஆ-வா என்னும் பொருட்டு.
இந்தியம் - இந்திரியம்.
இந்திரகோபம் - தம்பலப்பூச்சி.
இந்திரசாலம் - மந்திரம் மருந்து முதலியவற்றால் ஒன்றினை மற்றொன்றாகக் காட்டுதல்.
இந்திரன் - சிரேட்டன், தேவராசன்.
இந்திரனாள் - கேட்டைநாள்.
இந்திராபதி - விட்டுணு.
இந்திரி - கிழக்கு, காந்தம்.
இந்திரியம் - கண்முதலி பொறிகள்.
இந்திரை-இலக்குமி, இந்திராணி.
இந்தீவரம் - கருங்குவளை, நெய்தல்.
இந்து - சந்திரன், மிருகசீரிடம்.
இந்துகாந்தம்—சந்திரகாந்தமணி.
இந்துளம் - கடப்பமரம்.
இநன் - சூரியன், பிரபு.
இப்பர் - வைசியர்.
இப்பி - சிப்பி.
இபம் - யானை, மரக்கொம்பு.
* இபாரி-சிங்கம். அரி - பகை.
இம்பர் - இவ்விடம், இவ்வுலகம்.
இம்பரும்பர் - பூசுரர். (சேது)
இம்மி - ஒருசிற்றெண், மத்தங்காய்ப்புல்லரிசி, அற்பம். (சிந்)
இம்மெனல் - விரைவுணர்த்தும் ஒரு குறிப்புச்சொல்.
இம்மை - இப்பிறப்பு.
* இமகரன் - சந்திரன். (கல்வ)
இமகிரணன் - சந்திரன்.
இமகிரி - இமயமலை.
இமம் - பனி, குளிர், சந்தனம்.

இமயவல்லி - உமாதேவி.
இமவந்தம் - இமயமலை.
இமவான் - இமயமலை.
இமாசலை - உமாதேவி.
இமாலயம் - இமயமலை.
இமிசை - கொலை, தீங்கு.
இமிர்தல் - ஒலித்தல், முரிதல்.
இமில் - எருத்தின்முரிப்பு.
இமிழ்-கயிறு,(சிந்) ஒலி.(முல்லை)
இமிழ்த்தல் - ஒலித்தல், கட்டல்.
இமைத்தல் - பிரகாசித்தல், கண்ணிதழிரண்டையுங்குவித்தல்.
இமைப்பு-பிரகாசம், இமைத்தல்.
இமையவர் - தேவர்.
இமையார் - தேவர்.
இயக்கம் - இயங்குதல்,அசைதல், மலசலம், வழி, போதல்.
இயக்கி - தருமதேவதை.
இயக்கு - அசைவு, செலவு.
இயக்குதல் - தொழிற்படுத்தல், செலுத்தல்.
இயங்குதல் - அசைதல்,நடத்தல்.
இயந்திரம் - தேர், ஆலை, மதிற்பொறி.
இயம் - ஒலி, சொல், வாத்தியம்.
இயம்புதல்-ஒலித்தல்,சொல்லல்.
இயமானன் - ஆன்மா.
இயல் - இயற்கை, இலக்கணம், சாயல், நடை, நூற்பொருட்பாகுபாடு.
இயல்பு - இயற்கை, குணம், முறைமை.
இயலல் - நடத்தல், அசைதல், தகவாதல்.
இயவு - காடு, வழி, போதல்.
இயவுள் - தலைவன், மிகுபுகழாளன்.
இயவை - வழி, ஒருசிற்றளவு.
இயற்சொல் - திரிவுபடாச்சொல்.
இயற்றல் - செய்தல், நடத்துதல்.
இயைத்தல் - பொருத்துதல்.
இயைதல் - பொருந்தல்.
இயைபு - பொருத்தம்,தொடர்பு.
இரக்கம் - கருணை, ஒலி, துயர்.
இரக்கை - காத்தல், விபூதி.
இரகசியம் - மறைவு, தனியிடம்.
இரகு - சூரியவமிசத்தரசர்களுளொருவன்.
இரங்குதல் - அழுதல், ஒலித்தல், வருந்துதல், அருள்செய்தல்.
இரச்சு - கயிறு, பின்னல்.
* இரசகன் - வண்ணான்.
இரசகி - வண்ணாத்தி. (திருவா)
இரசதம் - வெள்ளி, இராசதகுணம்.
இரசநி - இரவு, மஞ்சள்.
இரசம்-சுவை, நஞ்சு,நீர்,வீரியம்.
இரட்டல் - வீசுதல், அசைத்தல், இரட்டித்தல், ஒலித்தல்.
இரட்டி - இருமடங்கு.
இரட்டுறல் - மாறுபடுதல்.
இரணம் - யுத்தம், பொன்.
இரணியகருப்பன் - பிரமன்.
இரணியம் - பொன், இரணியகண்டம்.
இரத்தம் - சாதிலிங்கம், சிவப்பு.
இரத்தி - இத்திமரம், இலந்தை.
இரத்திநம் - சிரேட்டம், மணி.
இரதம் - அரைஞாண், தேர், இனிமை.
இரதி - பித்தளை, விருப்பம்.
இரந்திரம் - துளை, நிந்தை.
இரப்பு - யாசித்தல், தரித்திரம்.
இரமியம் - அழகு, சம்பகமரம்.

இரலை - ஊதுகொம்பு; கருமான், புல்வாய், அச்சுவினி.
இரவி - சூரியன், மலை, எருக்கு.
இரவிநாள் - இரேவதி.
இரவு - இரத்தல், இரா.
இரவோன் - சந்திரன், யாசகன்.
இரற்று - ஒலி.
இராக்கதிர் - சந்திரன்.
இராகம் — இச்சை, நிறம், சிவப்பு.
இராகவன் - இரகுவின் வழித் தோன்றல், இராமன்.
இராகி - பற்றுசு. (பிரயோ)
இராசராசன் - குபேரன், துரி யோதநன்.
இராசி - திரள், கிரகம்.
இராசியம் - மறைவு, பெண்குறி.
இராசிலம் - சாரைப்பாம்பு.
இராசீவம் - தாமரைப்பூ.
இராதம் - கடைக்கொள்ளி.
இராமம் - அழகு, நன்மை.
இராவணம் - அழுதல். (இரா)
இராவணி - இராவணன்மகன்.
இரிணம் - உவர்த்தரை.
இரித்தல் - சாய்த்தல், கெடுத்தல்.
இரிதல் - சாய்தல், கெடுதல்.
இருக்கு - வேதம், முதலாம்வேதம்
இருக்கை - இருத்தல், ஆசநம், குடியிருப்பு.
இருசு - நேர்மை, பண்டியுள்ளி ரும்பு.
இருடி - ஆந்தை, முநிவன்.
இருடிகேசன் - விட்டுணு. (பார)
இருணம் - கடன், நீர். (சப்த)
இருத்தி - சித்தி, வளர்ச்சி.
இருத்தினர் - யாகபுரோகிதர்.
இருத்துவிக்குகள் - யாகபுரோ கிதர்.
இருதயம் - மனம், மார்பு.
இருது - பருவம், பூப்பு.
இருந்து - கரி. (இரா)
இருந்தை - கரி. (பார)
இரும்பன் - அகமெலி.
இருமை - கருமை, பெருமை, இம் மைமறுமை.
இருவி - கதிர்கொய்ததினைத்தாள்.
இருள் - கறுப்பு, மயக்கம்.
இருள்வலி - சூரியன்.
இருளி - பன்றி.
இரேகை - எழுத்து, வரை.
இரேசகம் - வாயுவைவெளிவிடல்.
இரேணு - துகள்.
இரேவதிகொண்கன் - பலராமன்.
இரேவை - நிருமதையாறு. (இர)
இரை - உணவு, கள்ளு, ஒலி.
இல் - வீடு, மனைவி, இராசி.
இல்லம் - வீடு, தேற்றுமரம்.
இல்லி - துவாரம். (புற)
இலக்கம் - இலக்கு, எண், நூறு யிரம்.
* இலக்கித்தல் - இலக்குக்குறித் தல். (சிந்)
* இலக்கிநம் - இராசியினுதயம்.
இலக்கியம் - உதாரணம், காப்பி யம்.
இலகடம் - யானைமுதுகிற்றவிசு.
இலகிமா - அட்டசித்திகளுள் ஒன்று. அஃது இலகுவாதல்.
இலகு - நொய்ம்மை.
இலங்கை - யாற்றிடைக்குறை.
இலங்கேசன் - இராவணன்.
இலச்சினை - அடையாளம், மோ திரம்.
இலஞ்சி - நீர்நிலை, மகிழமரம், கொப்பூழ்.
இலட்டுகம் - மோதகம்.

இலதை - படர்கொடி, இலந்தை.
இலம்பகம் - நுதலணி, அத்தியாயம்.
இலம்பாடு - வறுமை.
இலயம் - அழிவு, கூத்து.
இலலாடம் - நெற்றி.
இலவங்கம் - கிராம்பு.
இலவம் - பசுவாலின்மயிர்.
இலாங்கலி - தெங்கு, செங்காந்தள்.
இலாங்கூலம் - வால்.
இலாஞ்சனை - அடையாளம்.
இலாடம் - நெற்றி.
இலாயம் - குதிரைப்பந்தி. (பிங்)
இலாவணியம் - சரீரகாந்தி.
இலிகிதம் - எழுதப்பட்டது.
* இலிகிதர் - எழுதப்பட்டவர்.
இலிபி - எழுத்து.
இலிர்த்தல் - தளிர்த்தல். (சூடா)
இலிற்றல் - துளித்தல், சுரத்தல்.
இலீலை - விளையாட்டு, புணர்ச்சி.
இலேககன் - எழுத்தாளன்.
இலேகர் - தேவர்.
இலேகினி - எழுத்தாணி.
இலேகித்தல் - எழுதுதல். (சிந்)
இலேசம் - அற்பம், அற்பகாலம்.
இலேபநம் - பூசுதல்.
இலை - தகட்டுவடிவம், வெற்றிலை.
இலைப்புரைகிளைத்தல் - தேடுதல்.
இலௌகிகம் - உலகியற்குரியது.
இவ் - இவை.
இவண் - இவ்விடம்.
இவர்தல் - ஏறுதல், பரத்தல், எழுதல், செல்லுதல், அடைதல், விரும்பல்.
இவறல் - மறப்பு, கடும்பற்று, விருப்பு.
இவுளி - குதிரை.
இழவு - இழத்தல், சாவு. (இரா)
இழிச்சுதல் - இறக்குதல்.
இழிசன்ன் - இழிந்தவன்.
இழிஞர் - புலையர்.
இழித்தல் - இறக்குதல். (இரா)
இழிதகவு - எளிமை. (கந்) தகல் - பொருந்தல்.
இழிதகன் - எளிமையுடையவன்.
இழிதல் - இறங்குதல், தாழ்தல்.
இழிவு - குறை, தாழ்வு.
இழுக்கம் - தவறு, தாமதம்.
இழுக்கல் - தவறுதல், வழுக்கல்.
இழுக்கு - தவறு, கீழ்மை, பொல்லாங்கு, வழுக்குநிலம்.
இழுகுதல் - தாமதித்தல், தவறல்.
இழுது - கள்ளு, நெய், குழைசேறு.
இழுதை - அறிவிலான், பேய்.
இழுமெனல் - இனிமை.
இழை - ஆபரணம், நூல்.
இழைத்தல் - செய்தல்.
இழைதல் - கூடுதல். (சிந்)
இளக்கு - அசைப்பு. (மதுரை)
இளகுதல் - தழைத்தல், நெகிழ்தல், அசைதல். (சிந்)
இளங்கோ - வைசியன்.
இளந்தலை - கீழ்மை. (பாரத)
இளவல் - தம்பி.
இளி - யாழினொருநரம்பு, இசை, அவமதிச்சிரிப்பு.
இளிவரவு - இகழ்ச்சி, அவமானம்.
இளை - பூமி, (இரா) காவல், காவற்காடு, இளமை.
இளையாள் - இலக்குமி, தங்கை.
இற்செறித்தல் - வெளியிற் போக

விடாமல் வீட்டுள் வைத்துக் காத்தல்.
இற்பிறப்பு - உயர்குடிப்பிறப்பு.
இற்புலி - பூனை.
இறக்கம் - இறங்குதல், மரணம்.
இறடி - தினை, கருந்தினை.
இறத்தல் - கடத்தல், சாதல்.
இறப்ப - மிகுதியாக.
இறப்பு - இறத்தல், மிகுதி, கடத்தல்.
இறல் - இறுதல், கேடு.
இறலி - இத்திமரம்.
இறவு - கடத்தல், (இரா) இறத்தல், தேன்கூடு, இறால்.
இறவுளர் - குறிஞ்சிநிலமாக்கள்.
இறால் - தேன்கூடு, கார்த்திகைநாள், எருது, இறான்மீன்.
இறுக்கர் - பாலைநிலமாக்கள்.
இறுத்தல் - ஒடித்தல், முடித்தல், முறித்தல், தங்கல், விடைகூறல்.
இறுதல்-கெடுதல், முரிதல், முடிதல்.
* இறுதி - முடிவு. (பார)
இறுப்பு - குடியிறை. (பிங்)
இறும்பு - மலை, குறுங்காடு, தாமரைப்பூ, சிறுதூறு.
இறும்பூது - அதிசயம்,பெருமை.
இறுமாப்பு - தலையெடுப்பு.
இறுவரை - பெருமலை. (சிந்)
இறுவாய் - முடிவு.
இறை - கடவுள், தலைவன், அரசன், அற்பம், இறகு,தங்குகை, குடியிறை, கையிறை, மறுமொழி, தலைமை, இறைப்பொருள், சிறுமை.
இறைச்சி - நேயம், (கலி) மாமிசம்.
இறைஞ்சி - மரவுரி. (சிவரா)
இறைமை - தலைமை.
இறைவன் - தலைவன், கடவுள், அரசன், குரு.
இறைவி - தலைவி, அரசி.
இறைவை-ஏணி, (இரகு) கூடை.
இன்மை - வறுமை, இல்லாமை.
இன்றியமையாமை - இல்லாது நிறையாமை.
இன்னணம் - இத்தன்மை.
இன்னல்-குற்றம்,துன்பம்,தீங்கு
இன்னா - துன்பம், தீங்கு.
இன்னே - இப்பொழுது.
இனம் - சுற்றம், கூட்டம்.
* இனிது - பெரிது. (கந்)
இனைதல்-வருந்துதல்,இரங்குதல்
இனைவரல்-வருந்துதல். (பாரத)

## ஈ

ஈ - வண்டு, தேன்வண்டு.
ஈகை - கொடை, பொன், இண்டங்கொடி.
ஈங்கனம் - இவ்விடம். (கந்)
ஈங்கு - இவ்விடம்.
ஈங்ஙனம் - இவ்விடம்.
ஈச்சுரன் - கடவுள்.
ஈசத்துவம் - அட்டசித்திகளுள் ஒன்று; அஃது ஆளுகை.
* ஈசம் - வடகிழக்கு. (சிவதரு)
ஈசன்-கடவுள்,அரசன், தலைவன்.
ஈசனாள் - திருவாதிரை.
ஈசானதிக்கு - வடகிழக்கு.
ஈசானம் — சிவனுடையமுகங்களுள் ஒன்று, வடகிழக்கு.
* ஈசிதை - ஈசத்துவம்.
ஈசுவரி - உமாதேவி.

ஈட்டம்-கூட்டம், தேட்டம், வலி.
ஈட்டுதல்-கூட்டுதல், திரட்டுதல்.
ஈடணை - விருப்பம்.
ஈடழித்தல் - வலிகெடுத்தல்.
ஈடு - சமம், வலி, பெருமை.
ஈடுபடுதல் — வலிகெடல்.
ஈடேறல் - வலிமிகுதல், மேம்படுதல்.
ஈண்டு - இவ்விடம்.
ஈண்டுதல் - நெருங்குதல்.
ஈதி - வேதனைசெய்யும் நோய், (பிங்) கடும்பெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அணுகியிருக்கும் அரசன் எனப்படும் ஆறினாலும் நாட்டுக்கு வருங்கேடு.
ஈநம் - குறைவு, இகழ்ச்சி.
ஈப்பு - ஈதல்.
ஈமம் - சுடுகாடு, பிணஞ்சுடும் விறகு.
ஈர்க்கு - அம்பினிறகு.
ஈர்த்தல் - இழுத்தல், உரித்தல்.
ஈர்தல் - அரிதல், அறுத்தல்.
* ஈர்ப்பு - இழுத்தல். (இரா)
ஈரங்கொல்லியர் - வண்ணார்.
ஈரம் - அன்பு, குளிர்.
ஈருள் - ஈரல்.
* ஈவு — இடைவெளி, (இரா) கொடை.
ஈழம் - பொன், சிங்களதேசம்.
ஈற்று - ஈனுதல். (புறநா)
ஈறு - முடிவு.
ஈன் - இவ்விடம். (தணி)
ஈனோர் - இவ்வுலகத்தார். (சிங்)

உ

உ - சிவன், ஆச்சரியம்.
உக்கம் - ஆலவட்டம், எருது, மருங்கு, பொன்.
உக்காரி - ஒருசிற்றுண்டி.
உக்கிரம் - கடுமை, கோபம்.
உக்கிரன் - வீரபத்திரன்.
உகத்தல் - உயர்தல், விரும்பல்.
உகப்பு - உயர்வு, விருப்பு.
உகம் - யுகம், பூமி.
உகல் - உகுதல். (திருக்கோ)
உகவை - விருப்பு. (இரா)
உகளம் - இரண்டு. (கந்)
உகளுதல் - பாய்தல், குதித்தல்.
உகிர் - நகம்.
உகுத்தல் - உதிர்த்தல், சொரிதல்.
உகுதல் - உதிர்தல், அழிதல்.
உகைத்தல் - செலுத்தல், எழுப்பல்.
உகைதல் - செல்லல், எழுதல்.
உங்காரம் - உம்மென்றுரப்பல்.
உங்ஙனம்—உவ்விடம், உத்தன்மை
உச்சம் - உயர்ச்சி, வல்லிசை.
உச்சயினி - அவந்திநகரம்.
உச்சாரணம் - உச்சரித்தல்.
உச்சி - தலை, நாய், தலையின்மேல்.
* உச்சிகிழான் — சூரியன். (சில)
உச்சிட்டம் - எச்சில்.
உச்சுவாசம் - சுவாசத்தையுள்ளிழுத்தல்.
உச்சைச்சிரவம் — இந்திரன்குதிரை.
உசனன் - சுக்கிரன்.
உசா - ஆராய்வு, வினா.
உசாக்கையர் - ஆராய்வு செய்வோர்.
உசாவுதல் - ஆராய்தல், வினவுதல்.
உசிதம் - உத்தமம்.

உசு - உளு எனப்படும் புழு.
உஞ்சல் - ஊஞ்சல்.
உஞ்சவிருத்தி - உதிர்ந்ததானிய ங்கொண்டு சீவித்தல். (காஞ்)
உஞ்சை - அவந்திநகர்.
உஞற்றுதல் - செய்தல், முயலல்.
உட்கு - அச்சம், நாணம்.
உட்குதல் - அஞ்சுதல், நாணுதல்.
உட்கொள்ளுதல் - உண்ணல், ம னத்தில்வைத்தல்.
உட்கோள் - கருத்து. (வள்)
உட்டிணீடம் - தலைப்பாகை.
உடங்கு - உடன், ஒருங்கு. (தணி)
உடசம் - பன்னசாலை, வெட் பாலை.
உடம்பிடி - வேலாயுதம்.
உடம்பொடுபுணர்த்தல் - சொல் லப்படுஞ் சொற்களிலே விசே டணவலியால் உள்ளுறையாக வேறும் ஒருபொருள் தோன்ற வைத்தல்.
உடல் - உடம்பு, பொன்.
உடலல் - பொருதல், சினத்தல், வருத்தல். (பார)
உடற்றல் - சீறுதல், வருத்தல், பொருதல்.
உடு - அம்பு, அம்புத்தலை, விண் மீன், மரக்கலமியக்குங்கோல், அகழி.
உடுக்கை - சீலை, உடுத்தல்.
உடுபதி - சந்திரன்.
உடும்பு - ஒருசெந்து.
உடை - சீலை, குடைவேல், சூரி யன் மனைவிகளுள் ஒருத்தி.
உடைகுளம் - பூராடம்.
உடைதல் - தளர்தல், தோல்வி, தகர்தல், அழிதல்.
உண்டாட்டு—மகளிர்விளையாட்டு, கள்ளுண்டு களித்து விளையா டல்.
உண்டை-படைவகுப்பு, திரட்சி.
உணக்குதல் - உலர்த்தல்.
உணங்கல் - உலர்தல், உலர்ந்தது.
உணர்த்தல் - அறிவித்தல், ஊட லைநீக்கல், துயிலெழுப்பல்.
உணர்தல் - அறிதல், ஊடறீர்தல்.
உணர்ப்பு - ஊடறீர்த்தல்.
உத்தமம் - மேன்மை, உயர்ச்சி.
உத்தமர்ணன் - கடன்கொடுத்த வன்.
உத்தமாங்கம் - தலை.
உத்தமி - உத்தமஸ்திரி.
உத்தரக்கிரியை - அந்தியேட்டி முதலிய அபரக்கிரியை.
உத்தரம் - வடக்கு, வடவாமுகா க்கினி, பின், பின்னையது, மறு மொழி.
உத்தரமீமாஞ்சை - வேதாந்தசூ த்திரம்.
உத்தரமீன் - அருந்ததி.
உத்தராசங்கம் - உத்தரீயச்சீலை.
உத்தராயணம்—தைமாதப்பிறப்பு
உத்தரி - குதிரை. (இரகு)
உத்தாநம்-அடுப்பு, வடவாக்கினி.
உத்தி - சொல்லல், புணர்ப்பு, பொருந்துமாறு, சீதேவி என ப்படுந் தலைக்கோலம், தேமல், பாம்பின்படப்பொறி.
உத்தியாநம் - சோலை.
உத்தியாபநம் - முடித்தல்.
உத்தியோகம் - முயற்சி.
உத்துங்கம் - உயர்ச்சி.
உத்தேசம் - பெயரளவிற்பொ ருள்கூறல்.

உதக்கு - வடக்குத்திசை.
உதகம் - நீர்.
உதடு - வாய்.
உதண் - மொட்டம்பு.
உததி - கடல்.
* உதந்தம் - சரித்திரம்.
உதரம் - வயிறு.
உதவகன் - நெருப்பு.
உதவுதல் - கொடுத்தல், துணைச் செய்தல்.
உதள் - ஆடு, மேடராசி.
உதாசனன் - அக்கினி, கண்குத்திப் பாம்பு.
உதாசீனம் - விருப்பு வெறுப்பின்மை.
உதாத்தம் - எடுத்தலொலி, பெருமை.
உதாரணம் - எடுத்துக்காட்டு.
உதாரம் - கொடை, மேன்மை.
உதி - உலைத்துருத்தி, கல்வி.
உதிட்டிரன் - தருமன்.
உதியன் - சேரன்.
உதிர்த்தல் - சொரிதல்.
உதிரம் - இரத்தம்
உதீசி - வடக்குத்திசை.
உதும்பரம் - அத்திமரம், செம்பு.
உந்தல் - யாழின்நரம்புகளைத்தெறித்தல், (கந்) செலுத்துதல், தள்ளுதல்.
உந்தி-கொப்பூழ்,யாறு, நீர்ச்சுழி, வயிறு, தேர்த்தட்டு, கடல்.
உந்திபூத்தோன் - விட்டுணு.
உந்துரு - எலி, பெருச்சாளி.
உந்நதம் - உயர்ச்சி.
உப்பளம் - உப்புவிளைநிலம்.
உப்பு—கடல், உவர்ப்பு, இனிமை, மகளிர்விளையாட்டு. (பிங்)
உப - அருகு, ஆரம்பம், அதிகம், நிந்தை, அலங்காரம் முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல்.(சப்)
உபக்கிரமணிகை - முகவுரை.
உபக்கிரமம் - ஆரம்பம், அணுகுதல்.
உபகரணம் - துணைக்காரணம்.
உபகாரம் - உதவி, கொடை.
உபகாரி - கொடையாளி.
உபசங்காரம் - முடித்தல், சுருக்கல்.
உபசர்க்கம் - அதி அபி முதலிய வடமொழியிடைச்சொல்.
உபசரித்தல் - வழிபாடுசெய்தல்.
உபசாரம்-தொண்டுசெய்தல்,முகமன்வார்த்தைகூறல்.
உபதானம் - தலையணை.
உபதேசம் - நற்புத்திகூறல், நன்மைகூறல்.
உபதை - பரீக்கை, காணிக்கை.
உபநயநம் - பூணுநூற்கிரியை.
* உபநிட்கிரமணம்-பெருந்தெரு.
* உபநிட்டாநம்-பெருந்தெருவிற் குழந்தையைக் கொண்டுபோதல். (கந்)
உபநிடதம் - வேதாந்தம்.
உபநிதி - அடைக்கலப்பொருள்.
உபநியாசம் - முகவுரை, சொல்லத்தொடங்கல், அணுகவைத்தல், ஆஞ்ஞை.
உபமாநம் - உவமை.
உபமிதி - உபமானவறிவு.
உபமேயம் - உபமிக்கப்படும்பொருள்.
உபயம் — இரண்டு.
உபராகம் - கிரகணம். (சேது)

உபரி - மேல்.
உபரிகை - மேல்வீடு.
உபலம் - கல்லு, இரத்தினக்கல்.
உபலாளநம் - சுத்திசெய்தல்.
உபவநம் - ஊர்சூழ்சோலை.
உபவாசம்-உணவின்றியிருத்தல்.
உபவீதம் - பூணுநூல்.
உபாங்கம்-துணைக்கருவி.(இரகு)
* உபாத்தியாயி } உபாத்தியாய
உபாத்தியாயாநி } ன்மனைவி.
உபாதி - இடையூறு, தடை.
உபாநகம் - பாதரட்சை.
உபாலம்பநம் - நிந்தை.
உபேந்திரன் - விட்டுணு.
* உபோற்காதம் - பாயிரம்.
உம்பர் — மேலுலகம், தேவர், மேல், உவ்விடம்.
உம்பல் - யானை, வலி, புத்திரன், குடி, எழுச்சி.
உம்மை—முற்பிறப்பு, வருபிறப்பு.
உமணர் - உப்புவிளைவிப்போர்.
உமாபதி - சிவன்.
உய்த்தல் - செலுத்தல், கொண்டு போதல், சேர்த்தல்.
உய்த்துணர்தல்-ஆராய்ந்தறிதல்.
உய்தல் - சீவித்தல்.
உய்தி — ஈடேறல்.
உயக்கம் - வருத்தம்.
உயங்குதல் - வருந்துதல்.
உயர்த்தல் - உயர்வாக்கல்.
உயர்திணை - உயர்ந்தசாதி.
உயர்ந்தோர் - அறிஞர், தேவர், மேலோர்.
உயர்நிலை - தேவலோகம்.
உயல் - ஒழிதல். (வள்)
உயவல் - வருத்தம், நினைவு.
உயவு - வருத்தம்.
உயவுதல் - வருந்துதல்.
* உயா - வருத்தம். (இரா)
உயவை - கான்யாறு, கருவிளை.
உயிர்த்தல் - மூச்சுவிடல், விடுதல், ஈனுதல், மோத்தல், ஒலித்தல்.
உயிர்நிலை - உடம்பு, உயிர்நிற்குமிடம்.
உயிர்ப்பு - காற்று, மணம், சுவாசம்.
உரகம் - பாம்பு, ஆயிலியநாள்.
உரங்கம் - பாம்பு. (பார)
உரம் - மார்பு, ஊக்கம், வலி, அறிவு, திடம்.
உரவு - அறிவு, வலி, பரத்தல்.
உரவோர் - அறிஞர், வலியர்.
உரற்றல் - ஒலித்தல்.
உராறுதல் - முழங்குதல்.
* உராவுதல் - பரத்தல். (சிந்)
உரிஞ்சல் - தேய்த்தல்.
உரிமை - மனைவி.
உரியோன் - கணவன்.
உரிவை - தோல்.
உரு - அச்சம், அட்டை, உடம்பு.
உருக்கம் - அன்பு.
* உருடை - பண்டி. (சேது)
உருத்தல்-முளைத்தல், கோபித்தல்
உருத்திரம் - பெருங்கோபம்.
உருத்திரை - உமாதேவி.
உருப்பம் - வெப்பம், கோபம்.
உருப்பு - வெப்பம், கோபம்.
உரும் - அச்சம், இடியேறு.
உருவம் - உடம்பு, அழகு, நிறம்.
* உருவரை - எல்லாம் விளையும் நன்னிலம். இது "உர்வரா" என்னும் வடமொழி.
உருவாரம் - வெள்ளரிக்கொடி.

உருவிலி - மன்மதன், உருவிலான்.
உருவுதல் - உறைகழித்தல், துளைத்தல்.
உருள் - சில்லு, உரோகிணிநாள்.
உருளரிசி - கொத்துமல்லி.
உரை - சொல், சொற்பொருள், புகழ்.
உரைத்தல் - தேய்த்தல், சொல்லுதல்.
உரையாடல் - சொல்லுதல்.
உரோதநம் - அழுதல்.
உல்கு - மரக்கலத்திலும் வண்டியிலும் வரும் பொருட்குக் கொடுக்கும் இறை.
உல்லாகன் - நோயுற்றெழுந்தவன்.
உல்லாசம் - உள்ளக்களிப்பு, அத்தவாளம்.
உல்லாபம் - எழுத்து நிரம்பாமொழி.
உல்லியர் - கிணறு குறிக்கும் நூலோர்.
உலகம் - உயர்ந்தவர், பூமி.
உலகமாதா - உமாதேவி.
* உலகியல் - உலகநடை. (வள்)
உலகு - உலகம், திக்கு, நாடு.
உலங்கு - கொசுகு, திரண்டகல்.
உலண்டு - பட்டுநூற்புழு.
உலத்தல் - சாதல், குறைதல்.
உலப்பு - முடிவு, (இரா) அழிவு, குறைவு.
உலம் - திரண்டகல்லு.
உலமரல் - துன்பம்.
உலவல் - குறைதல், உலாவல்.
உலவை - காற்று, தழை, கொம்பு.
உலறுதல் - காய்தல்.
உலா - பவனி.
உலாவுதல் - சஞ்சரித்தல்.
உலுப்பை - உணவுப்பொருள்.
உலூகம் - கூகைப்பறவை.
உலூகலம் - உரல். (பார)
உலூதை - எறும்பு.
உலைவு - அலைவு, வறுமை.
உலோகம் - சனம், உலகம், பொன்முதலிய தாது. (சப்த)
உலோகிதம் - சிவப்பு. (இரகு)
உலோசநம் - கண்.
உலோபம் - பேராசை, கெடுதல்.
உவ் - உவை, உவ்விடம்.
உவ்வி - தலை. உவ்வு-மேல். இ-ஒருவிகுதி.
உவகை - மகிழ்ச்சி.
உவச்சர் - சோனகர்.
உவட்டல் - அருவருத்தல், பெருகுதல்.
உவட்டு - அருவருப்பு, பெருக்கு.
உவண் - உவ்விடம்.
உவணம் - கருடன், கழுகு.
உவணி - வாட்படை.
உவணை - தேவலோகம். உவண்-மேல்.
உவதை - மலையருவி.
உவப்பு - மகிழ்வு, பொலிவு.
உவர் - உப்பு, உவர்ப்பு.
உவர்த்தல் - வெறுத்தல்.
உவரி - கடல், மகளிர்விளையாட்டு.
உவலை - தழை, (வெண்) பொய்.
உவளகம் - மதில், பள்ளம், நீர்நிலை, காவற்சாலை. (பிங்)
உவளித்தல் - சுத்திசெய்தல்.
உவா - யானை, இளைஞன், பூரணை, அமாவாசை.

உவித்தல் - அவித்தல். (புற)
உழக்கு - காற்படி.
உழத்தல் - செய்தல், பயிலல், வருந்தல், அநுபவித்தல்.
உழத்தி - மருதநிலப்பெண்.
உழப்பு - முயற்சி, வருத்தம்.
உழலல் - சுழலல், தடுமாறல்.
உழலை - உழலைகோத்தமரம், (தணி) கணையமரம். (வெண்)
உழவர் - உழுந்தொழிலாளர்.
* உழாஅல் - உழுதல். (தணி)
உழி - இடம்.
உழிஞ்சில் - வாகைமரம்.
உழிஞை - சிறுபூளை.
உழிதரல் - சுழலல்.
உழுதல் - உழக்கல். (சூடா)
உழுபடை - கலப்பை.
உழுவல் - இடைவிடா அன்பு.
உழுவை - புலி.
உழை - மான், பக்கம், இடம்.
உழையர் - பரிசாரகர், மந்திரி மார்.
உள் - உள்ளிடம், மனம்.
உள்குதல் - நினைத்தல். (இரா)
உள்ளம் - ஊக்கம், மனம்.
உள்ளல் - உள்ளான்பறவை, கருதல்.
உள்ளாளநம்—கூத்தின்விகற்பம்.
உள்ளீடு - உறுதியான உட்பாகம்.
உள்ளுறை - உள்ளிருக்கும் பொருள்.
உளகு - யாழிஞ்ருறுப்பு.
உளப்படுதல் - உட்படுதல்.
* உளமை - உண்மை. (வெண்)
உளர்த்தல்-அசைத்தல்,சுழற்றல்.
உளர்தல் - அசைதல், சுழலல், தடவல்.
உளவு - இரகசியம்.(தாயு)உள் + அ + வு
உளியம் - கரடி.
* உளுக்குதல் - சுருங்குதல்.
உளை - மயிர், ஓரிசை.
உளைத்தல் - வருத்தல், அழைத்தல், ஒலித்தல்.
உளைதல் - வருந்தல்.
உளைவு - வருத்தம்.
உற்கம் - எரிகொள்ளி, அனற்திரள். (புற)
உற்காதா - சாமவேதம்பாடுவோன்.
உற்காரம் - வாந்திசெய்தல்.
உற்குரோசம்-நீர்வாழும்பறவை.
உற்கை - விண்மீன், விண்வீழ்கொள்ளி.
உற்சவம் - திருவிழா, விருப்பம்.
உற்சாகம் - முயற்சி.
உற்பநநம் - பிறவி.
உற்பலம் - குவளை, செங்கழுநீர்.
உற்பவம் - பிறப்பு.
உற்பாதம் - நன்மை தீமைகளை வருமுன் அறிவிக்குங் குறி.
உற்பிச்சம் - மரம் கொடி முதலிய தாவரங்கள்.
உற்றறிதல் - ஆராய்ந்தறிதல்.
உறப்பு - நெருக்கம்.
உறத்தல் - நுணுகுதல், நெருங்குதல்.
உறவி - எறும்பு, ஊற்று, உறவு.
உறழ்தல் - மாறுபடுதல், இடையிடுதல், நிகர்த்தல், வீணையின் நரம்பை இடைவிட்டுத் தெறித்தல்.
உறழ்வு - மாறுபாடு, இடையீடு, ஒப்பு, செறிவு.

* உருவரை-முற்றூட்டு. (திருக்)
உறுக்கல் - அதட்டல். (இரா)
உறுகண் - அச்சம்,வறுமை,துன்பம்.
* உறுகோள் - நிகழ்ச்சி. (இரா)
உறுத்தல் - அழுத்துதல், (சிந்) சேர்த்தல், பொருத்துதல்,மிகுத்தல்.
உறுதல் - மிகுதல், சேர்தல், பொருந்தல்.
உறுதி - நன்மை,உறுவது,கல்வி, மேம்பாடு.
உறுப்படக்கி - ஆமை.
உறுப்பு - அவயவம், உடல்.
உறுவது - வரற்பாலது.
உறுவர் - முநிவர், மிக்கவர்.(சிந்)
உறை - துளி, மருந்து,போர்வை, வெண்கலம், இலக்கங்குறித்தற்கிடுங் குறி, வாழ்நாள், பொருள், உறைப்பு, நகரம், மழை.
உறைத்தல்-கார்த்தல், துளித்தல்,
உறைப்பு - கார்ப்பு, கொடுமை, மழை.
உறையுள் - வீடு, நகரம். (பிங்)
உன்மத்தம்-மயக்கம், ஊமத்தை.
உன்மத்தை - ஊமத்தை.
உன்னம் - மநம்,நீர்வாழ்பறவை.
உன்னல் - நினைத்தல்.
உன்னி - குதிரை, அழிஞ்சில்.

## ஊ

ஊ - இறைச்சி.
ஊக்கம் — உள்ளக்கிளர்ச்சி, வலிமை, உற்சாகம். (பிங்)
ஊக்கல் - மிகுதி, முயலல், செய்தல், ஆட்டுதல்.
ஊகம்-ஆராய்தல், கருங்குரங்கு, குரங்கு, நியாயம். (சப்த)
ஊங்கல் - ஊஞ்சலாடல்.
ஊங்கு - உவ்விடம், மிகுதி.
ஊசல்-அசைவு, (பொரு)உஞ்சல்.
ஊசி - எழுத்தாணி.
ஊசுதல் - சீவுதல். (கலி)
ஊஞ்சல் - உஞ்சல்.
ஊட்டி - பறவையுணவு,கழுத்து.
ஊட்டுதல் - உண்ணுதல், (இரா) உண்பித்தல்.
ஊடாடல் - பழகல். (இரா)
ஊடு - உள், நடு.
ஊடுதல் - பிணங்குதல், வெறுத்தல்.
ஊடுருவல் - துளைத்தல்.
ஊதம் - யானைத்திரள். (இரா)
ஊதிகை - முல்லைக்கொடி.
ஊதியம் - இலாபம், கல்வி.
ஊதை - காற்று, குளிர்காற்று.
ஊம் - ஊமை. (சில)
ஊமன் - ஊமை, கூகை.
ஊர்கோள் - பரிவேடம்.
* ஊர்ணம் - சிலம்பி. (திருவி)
ஊர்தஅவம் - மேல்.
ஊர்தல் - செலுத்தல், பரத்தல், மேற்படுதல்.
ஊர்தி - வாகநம்.
ஊர்மி - கடற்றிரை.
ஊரல் - கிளிஞ்சில், பரத்தல்.
ஊராண்மை - மிக்கசெயல்.
* ஊரி - குருவிச்சை. (கல்லா)
ஊரு - தொடை. (பார)
ஊருணி - ஊராருண்ணும்பொதுநீர். (திவா)
ஊழ் - பழமை, நியதி, பகை, முறை.

ஊழ்த்தல் - பதங்கெடல், மலர்தல், இறைச்சி, உதிர்த்தல்.
ஊழ்வினை - பழவினை.
ஊழல் - நரகம். (சூடா)
ஊழி - உகமுடிவு.
ஊழித்தீ - வடவாமுகாக்கினி.
ஊழியம் - முறை.
ஊற்றம் - இடையூறு, பற்றுக்கோடு, முயற்சி, வலி.
ஊற்றல் - உரோகணிநாள்.
ஊற்று - ஊறுதல்,பற்றுக்கோடு.
ஊறல்-ஊறுதல்,ஊறுநீர்.(திவா)
ஊறு - இடையூறு,குற்றம்,உறற்பாலது, கொலை, தீண்டல், தீமை.
ஊறுகோள் - கொலை.
ஊறுபாடு - தீங்கு, துன்பம்.
ஊன் - உடம்பு,உவ்விடம்,இறைச்சி.
* ஊன்கணார் - மாநுடர். (சிந்)
ஊன்றுதல் - அமுக்குதல், பதித்தல், அழுத்துதல்.
ஊனம் - பிணம், குறைவு.

## எ

எஃகம் - ஆயுதம், கூர்மை, வேற்படை, வாட்படை.
எஃகு - ஆயுதம், உருக்கு,கூர்மை, வேற்படை.
எக்கர் - மணற்குன்று, ஏறுதல்.
எக்கல் - குவித்தல், உயர்த்தல்.
எகின் - புளியமரம், அன்னப்பறவை.
எகினம் - அன்னப்பறவை, நாய், கவரிமா, புளிமா, புளியமரம்.
எங்ஙனம்-எத்தன்மை,எவ்விடம்
எச்சம் - குறை, யாகம், சந்ததி.
எச்சன் - அக்கினி, விட்டுணு.
எச்சில் - உச்சிட்டம், உண்டசேடம்.
எஞ்சுதல் - குறைதல், இறத்தல்.
எஞ்சாமை - குறைவுபடாமை.
எட்டர் - மங்கலபாடகர்.
எட்டுதல் - கிட்டுதல்,தூரமாதல்.
எடுத்தல் - எழுப்புதல், சுமத்தல்.
எடுத்துக்காட்டு - உதாரணம்.
எண்-எண்ணம், கணிதம், எள்ளு, தர்க்கம், சோதிடம்.
எண்கணன் - பிரமன்.
எண்காற்புள் - சரபப்பறவை.
எண்கு - கரடி.
எண்குணன் - அருகன், சிவன்.
எண்சிறப்புள்ளோன் - அருகன்.
எண்டோளன் - சிவன்.
எண்டோளி - காளி, துர்க்கை.
எண்ணம் - சூழ்ச்சி, கருத்து, நினைவு.
எண்ணர் - அமைச்சர், கணிதர்.
எண்ணலார் - பகைவர்.
எண்மை - எளிமை.
எதிர் - மாறு, ஒப்பு, முன்னிலை.
எதிர்கோள் - எதிர்கொள்ளல்.
எதுகுலம் - யதுகுலம்.
எந்திரம் - யந்திரம், தேர், தேர்ச்சில்லு, ஆலை.
* எம்பி - தம்பி. (வாதவூ)
எம்மை - எப்பிறப்பு.
எமன் - இயமன்.
* எமி - தமியனல்லாதவன்.
எய் - முட்பன்றி.
எய்த்தல் - அறிதல், இளைத்தல், வருந்தல்.
எய்துதல் - அடைதல்.

எய்ப்பில்வைப்பு-ஆபத்திலுதவும் பொருள். (தாயு)வைப்பு-நிதி.
எய்ப்பு - இளைப்பு.
எய்யாமை - அறியாமை, வருந்தாமை.
எயில் - மதில், நகரம்.
எயிற்றி - பாலைநிலப்பெண்.
எயிறு - பல்லு, மிருகக் கொம்பு.
எயினன் - வேடன்.
எரி - நெருப்பு, கேட்டை.
எரிகரும்பு - விறகு.
எரிகாசு - காசுக்கட்டி.
எரிமணி - மாணிக்கமணி.
எருக்கல் - வருத்தல், (கலி.) அடித்தல், அழித்தல்.
எருத்தம் - கழுத்து, பிடர்.
எருந்து - கிளிஞ்சில்.
எருவை-இரத்தம்,கழுகு, செம்பு, பருந்து.
எல் - ஒளி, சூரியன், பகல், இகழ்ச்சி
எல்லரி - கைம்மணி.
எல்லி - இரவு.
எல்லை - அளவு, இடம், சூரியன், முடிவு.
எலு - கரடி,
எலுவன் - தோழன்.
எலுவை - தோழி.
எவ் - எவை.
எவ்வம் - இளிவு, குற்றம், வருத்தம், வெறுப்பு.
எழாஅல் - யாழ், யாழினொலி, எழுச்சி.
எழில் - அழகு,எழுச்சி,பெருமை, வலி.
எழிலி - மேகம். எழில்+இ.
எழினி - திரைச்சீலை,ஒருவள்ளல்.
எழு - தூண், வளைதடி.
எழுதல் - எழுதுதல், எழும்புதல், உயர்தல்.
எழுத்து - கணக்கு, கல்வி.
எழுதாக்கேள்வி - வேதம்.
எழுநா - அக்கினி.
* எழுநிலைமாடம்-மேலேமேலே எழு நிலத்தளமுடைய வீடு. நிலை - நிலம்.
எழுமை - உயர்ச்சி, எழுபிறப்பு.
எழுவாய் - தொடக்கம், முதல்.
எழுவுதல் - எழுப்புதல்.
எள்குதல் - இகழ்தல், அஞ்சுதல்.
எள்ளல் - இகழ்தல், நிந்தை.
எளித்தல் - எளிமையாக்கல்.
எளிமை - தரித்திரம்,தாழ்வு,வலியின்மை.
எற்பாடு - காலை. எல் - சூரியன். பாடு - தோன்றுதல்.
எற்றல் - எற்றுதல்.
எற்றுதல் - அடித்தல், குத்துதல், எறிதல்,துணித்தல்,கொல்லல்.
எறித்தல் - உறைத்தல், (புற) பாத்தல், ஒளிவிடல்.
எறிதல் - எற்றல், அடித்தல், வீசுதல், முறித்தல்.
எறும்பி - யானை.
எறுழ் - தண்டு, வலி.
எறுழி - பன்றி.
என்பு - எலும்பு.
என்று - எந்நாள், சூரியன்.
என்றூழ் - கோடை, வெய்யில், சூரியன்.
என்னும் - சிறிதும். (சிந்)

ஏ

ஏ - அம்பு, உயர்ச்சி.
ஏக்கழுத்தம் - இறுமாப்பு.

ஏக்கறுதல் - தாழ்தல். (வள்) ஏக்கு+அறுதல்.
* ஏக்கு - உயர்ச்சி. (சிங்)
ஏகதந்தன் - விநாயகன்.
ஏகதேசம்-ஒருசார்,சிறுபான்மை
ஏகபிங்கலன் - குபேரன்.
ஏகம் - தனிமை, ஒன்று.
ஏகவேணி - மூதேவி.
ஏகாசம் - உத்தரீயம்.
ஏகாதசம் - பதினொன்று. (இரா)
ஏகாந்தம் - தனியிடம், தனிமை.
ஏகாலி - வண்ணான்.
ஏகுதல் - போதல்.
ஏகை - உமாதேவி. (புலி)
ஏங்கல் - மயிற்குரல், ஏங்குதல்.
ஏங்குதல் - ஒலித்தல், அழுதல், திகைத்தல், இரங்குதல்.
ஏசறவு - துக்கம்,நாணம்.(பெரி)
ஏட்டை-விருப்பு,தளர்வு,வறுமை
ஏடகம் - பட்டு, ஒருசிவஸ்தலம்.
ஏடன் - செவிடன், தோழன்.
ஏடு - பூவிதழ், பனையோலை.
ஏண்-பெருமை,வலி, நிலை.(திவா)
ஏணம் - மான். (சேந்)
ஏணி - மான், எல்லை, உலகம்.
ஏத்துதல் - உயர்த்தல், துதித்தல்.
ஏதம் - குற்றம், கேடு, துன்பம்.
ஏதி - ஆயுதம், வாள். (கந்)
ஏதிலார் - அயலார், வறிஞர்.
ஏது - காரணம், குற்றம். (கந்)
ஏதும் - சிறிதும். (கந்)
ஏந்தல் - பெருமை, உயர்ச்சி, அரசன், (பிங்) மேடு, ஏந்துதல்.
ஏம்பல் - களிப்பு, வருத்தம்.
ஏமந்தாசலம் - இமயமலை. (பிங்)
ஏமம் - மகிழ்ச்சி, மயக்கம், காவல், பொன், விபூதி, களிப்பு.
* ஏமரல் - மயங்குதல். (வள்)
ஏமாப்பு - களிப்பு, மயக்கம்.
ஏமுறல் - மயங்குதல், மகிழ்வுறல்.
ஏய்த்தல் - ஒத்தல், வஞ்சித்தல்.
ஏய்தல் - ஒத்தல், பொருந்தல்.
ஏயெனல்-ஒருவிரைவுக்குறிப்பு.
ஏர் - அழகு, உழவு, எழுச்சி.
ஏர்பு - எழுச்சி. (சூடா)
ஏரண்டம் - ஆமணக்கு, சித்திரம்.
ஏரம்பன் - விநாயகன்.
ஏரல் - கிளிஞ்சில்.
ஏரி - பெரியநீர்நிலை. (விநாய)
ஏரின்வாழ்நர் - வேளாளர்.
ஏல்வை - காலம், நீர்நிலை, நாள்.
ஏலம் - ஏலமரம், மயிர்ச்சாந்து.
ஏலுதல் - இயலுதல், பொருந்துதல்.
ஏவம் - இகழ்ச்சி, குற்றம்.(இரா)
ஏவு - அம்பு. (பார)
ஏவுதல் - ஆஞ்ஞைசெய்தல், சொல்லுதல். (இரா)
ஏழ்பரியோன் - சூரியன்.
* ஏழ்பொழில் - ஏழுதீவு.(இரா)
ஏழகம் - ஆடு, செம்மறிக்கடா.
* ஏழிலைப்பாலை-ஒருவகைப்பாலைமரம்.
ஏழை - அறிவிலான், வறிஞன், பெண்.
ஏழைமை - அறியாமை. (இரா)
ஏளனம் - இகழ்ச்சிச்சொல்.
ஏற்றம் - புகழ், உயர்ச்சி,அதிகம்.
ஏற்றல் - கொள்ளுதல், யாசித்தல், அடுக்குதல், எதிர்தல்.
ஏற்றார் - பகைவர்.
* ஏற்றிழிவு-உயர்வுதாழ்வு.(விநா
ஏறங்கோள் - முல்லைப்பறை.

ஏறு - விலங்கிளுண், எருது, அச்சுவினிநாள், இடியேறு. (பிங்)
ஏறுகோள் - முல்லைப்பறை.
ஏனம் - பன்றி, ஓலைக்குடை.
ஏனல்-தினை, தினைப்புனம். (பிங்)
ஏனாதி - நாவிதன், படைத்தலைவன், அமைச்சன். (பிங்)

ஐ

ஐ - தலைவன், பிதா, சிலேட்டுமம், அழகு, வியப்பு.
ஐக்கியம் - ஒற்றுமை.
ஐங்கணைக்கிழவன் - மன்மதன்.
ஐங்கரன் - விநாயகன்.
ஐசுவரியம் - செல்வம், ஆண்மை.
ஐதிகம் - பரம்பரைக்கேள்வி.
ஐது - அற்பம், அழகியது, மெல்லிது.
ஐந்திரம் - இந்திரவியாகரணம்.
ஐந்திரி - இந்திரன்மகன், கிழக்கு.
ஐப்பசி - அச்சுவினிநாள்.
ஐம்படை - பஞ்சாயுதம். (இரா)
ஐம்பால் - பெண்மயிர்.
ஐம்மீன் - அத்தநாள்.
ஐம்முகன் - சிவன்.
ஐம்மை - தகட்டுவடிவம்.
ஐயங்கவீநம் - வெண்ணெய்.
ஐயம் - சந்தேகம், பிச்சை, இடுங்கலம்.
ஐயர் - வேதியர், முனிவர்.
ஐயவி - கடுகு. (கந்)
ஐயன் - அரசன், பிதா, கடவுள், தமயன், குரு, சாத்தன். (பிங்)
ஐயுறவு - சந்தேகித்தல். (இரா)
ஐயெனல் - விரைதல். (தணி)
ஐயை - உமாதேவி, துர்க்கை, காளி, தலைவி. (பிங்)
ஐராவணம் - அயிராவதயானை.
ஐவனம் - மலைநெல்லு. (இரா)
ஐவிரல் - அத்தநாள்.

ஒ

ஒஃகுதல் - குறைதல். (இரா)
ஒக்கல் - சுற்றம்.
ஒக்கலை - மருங்கின்பக்கம்.
ஒகரம் - மயில். (சூடா)
ஒசித்தல் - முறித்தல்.
ஒசிதல் - முறிதல், துவளல்.
ஒட்டம் - உடம்பாடு, பந்தயப்பொருள். (பார)
ஒட்டலர் - பகைவர்.
ஒட்டு - படைவகுப்பு, மறைவு.
ஒட்டுதல் - உடன்படுதல், சாருதல், பந்தயமிடல்.
ஒட்பம் - அழகு, அறிவு, நன்மை.
* ஒடி - வலை.
ஒடிசில் - கவண்.
*ஒடியெறிதல்-வலைவீசல். (இரா)
ஒடிவு - கேடு, முரிவு.
ஒடுக்கம் - அடக்கம், பதுக்கம், சுருக்கம்.
ஒடுங்கல் - ஒதுங்கல், கூம்புதல், அடங்குதல், முடிதல்.
ஒண்மை - அழகு, அறிவு, ஒளி, நன்மை, மேன்மை. (பிங்)
ஒத்தல் - சமமாதல், இசைதல்.
ஒத்தறுத்தல் - தாளம்போடல்.
ஒதுக்கம் - மறைவு, நடை.
ஒதுங்கல் - நடத்தல், விலகுதல்.
ஒப்பல் - உடன்படல். (கந்தபு)
ஒப்பனை - அலங்காரம், உவமை.
* ஒப்பித்தல் - அலங்கரித்தல்.
ஒப்பு-அழகு, உவமை, உடன்பாடு.
ஒப்புரவு - உபகாரம், சமம்.
* ஒய்தல் - செலுத்துதல். (இரா)
ஒய்யெனல் - விரைதல். (சிங்)

ஒராஅல் - ஒருவுதல். (வள்)
ஒரு - செம்மறியாடு. (பிங்)
ஒருக்கல் - அழித்தல், (இரா) ஒற்றுமையாக்கல்.
ஒருங்கல்-ஒருவழிப்படல்,கெடல்
ஒருசிறை-ஒதுக்கிடம்,ஒருபக்கம்.
ஒருத்தல் - யானை, சிலவிலங்கிணாண்.
ஒருதலை - நிச்சயம், ஓரிடம்.
ஒருப்படுதல் - துணிதல். (சிங்) உடன்பாடு.
ஒருப்பாடு - துணிவு, சம்மதம்.
ஒருமை - ஒருபிறப்பு, ஒற்றுமை.
ஒருவந்தம் - நிச்சயம்,தனியிடம்.
ஒருவுதல் - நீங்குதல், விடுதல்.
ஒரூஉ - ஒருவுதல்.
ஒல்குதல்-ஒதுங்குதல், குழைதல், சுருங்குதல், தளருதல்.
* ஒல்லாங்கு - பொருந்துமாறு.
ஒல்லாமை - இகழ்ச்சி, வெறுப்பு.
ஒல்லார் - பகைவர்.
ஒல்லுநர் - மித்திரர்.
ஒல்லை - விரைவு, பழமை. (கங்)
ஒலி - இடி, காற்று,சத்தம்.(பிங்)
ஒலித்தல் - தழைத்தல், ஆடைமாசகற்றுதல்.
ஒலியல் - சீலை, மாலை, தெரு, தோல், யாறு. (பிங்)
ஒழிதல்-அழிதல்,தவிர்தல்,நீங்கல்
ஒழிபு - எஞ்சியது.
ஒழுக்கம் - உயர்வு, ஒழுகுதல், நெறி, மேன்மை.
ஒழுகல்-நடத்தல்,நீளுதல்,உயர்வு
ஒழுகை - வண்டி. (சிறுபா)
ஒளி - சூரியன், சந்திரன், நெருப்பு, புகழ், விளக்கு, மறைவிடம், பிரபை.
ஒளித்தல் - மறைதல்,மறைத்தல்.
ஒளியிருத்தல் - மறைவிடத்திருத்தல். (இர)
ஒளிவட்டம் - கண்ணாடி,சக்கரம்.
ஒளிறுதல் - விளங்குதல்.
ஒற்கம்-தளர்வு,வறுமை. (சேது)
ஒற்றன்-தூதுவன்,ஆராய்வோன்
ஒற்றுதல் - ஆராய்தல்,தீண்டுதல், தடைத்தல், சேர்த்தல்.
ஒற்று-தூதன்,உளவுபார்ப்பவன்.
ஒறுத்தல் - வருத்தல்,வெறுத்தல், கடிதல்.
ஒன்றுதல் - நெருங்குதல், பொருந்தல்.
ஒன்னலர் - பகைவர். (கங்)
ஒன்னார் - பகைவர். (வள்)

## ஓ

ஓ - நீக்கம், மதகடைக்குங்கதவு.
ஓக்கம் - உயர்ச்சி, பெருக்கம்.
* ஓக்குதல் - ஓச்சுதல். (சில)
ஓகை - உவகை. (கங்)
ஓங்கல் - உயர்வு, எழுச்சி, மலை, மூங்கில், மேடு, தலைவன், வலியோன். (பிங்)
ஓங்காரம் - பிரணவம். (பார)
ஓங்குதல் - உயர்தல், வளர்தல்.
ஓச்சுதல் - செலுத்தல், உயர்த்துதல், வீசுதல், ஓட்டுதல்.
ஓசம் - ஒளி, வலி,சாமர்த்தியம்.
ஓசன் - உபாத்தியாயன்.
ஓசனித்தல் - பறவைசிறகடித்தல்.
ஓசனை - நான்குகாதம்.
ஓட்டம் - ஓடுதல்,உதடு,தோல்வி.
ஓடதி - மருத்துப்பூண்டு.(இரா)
ஓடம் - தோணி.
ஓடுதல்-கெடுதல், குலைதல்.(கலி)

ஓடை - நீர்நிலை, அகழி, மலைவழி, நெற்றிப்பட்டம். (பிங்)
ஓணம் - யாறு. (சேது)
ஓத்தி - ஓந்தி.
ஓத்து - வேதம், ஓதப்படுவது.
ஓத்துரைப்போர் - வேதம்படிப்பிப்பவர்.
ஓதா - இருக்குவேதஞானி.
ஓதநம் - சோறு, உண்டி.
ஓதம் - கடற்றிரை, வெள்ளம்.
ஓதி - மலை, பெண்மயிர், ஞானம், கல்வி.
ஓதிமம் - அன்னப்பறவை, மலை, கவரிமா.
ஓது - பூனை. (சப்த)
ஓதை - ஒலி, காற்று, மதில், மதிலுண்மேடை, எழுத்தொலி.
ஓப்புதல் - ஓட்டுதல், நீக்குதல்.
ஓம்படை - பாதுகாப்பு. (சிந்)
ஓம்புதல் - பாதுகாத்தல், பேணுதல்.
ஓமான் - ஓந்தி.
ஓய்தல் - உள்ளதனிற்குறைதல், தளர்தல், சோர்தல்.
ஓர்க்கோலை — கடல்படுதிரவியத்துள் ஒன்று; இதனை அம்பர் என்ப.
ஓர்குண்டலன் - பலராமன்.
ஓர்தல் - ஆராய்தல், நினைத்தல்.
* ஓர்மை - ஒற்றுமை. (சங்)
ஓரம் - பக்கம், பக்கபாதம்.
* ஓராங்கு-ஒருதன்மை. (ஞானு)
ஓரி - மயிர், ஆண்மயிர், நரி, ஆண்முசு, விலங்கின் படுக்கை.
ஓரை - இராசி, மகளிர்கூட்டம், மகளிர்விளையாட்டு. (பிங்)
ஓலம் - அடைக்கலம், (கந்) ஒலி, பாம்பு. (பிங்)
ஓலமிடல் - முறையிடல். (திருக்)
ஓலிடல்-அலறுதல், முழங்குதல்.
ஓலைதீட்டும்படை - எழுத்தாணி.
ஓவம் - சித்திரம். (பட்)
ஓவர் - பாணர், சித்திரகாரர், கம்மியர்.
ஓவாமை - நீங்காமை.
ஓவியம் - சித்திரம்.
ஓவியர் - சித்திரகாரர்.
ஓவுதல் - நீங்குதல், ஒழிதல்.
ஓளி - வரிசை, யானைப்பந்தி.

## ஔ

* ஔசித்தியம் - தகுதி.
ஔடதம் - மருந்து.
ஔதாரியம் - கொடைக்குணம்.
* ஔரசன் - தன்மகன். (ஏலா)
ஔவியம் - பொறாமை.
ஔவை - தாய்.

## க

* க - பிரமன், வாயு, உயிர், உடல்.
கஃசு - காற்பலம். (வள்)
* கஃறெனல் - கறுப்பாதல்.
ககபதி - கருடன். ககம்-பறவை.
ககம் - அம்பு, பறவை, வாயு.
ககனம் - ஆகாயம், காடு, சேனை.
* ககுத்து - எருத்துத்திமில், பிரதாநம்.
* ககுத்தன் - சூரியமரபிலுள்ள ஓரரசன்.
ககுபம் - திக்கு, மருதமரம். (சப்)
* ககேசன் - கருடன். (கந்த)
ககோளம் - ஆகாயமண்டலம்.
கங்கணம் - கைவளையல்.

கங்கபத்திரம்-அம்பு,பருந்திறகு.
கங்கம் - பருந்து, கழுகு, சீப்பு.
* கங்காசன் - முருகக்கடவுள், வீடுமன். (சப்)
கங்காதரன் - சிவன். (பிங்)
கங்காளம் - தசைநீங்கிய எலும்பு.
* கங்காளமாலி - சிவன். (சப்)
கங்கு - கரை, (பார) கருந்தினை, வரம்பருகு. (பிங்)
கங்குல் - இரா, இருள்.
கச்சபம் - ஆமை. (கந்த)
கச்சம்-அளவு, மரக்கால், யானைக்கழுத்திடுகயிறு, (பிங்) மரம், பக்கம். (சப்)
கச்சளம் - இருள், கருமை.
கச்சி - காஞ்சிபுரம்.
கச்சு - நூற்கயிறு, உத்தரீயம்.
கச்சூரம் - கழற்கொடி.
கச்சை - சீலைக்கயிறு, யானையின் வயிற்றிற் கட்டும் வடம், கவசம், தழும்பு, கயிறு. (சப்)
கச்சைக்கொடியோன் - கன்னன், (கச்சை - யானையின்வயிற்றிற் கட்டும் வடம்.
கச்சோதம் - மின்மினி. (கந்)
கசடர் - கீழ்மக்கள். கசடு - குற்றம்.
கசடு - குற்றம், அழுக்கு, ஐயம்.
கசம் - யானை, கட்டு, மயிர். (சப்)
கசாக்கிரம் - மயிர்நுனி.
கசிதல் - இரங்கல், நெகிழ்தல்.
கசிவு - இரக்கம், நெகிழ்வு, வருத்தம்.
கசை - குதிரைசெலுத்துங்கோல்.
கஞ்சகம் - கருவேம்பு. (பெரும்)
கஞ்சகாரர் - கன்னார். (சில)
கஞ்சம் - கைத்தாளம், வெண்கலம், தாமரை, ஒருவகையப்பம். (பிங்)
கஞ்சரீடம் - வலியான்குருவி.
கஞ்சன் - பிரமன், மூடவன்.
கஞ்சனம் - கரிக்குருவி, வலியான், கண்ணாடி.
கஞ்சனை - கண்ணாடி, சிறுபானை.
கஞ்சிகை - திரைச்சீலை, இராசவாகனம்.
கஞ்சுகம் - சட்டை, சீலை.
* கஞ்சுகன் - வைரவன். (பிங்)
கஞ்சுகி - காவலாளன், பாம்பு.
கஞ்சுளி - சட்டை.
கஞலல் - எழும்புதல், நெருங்கல், பொலிதல்.
கஞறல் - கஞலல்.
கட்கம் - வாட்படை. (சேது)
கட்சி - காடு, மனிதர் துயிலிடம்.
கட்செவி - பாம்பு. (பார)
* கட்டகம் - காந்தக்கல். (ஞானு)
* கட்டங்கம் - மழு. (திருவி)
* கட்டதரம் - கடுந்துயர். (சிவ)
கட்டம் - பீடை, பீடைகொடுப்பது.
கட்டல் - களவு, (சூடா) பிடுங்கல், பிணித்தல்.
கட்டழகு - பேரழகு. (கந்)
கட்டழித்தல் - முற்றுயழித்தல்.
கட்டளை - துலாம், நிறையறிகருவி, உரைகல், உவமை, முறை.
* கட்டாண்மை - பேராண்மை.
கட்டாரி - குற்றுவாள். (கந்தர)
கட்டி - திரளை, சர்க்கரை, கற்கண்டு.
கட்டியம் - புகழ்ச்சிவார்த்தை.
கட்டில் - சிங்காதனம். (சிங்)

* கட்டு - பொய், (இரா) பிணிப்பு, காவல், வரம்பு, கற்பித்தல்.
கட்டுரை - உறுதிவார்த்தை,பொருள்பொதிந்தவுரை. (சில)
* கட்டுவாங்கம் - மழு.
* கட்டுவை - கட்டில். (சிவத)
* கட்டேர் - பாசறை. (வெண்)
கட்டோசை - பேரொலி.
* கட்பு - களைதல். (மதுரை)
கடகம் - யானைத்திரள், சேனை, கங்கணம், மதில், வட்டம், கேடகம், வாகுவலயம், இராசதாநி.
கடப்பாடு-கொடை, செய்கடன்.
கடப்பு - கவரிறுக்கி. (பிங்)
கடம் - குடம், காடு, சரீரம், அருவழி, யானைமதம்,கயிறு,முறைமை, யானைக்கதுப்பு, சுடலை.
கடம்பன் - குமாரக்கடவுள்.
* கடமா - யானை. (இரா)
கடமான் - காட்டுப்பசு. (கந்)
கடமை - முறை, காட்டுப்பசு.
கடலர் - நெய்தனிலமாக்கள்.
* கடவம் - கடத்தற்பாலது.
கடவுதல் - செலுத்துதல், விஞவுதல்.
கடவுள் - தெய்வம், நன்மை.
கடவை - கடப்பு, ஏணி, குற்றம்.
கடற்குட்டம் - கடற்கிடங்கு.
கடற்பிறந்தாள் - இலக்குமி.
கடற்பிண - நெய்தனிலப்பெண்.
கடறு - காடு. (மதுரை)
கடா - விஞ, எருமையாண்.
கடாகம் - ஒருவகைப்பாத்திரம்.
கடாட்சம் - கடைக்கண்.
கடாம் - யானைமதம். (புற)
* கடாமலை - யானை. (இரகு)
கடாவுதல் - விஞவுதல், செலுத்தல்.
கடி - விரைவு, கூர்மை, புதுமை, காவல், நீக்கம், சிறப்பு, விவாகம், விளக்கம்,மிகுதி,வாசனை, பேய், அச்சம், ஐயம், அதிசயம்.
கடிகை - நாழிகை, துண்டு, தாழ்.
கடிகைமாக்கள் - அரசனுக்கு நாழிகையறிவிப்போர்.
கடிகையர்-மங்கலபாடகர்.(சிந்)
கடிஞை - ஏற்குமட்கலம்.(மணி)
கடிதடம் - நிதம்பம்.
கடிதல் - தண்டித்தல், நீக்குதல், விலக்குதல்.
கடிந்தோர் - முனிவர்.
கடிப்பகை - கடுகு. (மணி)
கடிப்பம் - ஆபரணச்செப்பு, காதணி, கெண்டி.
கடிப்பிணை - குதம்பை என்னுங் காதணி. (சிலப்)
கடிப்பு - குறுந்தடி, குதம்பை.
கடிவை - யானை. (பிங்)
கடினம் - கொடுமை. (பிங்)
கடு - கடுமரம், நஞ்சு, உறைப்பு, முள்.
கடுக்கை - கொன்றை.
கடுகம் - சுக்கு, திப்பலி, மிளகு.
கடுங்கண் - கொடுமை. (இரா)
* கடுங்கதிர் - சூரியன். (சில)
கடுத்தல் - கோபித்தல், ஒத்தல், ஐயங் கொள்ளல். (சில)
கடுத்தலை - வாள். (இரகு)
கடும்பு - சுற்றம். (வெண்)
* கடுவளி - பெருங்காற்று.
கடுவாய்-ஒருவகைப்புலி.(இரகு)

கடை - இடம், வாயில், அங்காடி, முடிவு. (பிங்)
கடைக்கணித்தல் - கடைக்கண்ணுற் பார்த்தல்.
* கடைக்கோள் - முடிவு. (சில)
கடைக்குளம் - உத்தராடம்.
* கடைக்கூட்டல் - முடிவாக்கல்.
கடைச்சி - மருதநிலப்பெண்.
கடைஞர் - மருதநிலமாக்கள்.
கடைநாள் - இரேவதி.
கடைப்பிடி - தேற்றம், மறவாக்கடன். (திவா)
கடைமணி - பூண். (திரிகடு)
கடைமீன் - இரேவதிநாள். (பிங்)
கடையம் - இந்திராணிகூத்து.
கடையனல் - ஊழித்தீ. (பிங்)
கடையுவா - அமாவாசி. (இரா)
கடையெழுஞ்சனி - உத்தராடம்.
கண் - இடம், கணு, மூங்கில், கண்ணோட்டம், துவாரம்.
கண்கூடு - எதிரேகாண்டல்.
கண்டகம் - காடு, முள்ளு, முள்ளி, வாள்.
கண்டகர் - கீழோர், (இரா) அசுரர். (பிங்)
* கண்டகி - இலந்தை, (சிவத) ஒருவகை மூங்கில். (சப்த.)
கண்டபேரண்டம் - இருதலைப்பறவை. (சீகா)
கண்டம் - கழுத்து, கவசம். கைவாள், காடு, திரைச்சீலை, சருக்கரை, நாடு, துண்டம், எழுத்தாணி.
கண்டல் - தாழை, நீர்முள்ளி.
கண்டன் - கணவன். (சூடா)
* கண்டி - கழுத்துடையவன்.
கண்டிகை - உருத்திராக்கம், பதக்கம்.
கண்டித்தல் - வெட்டுதல், கடிந்துகூறல்.
கண்டில்வெண்ணெய் - இலவங்கம்பச்சிலை முதலிய முப்பத்திரண்டு ஓமாலிகைகளுள் ஒன்று
கண்டீர்வம் - சதுரக்கள்ளி.
கண்டீரவம் - சிங்கம்.
கண்டூதி - காஞ்சொறி; தினவு.
* கண்டூயை - சொறி. (சேது)
கண்டை - பெருமணி, யானைமணி.
* கண்ணடி - கண்ணாடி. (திருவி)
கண்ணல் - கருதல்; குறித்தல்.
கண்ணழித்தல் - பாட்டுக்களில் வரும் பதங்களின் பொருத்துகளைப்பிரித்தல். கண் - கணு.
கண்ணறை - அகலம்.
கண்ணாளர் - கம்மியர், சித்திரகாரர்.
கண்ணி - மாலை, பசுக்கட்டுங்கயிறு, வலை, போர்ப்பூ.
* கண்ணிலி - குருடன். (பார)
கண்ணுள் - கூத்து. (சூ)
கண்ணுளர் - நாடகர், கண்ணாளர்.
கண்ணுறல் - காண்டல். (வெண்)
கண்ணேணி - மூங்கிலேணி. கண் - மூங்கில்.
* கண்ணொடையாட்டியர் - கள்விற்போர். (சில)
கண்ணோட்டம் - பார்வை, உவகை.
கண்படை - நித்திரை, படுக்கை.
* கண்மணி - உருத்திராக்கம்.
கண்மை - கண்ணோட்டம். (இரா)
கண்வளர்தல் - நித்திரைசெய்தல்.
கணக்கன் - எழுத்தாளன், புதன்.
கணக்காயர் - ஓதுவிப்போர்.

கணக்கு - எழுத்து, எண், கருத்து.
கணப்பிரான் - விநாயகன்.
கணம் - அற்பம், நட்சத்திரம், திரட்சி, பிசாசம், வட்டம். (பிங்)
கணவம் - அரசமரம்.
கணவீரம் - அலரிமரம். (திருமு)
* கணுத்தியக்கர் - கணேசர்.
கணி - வேங்கைமரம், சோதிடம் வல்லவன். (வெண்)
* கணிகாரம் - கோங்கு. (கலி)
கணிச்சி - தோட்டி, மழு, தறிகை.
கணித்தல் - வரையறுத்தல், (சிந்) எண்ணுதல்.
கணிதம் - எண், சோதிடம்.
* கணிப்பு - கணித்தல். (சிந்)
கணை - அம்பு, திரட்சி, பூரநாள்.
கணையம் - யானைத்தூண், வளைதடி.
* கத்தணம் - சட்டை. (இரகு)
கத்திகை - மாலை, துகிற்கொடி.
கத்தியம் - வசனவடிவம். (சப்)
கதநம் - வேகம், நெருக்குதல், கடுப்பு.
கதம் - கோபம், (இரா) அடைந்தது, சென்றது, வேகம்.
கதம்பம் - கூட்டம், கடப்பமரம்.
கதலி - வாழை, விருதுக்கொடி, தேற்றுமரம், காற்றுடி.
கதலிகை - துகிற்கொடி. (கந்த)
* கதழ்தல் - மிகுதல். (சிந்)
கதழ்வு - கடுப்பு, மிகுதி.
* கதாரவம் - தண்டிஞெலி.
கதி - போதல், வழி, நிலை, அறிவு, உபாயம், அடைதல், வேகம், முத்தி.
கதித்தல் - சொல்லல், எழுச்சி, கதியடைதல்.
கதிர் - சூரியகிரணம். (பிங்)
கதிரம் - அம்பு, கருங்காலி.
கதிரவன்புதல்வி - யமுனை. (பிங்)
கதுப்பு - பெண்மயிர், கன்னம்.
* கதுமெனல் - விரைதல். (இரா)
கதுவாய் - வடுப்படல். (சூடா)
கதை - பொய்வார்த்தை, (இரா) சரித்திரம், தண்டாயுதம், சொல், காரணச்சொல்.
* கந்தசாரம் - பனிநீர். (இரகு)
கந்தம் - நாற்றம், கிழங்கு, கழுத்தடி, இந்திரியம், கருணைக்கிழங்கு, அணுத்திரள், பருத்தல்.
கந்தர்ப்பன் - மன்மதன்.
கந்தரம் - கழுத்து, மேகம், மலைமுழை.
கந்தருவம் - இசை, குதிரை, தலைவனுந்தலைவியுந்தாமே கூடும் விவாகம்.
கந்தவாகன் - காற்று.
கந்தவாரம் - அரசன்றேவிமனை.
கந்தழி - பரப்பிரமம். (தொல்)
கந்தளம் - சட்டை. (இரகு)
* கந்தாவகன் - காற்று. (பார)
கந்தி - கமுகு, பரிமளவஸ்து.
கந்தித்தல் - பரிமளித்தல்.
கந்து - உடம்பின் பொருத்து, தூண், பற்றுக்கோடு, பண்டியுள்ளிரும்பு. (பிங்)
கந்துகம் - குதிரை, பந்து.
கந்துள் - கரி.
* கநகன் - வியாழன். (கந்)
கநசாரம் - கர்ப்பூரம்.
* கநநம் - புதைத்தல், கிண்டல்.
கநிட்டன் - பின்பிறந்தோன்.
கப்பணம் - கைவேல், இரும்பாலாய நெருஞ்சின் முள்ளு.
கப்பம் - அரசர்கொடுக்கும் இறை.

* கப்பு - பிளவு. (இரா)
* கபர்த்தி - சிவன். (சப்)
கபாடம் - கதவு. (வாதவூ)
கபாலம் - தலையோடு, சமுகம்.
கபாலி - சிவன்,வைரவன்.(பிங்)
கபிஞ்சலம் - காடை. (பிங்)
கபித்தம் - விளாமரம்.
கபிலம் - புகர்நிறம், கரிக்குருவி.
கபிலை - பசு, தெய்வப்பசு.
கபோதகநியாயம் - புறப்பறவைகள் பிரிவின்றி ஒருங்கே ஓரிடத்திலே இறங்குதல்போல ஓரினப் பொருள்களெல்லாம் ஓரிடத்திற்போய்த் தங்குவதாகிய ஒருநெறி."கபோதக நியாயமே கடுப்ப" (பூவாளூ)
கபோதம்-பறவை, புறப்பறவை.
கபோலம் - கதுப்பு.
கம்-தலை,நீர்,வெண்மை,ஆகாயம்.
கம்பம் - நடுக்கம், தூண், விளக்குத்தண்டு.
* கம்பமா - யானை. (வெண்)
கம்பலம் - மேற்கட்டி,கம்பளம்.
கம்பலை - துன்பம், ஒலி,நடுக்கம், பயம்.
கம்பளர் - மருதநிலமாக்கள்.
* கம்பித்தல் - நடுங்கல்.(கம்பர)
கம்பிதம் - சஞ்சலம், நடுக்கம்.
கம்பீரம் - ஆழம், தாமரை.
கம்பு - தூண். (சிந்) சங்கு, மரக்கிளை.
கம்புள் - சம்பங்கோழி. (இரா)
* கம்மி - தொழில்செய்வோன்.
கம்மியர் - தொழிலாளர். (கந்)
* கமகன் - அரும் பொருளைச் செம்பொருணடையிற் காட்டிப்பாடுவோன். (தணிகை)
கமடம் - ஆமை, துறவோர்சலபாத்திரம்.
* கமண்டலு - கமண்டலம்.
கமநம் - போதல், கதி.
கமம் - நிறைவு. (இரா)
கமலம் - தாமரை, செம்பு, நீர்.
கமலயோநி - பிரமன்.
கமலாலயம் - திருவாரூர்.
கமலை - இலக்குமி, திருவாரூர்.
* கமழ்தல் - தோற்றுதல்.
கமித்தல் - போதல், (இரகு) பொறுத்தல்.
கமை - பொறுமை, பூமி.
* கமைத்தல் - பொறுத்தல்.
* கமைவு - பொறுமை. (இரா)
கயக்கம் - கலக்கம்,(சிந்)சோர்வு.
கயத்தி - கொடியபெண். (சிந்)
கயந்தலை - யானைக்கன்று, மனத்துயர்.
கயப்பு - கசப்பு. (இரா)
கயம் - குளம், ஆழம், யானை, பெருமை, நீர், தேய்வு, மென்மை, காசரோகம், நாசம், கீழ்மை.
கயமுனி - யானைக்கன்று. (பிங்)
* கயவர் - கீழோர். (நாலடி)
கயவாய் - எருமை, (பிங்) கரிக்குருவி, கழிமுகம், பெரியவாய்.
கயவு - மென்மை, பெருமை,கழிமுகம்.
* கயாசுரன் - கயமுகன்.
* கயாமயம் - கயரோகம்.
கயிரவம் - வெள்ளாம்பல்.
கயில் - ஆபரணக்கடைப்புணர்வு, பிடர்.
கயினி - அத்தநாள், கைம்மை.

கயை - ஒரு புண்ணியதலம்.
கர்க்கசம் - கடியது, கொடுமை.
கர்க்கடகம் - நண்டு.
கர்க்கரி - கரகம்,தயிர்கடைதாழி.
கர்ச்சூரம் - கழற்கொடி, பேரீந்து.
கர்த்தபம் - கழுதை.
கர்த்தரிகை - மயிரெறிகருவி.
* கரக்கம் - கபடம். (இரா)
* கரக்குன்று - யானை.
கரகம் - நீர்த்துளி, ஆலங்கட்டி, கமண்டலம், குடம், கெண்டி.
கரசம் - யானைக்கரணம், நகம்.
கரடம் - காகம், யானைமதம்பாய் சுவடு.
கரண்டகம் - பூங்கூடை.
கரண்டம் - கமண்டலம், (இரா) ஆபரணச்செப்பு, நீர்க்காகம்.
கரண்டை — முனிவர்வாசம், (சூடா) கமண்டலம். (மணி)
கரணம் - செயல், காரணம், இந்திரியம், உடம்பு, கணிதம், கூத்தின்விகற்பம்.
* கரப்பு - மறைவு. (சிந்)
கரபத்திரம் - ஈர்வாள். (இரா)
கரபம் - யானை. (கந்)
* கரபல்லவம் - விரல். (சப்)
கரம் - கை, கழுதை, கிரணம், குடிகள் கொடுக்கும் இறை, நஞ்சு, (பிங்) யானைக்கை, செயல். (சப்)
கரம்பு - பாழ்நிலம். (பிங்)
கரம்பை - பாழ்நிலம். (பெரும்)
கரமஞ்சரி - நாயுருவி. (பிங்)
கரவாளம் - வாள்.
கரவீரம் - அலரி, மயாநம்.(சப்)
கரளம் - நஞ்சு, பாம்பினஞ்சு.
கரா - முதலை.
* கராசலம் - யானை. (திருவி)
* கராளம் - தீமை. (சிவத)
கரி - மரவயிரம், (திவா) யானை, சாட்சி. (இரா)
* கரிசனம் - யானைக்கொம்பு.
கரிசு - குற்றம். (தணி)
கரிணி - யானை, பெண்யானை.
கரிமா - ஒரு சித்தி; அதுபாரமாதல்.
கரியவன் - இந்திரன். (இரா)
கரில்-குற்றம்,கார்ப்பு,கொடுமை
கரீரம் - அகத்தி, யானைப்பல்லினடி, குடம். (பிங்)
* கருங்கை - கொலைத்தொழில், வன்றொழில்,பயின்றதொழில்.
கருங்கொல் - இரும்பு.
* கருஞ்சனம் - முருங்கை.(பிங்)
* கருணம் - காது. (சூளா)
* கருணன் - கன்னன். (பார)
* கருணாலயன் - சிவன். (பிங்)
கருணை - தயவு, பொரிக்கறி.
கருத்து - கருதப்பட்டது.
கருதல் - குறித்தல், நினைத்தல்.
கருந்தாது - இரும்பு. (சேது)
கருநெறி - நெருப்பு. (சூடா)
கருப்பாசயம் - கருத்தங்குமிடம்.
* கருப்பு - பஞ்சம். (சேதுபு)
கருப்பை - காரெலி, எலி. (விநா)
கரும்பிள்ளை - காகம். (சிந்)
கரும்புள் - காகம், வண்டு.
* கரும்புறம் - பனை. (பிங்)
கரும்பொன் - இரும்பு.
* கருமகன் - கொல்லன்.
கருமம் - வெம்மை, (பிங்) செயல்.
* கருமர் - கொல்லர்.

கருமா - பன்றி. (சேது)
கருமுகை - சிறுசெண்பகம்.
கருமை - வலிமை, பெருமை, கொடுமை.
கருவடம் - மலையும்யாறுஞ் சூழ்ந்தவூர்.
கருவரி - இருள். (சேது)
கருவி - கைத்தாளம், (சிந்) துணைக்காரணம், சட்டை, யாழ், ஆயுதம், தொகுதி, மேகம்.
கருவிளை - காக்கணஞ்செடி.
கருவுயிர்த்தல் - ஈனுதல். (தணி)
கருவூலம் - திரவியசாலை.
கருள் - மயக்கம். (சேது)
* கருளன் - கருடன். (இரா)
கரேணு - யானை, பெண்யானை.
கரைதல் - அழுதல், அழைத்தல், சொல்லல்.
கரோடி - தலையோடு, முடிமாலை.
கரோருகம் - நகம். (சப்த)
கல்லகம் - மலை. (திவா)
கல்லணை - குதிரைமெற்றவிசு.
கல்லல் - தோண்டுதல். (இரா)
கல்லாரம் - செங்கழுநீர், நீர்க்குளிரி.
கல்லூரி - கல்விபயிலிடம்.
கல்லை - இலைக்கலம். (சீகா)
கல்லோலம் - நீர்த்திரை, மகிழ்ச்சி.
கலக்கம் - துன்பம், அழுகை, ஒலி.
கலகம் - யுத்தம், மாறுபாடு, பேரொலி.
* கலங்கரைவிளக்கம் - மரக்கலங்களை இடங்காட்டி அழைக்கும் விளக்கு. (சில)
கலசப்பானை - சிறுபானை.
கலதி - மூதேவி, (கந்) தீவினை.
கலந்தருநர் - பணித்தட்டார்.
கலப்பை - கலம் வைத்திருக்கும் பை, (மலை) உழுபடை.
கலம் - பாத்திரம், யாழ், ஆபரணம்.
* கலவம் - மயிலின் தோகை.
கலவர் - பரதவர், படைவீரர்.
கலவல் - கலத்தல்.
கலவி - புணர்ச்சி.
* கலவிருக்கை - பண்டசாலை.
கலன் - கீழ்மகன், கொடியவன்.
கலனை - கலப்பை. (பிங்)
கலாநிதி - சந்திரன். (விநா)
கலாபம் - மயிற்றோகை.
கலாம் - மாறுபாடு, (சிந்) வெகுளி, கொடுமை. (பிங்)
கலாய்த்தல் - கலகஞ்செய்தல்.
* கலாவல் - கூடுதல். (குறி)
கலி - எழுச்சி, வலி, ஒலி, கலியுகம், கலிப்பா, வறுமை, செருக்கு, கலகம்.
கலிகை - பூவரும்பு.
கலிங்கம் - ஊர்க்குருவி, சீலை, வானம்பாடி, வாகைமரம்.
* கலிங்கு - மதகு. (சிந்)
கலித்தல் - செருக்கிவளர்தல், (மலை) மகிழ்தல், (மது) ஒலித்தல், தழைத்தல், எழுதல்.
கலித்துருமம் - தான்றிமரம்.
கலியாணம் - மங்களம், விவாகம், பொன்.
கலினம் - கடிவாளம்.
கலினை - மிளகு.
கலுடம் - பாவம், கலங்கனீர்.
கலுவடம் - பூவரும்பு.
கலுழ்ச்சி - துக்கம். (ஞாறு)

கலுழி - முல்லைக்கான்யாறு, கலங்கனீர்.
கலுழ்தல் - அழுதல், கலங்குதல்.
கலை - சரீரம், (சில) மகரமீன், சீலை, மரக்கொம்பு, மான், ஆண்மான், கல்வி, மரவயிரம், சாமர்த்தியம், அவயவம், காலநுட்பம், சாஸ்திரம், மேகலை.
கலைமகள் - சரச்சுவதி.
* கலையறிபுலவன் - முருகக்கடவுள். (பிங்)
கலையாநத்தி - துர்க்கை.
கவ்வியம்-பசுப்பால்முதலியன.
* கவ்வியூதி - இரண்டுகுரோசம். (தணி)
கவ்வை - காரியம், துன்பம், ஒலி.
கவசம் - சட்டை, தோல்.
கவடு - கப்பு, பிரிவு. (பிங்)
கவந்தம்-தலைபோனவுடம்பு, நீர்.
கவயம் - காட்டுப்பசு. (சேது)
* கவரயில் - சூலம். (இரா)
* கவரெஃகம் - சூலம். (இரா)
கவலை - கவர்வழி, துயர், கம்பு.
கவவு - அகத்திடுதல், முயங்குதல்.
* கவவுதல் - விரும்புதல். (சிந்)
* கவளிகை - உறைச்சீலை.
கவற்சி - வருத்தம்.
* கவற்றல் - வருத்துதல்.
கவனம் - வேகம், விரைவு.
கவான் - தொடை. (சேது)
கவி - பாட்டு, புலவன், குரங்கு, வியாழன்.
கவிகை - குடை, கொடை, கவிதல்.
கவிஞர் - கலைவல்லோர், புலவர்.
கவித்தல் - மூடுதல் (சிந்)
கவிதை - பாட்டு, காவியம்.
கவிப்பு - குடை, மூடுகை.
கவிர் - முண்முருக்கு. (சேது)
கவின் - அழகு.
கவீரம் - அலரிச்செடி.
* கவுடி - பறையலகு. (இரா)
கவுள் - கதுப்பு, யானைக்கதுப்பு.
* கவேரகன்னி - காவேரி.
கவை-ஆயிலியம், மரக்கப்பு, காடு.
* கவைத்தல் - பிளவாதல்.
கவைத்தாள் - நண்டு. (சேது)
கழகம் - கல்விபயிலிடம்.
கழங்கு - கழற்கொடி, வெறியாட்டு.
கழல் - கால், செருப்பு, கழற்கொடி, ஆடவர் காலணி.
கழறல் - இடித்துரைத்தல், சொல்லுதல். (சேது)
கழனி - மருதநிலம், வயல்.
* கழாய் - மூங்கில். (சிந்)
கழாயர் - கழைக் கூத்தர்.
கழி - உப்பளம், மிகுதி, கோல்.
கழிதல்-சாதல், போதல், பிரிதல்.
கழியர் - நெய்தனில மாக்கள்.
கழிவு-உள்ளதின்மிகுதல், கழிதல்
கழுக்கடை - சிற்றீட்டி, சூலம்.
கழுது - பிசாசம், வண்டு, பரண்.
கழுந்து - தேய்வு. (கந்) பொருத்து, கழூத்து.
கழுமல் - மயக்கம். (பிங்)
கழுமலம் - சீகாழி. (கந்)
கழுமுதல் - நிறைதல், (சிந்) திரளுதல், மயங்கல்.
கழுமுள் - ஈட்டி, சூலம், மாதுளை.
* கழுவாய் - பிராயச்சித்தம், சுத்தி.

கழுவு - சூலம். (பிங்)
கழை - கரும்பு, மூங்கில், புநர்பூசம்.
கள் - பூந்தேன், மது, வண்டு, களவு.
கள்வன் - திருடன், முசு, கரியவன்.
களகண்டம் - குயில், அன்னம்.
களதம் - பெருச்சாளி.
களங்கன் - சந்திரன், குற்றமுள்ளவன்.
* களங்கு - குற்றம். (கந்)
களத்திரம் - மனைவி, நிதம்பம்.
களதௌதம் - வெள்ளி, பொன்.
களபம் - யானைக்கன்று, கலவைச்சாந்து.
களம் - கறுப்பு, கழுத்து, மனைவி, நஞ்சு, இடம், உருவம், நெற்களம்.
களமர் - மருதநிலமாக்கள், வேளாளர்.
களர் - சவர்நிலம், கறுப்பு.
களரவம் - புறாப்பறவை. (பிங்)
களரி - தொழில்செய்யுமிடம், (திவா) காடு, போர்க்களம்.
களவன் - நண்டு, கள்ளன்.
* களன் - மதுரம். (இரா)
களி - கஞ்சி, (சிந்) செருக்கு, மயக்கம், களிப்பு, களிப்புள்ளவன்.
* களிந்தை - காளிந்தி. (இரா)
களிப்பு - இன்பம், மயக்கம், செருக்கு.
களிறு - ஆண்யானை, அத்தநாள்.
களேவரம் - உடம்பு, பிணம்.
களைகண் - புகலிடம், பற்றுக்கோடு, (இரா) காப்பவன்.
கற்கி - குதிரை, விட்டுணுவவதாரத்தொன்று.
கற்சிறை - மதகு, (சிந்) கல்வரம்பு. (வெண்)
கற்படை - கோட்டையிற் சுரங்கவழி.
கற்பம் - தேவுலகம், பிரமன் வாழ்நாள்.
கற்பனை - புனைந்துரை, கட்டளை.
கற்பு - கல்வி, முல்லைக்கொடி.
கற்புழை - மலைக்குகை. (இரகு)
கற்று - கன்றை யுடையபசு.
கற்றை - மயிர்த்தொகுதி போல ஒன்றொடொன்று செறிந்திருக்குந் தொகுதி.
கறங்கு - கழற்சி, காற்றாடி, ஒலி.
கறங்குதல் - ஒலித்தல், சுழலல்.
* கறவை - கறக்கும்பசு. (இந்)
கறி - கடித்தல், (சிந்) மிளகு.
கறுத்தல் - கறுப்பாதல், கோபித்தல்.
கறுப்பு - கோபம், கறை.
கறை - குடியிறை, கறுப்பு, உரல், இரத்தம், குற்றம், நஞ்சு, நிறம்.
கறையடி - யானை. (சேது)
கன் - கல்லு, தராசுத்தட்டு.
* கன்மடம் - பாவம். (சப்த)
கன்மம் - செயல், செயப்படு பொருள்.
* கன்மிட்டன் - கன்மமுடையவன். (சப்)
* கன்மேய்வு - புறா. (பிங்)
கன்று - சிறுமை, கைவளையல்.
கன்றுதல் - அடிப்படுதல், (சிந்) கோபித்தல், நைதல், இரங்கல், நெருங்கல், மிகுதல்.
கன்னபூரம் - காதணி. (பார)

கன்னம் - கதுப்பு, காது, தராசு, சுவரகழுங் கருவி.
கன்னல் - கரும்பு, சர்க்கரை, நாழிகை, நாழிகைவட்டில், கரகம்.
கன்னி - பெண், அழிவின்மை, கற்றாழை, கருவிளை, மணம் புணராப்பெண்.
கன்னிகாரம் - கோங்கமரம்.
கன்னிகை - தாமரைப் பொகுட்டு, பெண், யானைக் கைந்நுதி.
கன்னிநாடு - பாண்டிநாடு.
கன்னுவர் - கன்னார்.
கனகம் - பொன், முண்முருக்கு.
கனம் - மேகம், நெருக்கம், திரட்சி, பாரம்.
கனருசி - மின்னல். (சூடா)
கனலி - சூரியன், நெருப்பு, பன்றி.
* கனலோன் - சூரியன். (பிங்)
கனவட்டம் - குதிரை, பாண்டியன் குதிரை.
கனவு - நித்திரை, கனா.
* கனவுதல் - கனாவிற்காணுதல்.
* கனி - செறிவு. (இரா)
கனிதல் - பழுத்தல், பெருங்கோபம்.
கனை - ஒலி, நெருக்கம், திரட்சி.
* கனைதல் - நெருங்குதல். (சிந்)
கனோபலம் - ஆலங்கட்டி.

## கா

கா - சரசுவதி, (காஞ்) சோலை, தோட்சுமை, நிறை, காத்தல்.
காக்கணம் - கருவிளை.
காகதுண்டம் - அகில். (இரா)
காகநதி - காவிரிப்பூம் பட்டினம். (பிங்)
காகப்புள் - அவிட்டநாள்.
* காகு - துயர் பயம் முதலிய வற்றால் உண்டாகும் விகாரத்தொனி. (சப்)
காகுத்தன் - ககுத்தன் வழித் தோன்றல், விட்டுணு, இராமன். (இரா.)
காகுளி - மந்தவிசை, பேய் போலக் கத்துதல், மெத்தை.
காகோதரம் - பாம்பு. (பூவா)
காகோளி - அசோகமரம். (பிங்)
காங்கேயம் - பொன். (இரகு)
காங்கேயன் - முருகக் கடவுள், வீட்டுமன்.
காசம் - பளிங்குமணி, நாணற் புல், இருமல், கண்ணில்வரும் நோய்.
காசறை - மயிர்ச்சாந்து. (கந்)
காசினி - பூமி. (இரகு)
காசு - குற்றம், இரத்தினம், மாதரணிவடம்.
காசை - காயா, நாணல், புற்பிடி.
காஞ்சனம் - சம்பகமரம், பொன்.
காஞ்சனி - மஞ்சள்.
காஞ்சி - காஞ்சிமரம், எண்கோவைமணி, ஓரிசை, காஞ்சிபுரம்.
காஞ்சிரை - எட்டிமரம். (பிங்)
காஞ்சுகம் - சட்டை.
* காஞ்சுகி - கவசந்தரித்தவன்.
* காட்சி - அறிவு. (திருமு)
காட்டம் - விறகு.
காட்டு - உதாரணம், காண்பித்தல்.
காட்டை - திக்கு, முடிவிடம்,

பதினெட்டிமைப் பொழுது கொண்டகாலம், மேன்மை, எல்லை.
* காடம் - அதிசயதிடம்.
காடி - கழுத்து, (கந்) கஞ்சி.
காடிகம் - சீலை.
* காடு - நெருக்கம். (இரா)
காண்டம் - தூண், அம்பு, வெகு படலங்களடங்கிய நூற்பிரிவு, திரைச்சீலை, நீர், காடு, கமண்டலம், அணிகலச்செப்பு, ஆயுதம், வஸ்திரம், கோல்.
காண்டீபம் - வில்லு.
காண்டீபன் - அருச்சுனன்.
காண்டை - கற்பாழி. (பிங்)
காணம் - பொற்காசு, கொள்ளு.
காணல் - குறித்தல். (பிங்)
* காணன் - ஒருகண்குருடன்.
காணி - உரிமை, (கந்) ஓரளவு.
காணுதல் - அறிதல், வணங்கல், செய்தல், பார்த்தல்.
காத்தியாயநி - தூர்க்கை.
காத்திரம் - உடம்பு, உறுப்பு, யானைமுன்கால், கோபம், கனமுடைமை. (பிங்)
காத்திரவேயம் - பாம்பு. (பார)
காத்திரி - கிரி.
காதகன் - கொலையாளி, இசைபாடுவோன்.
காதம்பம் - கான்கோழி, (பிங்) அன்னம்.
காதரம் - அச்சம், சஞ்சலம், அவலம்.
காதல் - விருப்பம், மகன்.
காதலன் - நண்பன், கணவன், மகன்.
காதலி - மனைவி, தோழி, புதல்வி.
காதிகாதலன் - விசுவாமித்திரன்.
* காதிரயூபம் - கருங்காலியூபம்.
காதிவென்றோன் - அருகன்.
காதுகன் - கொலையாளி.
* காதுகை - கொலை. (கந்)
காதுதல் - கொல்லுதல்.
* காதேயன் - விசுவாமித்திரன்.
காதை - சரித்திரம், சொல்.
காந்தம் - அழகு, விருப்பு, காந்தக்கல். (சப்)
* காந்தர்ப்பம் - கந்தருவமணம்.
காந்தருவம் - கந்தருவ விவாகம், கந்தருவருலகம்.
காந்தன் - தலைவன், கணவன்.
காந்தாரம் - காடு, இசைப்பாட்டு.
காந்தி - ஒளி, அழகு, விருப்பம்.
காந்துகம் - வெண் காந்தள்.
காந்துதல் - ஒளிவிடுதல், வெம்மையாதல்.
காந்தை - மனைவி, பெண்.
காநம் - இசைப்பாட்டு, தொனி.
காநீநன் - கன்னிபெற்ற பிள்ளை, கன்னன்.
* காப்பியம் - காவியம். (சிந்)
காப்பியன் - சுக்கிரன். (கந்)
காப்பு - காவல், காப்பது, வேலி, மதில், கதவு, விபூதி, கையணிகளுள் ஒன்று.
காபாலம் - சிவனிருத்தம்.
காபாலி - சிவன். (பார)
* காபிலம் - தலைதொடங்கிக்கால்வரையும் ஈரவஸ்திரத்தாற்றுவட்டல், (சைவ) கபிலைக்குரியது.
காம்பி - நீரிறைக்கும் கருவிகளுளொன்று.

காம்பீரியம் - ஆழமுடைமை.
காம்பு - மூங்கில், பட்டு, பூந்தாள். (பிங்)
காமக்கோட்டி - உமாதேவி.
காமகாண்டம் - காமனுடைய பூவில்லு. (கந்)
காமபாலன் - பலதேவன்.
காமம் - விருப்பு, நிறைவு, சம்மதி.
காமர் - விருப்பு, (சிறு) அழகு.
காமரம் - இசைப்பாட்டு, அடுப்பு.
காமரூபி - ஓந்தி, வித்தியாதரன்.
காமவல்லி - கற்பகத்திற் படர்கொடி.
காமவினை - விரும்பிச் செய்த செயல்.
காமன் - காமதேவன், திப்பலி.
காமாரி - சிவன். அரி - பகை.
காமித்தல் - விரும்புதல். (கந்)
காமியம் - பயன்கருதிச் செய்யுந் தவந்தானம் முதலிய செயல்.
காமினி - விரும்பப்படும் பெண்.
காமுகன் - தூர்த்தன், நாகரிகன்.
காமுறல் - விரும்புதல். (கந்)
காய் - பழம், (உரி) காய்தல்.
காய்தல் - எறித்தல், (சிந்) உலர்தல், வெறுத்தல், பெருங் கோபம், கெடுத்தல்.
காயகர் - இசைபாடுவோர்.
காயத்திரி - சரசுவதி, ஒருவேத மந்திரம்.
காயம் - உடம்பு, கார்ப்பு, இலக்கு, இயற்கை, மூலதனம், வயிரம்.
காயல் - உப்பளம், கழிநிலம்.
* காயனம் - பாடுதல். (பார)
* காயிகம் - காயத்தாற் செயப்படும் புண்ணியம், (திருவி) காயசம்பந்த முடையது.
கார் - கருமை, மேகம், கார்காலம், நீர், கறுப்பு, வெள்ளாடு, கருதிய கருமம் முடியும் வகையுங் கொள்ளுஞ்சினம், (பிங்) இருள், கருங்குரங்கு.
கார்காலம் - ஆவணிபுரட்டாதி.
கார்கோள் - கடல். (பார)
கார்த்தல் - உறைத்தல்.
கார்த்திகை - கார்நாள்.
கார்ப்பண்ணியம் - நற்செயலிலும் பொருளை விடாது காக்க விரும்பல்.
கார்ப்பாசம் - பருத்தி, பருத்தி நூற்சீலை.
கார்ப்பு - உறைப்பு.
கார்முகம் - வில்லு, வெண்கருங்காலி.
காரகம் - வினைகொண்டு முடிவது.
காரகன் - செய்பவன். (சிவத)
காரண்டம் - நீர்க்காகம்.
காரணக்குறி - காரணப்பெயர்.
* காரணிகன் - பரீட்சகன்.
காரம் - உறைப்பு, செயல், யுத்தம்.
காரவல்லி - பாகற்கொடி.
காரா-எருமை. (இரா)
* காராக்கிருகம் - சிறைச்சாலை.
காராம்பி - நீரிறைக்கும்பூட்டை.
காராளர் - வேளாளர்.
காரான் - எருமை. (இரகு)
காரி - கருநிறப்பொருள், நஞ்சு, சனி, ஐயன், (திவாக) வைரவன், கரிக்குருவி.

காரிகை - அழகு, பெண், கட்டளைக்கலித்துறை.
காரியம் - செயல், செயற்பாலது, பயன்.
* காரீடம் - உலர்ந்தசாணி.
காருகபத்தியம்-மூவகையக்கினிகளுள் ஒன்று.
காருகர் - நெய்வார்.
* காருடம் - கருடப்படை.
காருணிகன் - கிருபையாளன்.
காரூகம் - கருங்குரங்கு. (பிங்)
* காரை - சிறைச்சாலை.
கால் - காற்று, இயமன், காலம், குறுந்தறி, தேர்ச்சில்லு, வலிமை, காவம், வழி, அளவு, மகன், காம்பு. (பிங்)
* கால்கோள் - தொடக்கம்.
கால்சீத்தல் - நீக்குதல், துடைத்தல்.
கால்செய்வட்டம் - ஆலவட்டம்.
* கால்வைத்தல் - புகுதல். (கந்)
* காலசேயம் - மோர். (பிங்)
காலதர் - பலகணி. (சில)
கால் - காற்று. அதர் - வழி.
* காலயாபநம்-காலம்போக்கல்.
* காலாசு - காற்கவசம். (சிந்)
காலாந்தகன் - சிவன். (பார)
காலாயுதம் - கோழிப்பறவை.
காலாழ் - சேறு. (சூடா)
காலி - பசுக்கூட்டம். (பிங்)
காலிலி - காற்று, பாம்பு, அருணன்.
காலுதல் - உமிழ்தல், வீசுதல்.
* காலேகவண்ணம் - கலவைச்சாந்து.
காலேயம் - பசுக்கூட்டம்.
காவணம் - பந்தல், மண்டபம்.
காவல் - கவசம், (சிந்) மதில், காத்தல்.
காவற்கூடம் - சிறைச்சாலை.
காவி - காவிக்கல், குவளை.
காவிதியர் - காவிதிப் பட்டம் பெற்ற அமைச்சர்.
* காவியங்கிரி - தணிகைமலை.
காழ் - வித்து, வைரம், மணிக்கோவை, ஒளி, (திவா) குத்துக்கோல், (முரு) கருமை. (கு) பரற்கல்லு, பளிங்கு.
காழ்த்தல் - உறைத்தல், (சிந்) முற்றுதல், வயிரமாதல்.
காழ்ப்பு - உறைப்பு, வயிரம்.
காழ்வை - அகில். (பிங்)
காழகம் - கருமை, (சிந்) கடாரதேசம், சீலை. (பிங்)
காழியர் - பிட்டுவாணிகர், வண்ணார். (சில)
காளகண்டன் - சிவன். (கந்)
காளகூடம் - ஆலகாலவிடம்.
காளபதம் - மாடப்புறா. (பிங்)
காளம் - கழு, கருமை, நஞ்சு, சிறுசின்னம். (பிங்)
காளவனம் - சுடுகாடு.
காளவாய் - கழுதை.
காளாம்பி - காளான். (சிறு)
காளி - கருநிறத்தி. (பார)
காளிந்தி - யமுனைநதி. (பார)
காளிந்திமர்த்தனன் - பலதேவன். (பிங்)
காளிமம் - கறுப்பு. (கந்)
காளை - இளைஞன், எருது. (பிங்)
காற்குளம் - பூசநாள்.
காற்சரி - காலணிகளுளொன்று.
* காற்படை - காலாள். (சிந்)
காற்றின்சகாயன் - நெருப்பு.

* காற்றுதல் - உமிழ்வித்தல், நீக்கல். (தணி)
கான் - காடு, வாசனை, செறிவு.
கான்மரம் - ஆலமரம். (பிங்)
கான்முளை - பிள்ளை. (சேது)
* கான்மேல்வீழ்தல்-வணங்கல்.
கான்றல் - சத்திசெய்தல்.
கானக்குதிரை - மரை. (பிங்)
கானகநாடன் - குறிஞ்சிநிலத்தலைவன்.
கானநாடன் - முல்லைநிலைத்தலைவன்.
* கானகம் - காடு. (சேது)
கானம் - காடு, இசை. (பிங்)
கானல் - கடற்கரை, (பட்) கடற்கரைச்சோலை, மலைப்புறச்சோலை, கிரணம், கழி, பேய்த்தேர், சவர்நிலம், உப்பளம்.
கானவர் - வேடர், குறிஞ்சிநிலமாக்கள்.
* கானெறி - சாளரம். (சிந்)

## கி

கிகிணி - கருவிளை, வலியான்.
கிங்கரர் - ஏவல் செய்பவர்.
கிங்கிணி - சிறுசதங்கை.
* கிங்கிராதன்-மன்மதன். (சப்)
கிச்சு - நெருப்பு. (இரா)
கிசலயம் - தளிர்.
* கிஞ்சநம் - அற்பம். (சப்)
* கிஞ்சித்து - அற்பம். (சப்)
கிஞ்சுகம் - முண்முருக்கு, சிவப்பு. (சப்)
கிஞ்சுபம் - அசோகு. (இரா)
கிட்டம் - மலம்,அழுக்கு.(சிவத)
கிட்டி - கைத்தாளம், தலையீற்றுப்பசு.
கிடக்கை - கிடத்தல், பூமி, படுக்கை. (பிங்)
கிடங்கு - அகழி, குழி, குளம்.
கிடி - பன்றி. (சூடா)
கிடுகு - சட்டம், தேரின்மரச்சுற்று, கேடகம்.
கிடை - ஒப்பு, (சிந்) வேதமோதுந்தானம்.
* கிடைத்தல் - எதிர்தல். (இரா)
கிணகர் - தொழும்புசெய்பவர்.
கிணை - உடுக்கை, (புறநா) மருதப்பறை.
* கிணைவன் - கிணைவாத்தியகாரன். (புறப்)
* கித்தம்-செய்யப்பட்டது.(திருக்கோ) இது கிருதம் என்னும் வடமொழி.
* கிதவம் - வஞ்சகம். (சப்)
* கிந்நம் - சோம்பு, நடுக்கம், தளர்வு.
கிந்நரம் - யாழ், நீர்வாழ்பறவை.
கிந்நரர் - கந்தருவர்.
கிம்புரி - கொம்புப்பூண், முடியுறுப்பு.
* கிம்வதந்தி - உலோகப்பேச்சு.
கிரகணம் - பற்றுதல், கட்டுதல், எடுத்தல்.
கிரணம் - ஒளி, சூரியகிரணம்.
கிரணமாலி - சூரியன்.
கிரது - யாகம்,சங்கற்பம்.(சப்)
கிரயம் - விலைப்பொருள். (சப்)
கிரவுஞ்சம் - அன்றில், ஒருமலை.
* கிராணம் - மூக்கு, கிரகணம்.
கிராதன் - வேடன், மிலேச்சன்.
கிராமம் - நீர்வாழ்பறவை.(பிங்)
கிராமியம்-கிராமத்திற்பிறந்தது.
*கிராமியன்-மூடன்,கிராமவாசி

கிராவணம் - கல்லு, மலை. (சப்)
கிரி - மலை, பன்றி.
கிரிசரம் - மலையிற்பிறந்தயானை.
கிரிமல்லிகை - வெட்பாலை.
கிரியை - தொழில், பூசை, ஆரம்பம்.
கிரீசன் - சிவன். (பிங்)
கிரீடி - அருச்சுனன். (சேது)
கிரீடை - விளையாட்டு,புணர்ச்சி.
* கிரீதன் - விலைக்குவாங்கியபுத்திரன்.
கிரீவம் - கழுத்து.
கிருகம் - வீடு, மனைவி. (சப்)
* கிருகசாரி - இல்வாழ்வான்.
* கிருகி - இல்வாழ்வான்.
* கிருச்சிரம் - கட்டம், துக்கம், ஒருவிரதம்.
கிருட்டி - பன்றி, ஓரீற்றுப்பசு.
கிருட்டிணம் - கறுப்பு, காகம், குயில்.
கிருட்டிணன் - கண்ணன், விசயன்.
கிருத்தி - தோல்.
கிருத்திமம்-தோல்,பூதம்,பொய்.
கிருத்தியம் - செயல், செயற்பாலது.
* கிருத்திரிமன் - புத்திரனுக்கப்பட்டவன். (ஏலாதி)
* கிருத்திவாசன் -சிவன்.(விநா)
கிருதம் - நெய், நீர்.
கிருது - யாகம். (சேது)
கிருபணன் - மந்தன், கயவன்.
கிருபாலு - தயையுடையவன்.
கிருபை - தயை,உயிர்த்துயர்மாற்றவிரும்புதல்.
* கில்லம் - கழுத்து. (பிங்)
* கில்லார் - மாட்டாதார்.
கிலம்-பழுதடைந்தது, அற்பம்.
கிலீவம் - நபுஞ்சகம்.
கிலுத்தம் - முன்கைச்சந்து,கிலுத்தமரம். (சிந்)
கிழக்கு - கீழ்த்திசை, கீழ்.
கிழத்தி - தலைவி, உரியவள்.
கிழமை - வாரம்,குணம்,உரிமை.
கிழவன் - உரியவன், (நாலடி) தலைவன்.
கிழவி - உரியவள், தலைவி.
கிழார் - நீரிறைக்கும் பூட்டை, (சில) உரியவர்.
கிழி - எழுதுபடம், நிதிப்பொதி, கிழிபடுதுகில். (திவா)
கிள்ளல் - கிழித்தல். (பிங்)
கிள்ளி - சோழன். (பிங்)
கிள்ளை - கிளி, குதிரை. (சேது)
* கிள்ளைச்சாதம் - கிளிக்குஞ்சு.
கிளத்தல் - சொல்லல்.
கிளர் - ஒளி, பூந்தாது. (பிங்)
கிளர்தல் - ஒளிர்தல், வளர்தல்.
கிளவி - சொல்.
கிளிச்சிறை - ஒருவகைப்பொன்.
கிளை - உறவு, மூங்கில், ஒருபண், யாழிசை. (பிங்)
கிளைத்தல் - கிண்டல், (பெரிய) கிளைவைத்தல்.
கிற்பு - வலியாதல், கட்டு. (கந்)
கிறி - பொய், வழி.
கின்னரம் - இசையின் குணகுணம் அறிவதோர் பறவை.

## கீ

* கீகசம் - எலும்பு. (சேது)
கீசகம் - மூங்கில், குரங்கு, தலைத்திராணம். (பிங்)
கீடம் - புழு, அற்பசெந்து.

கீதம் - இசைப்பாட்டு, வண்டு.
கீதை - சீடனுக்குபதேசிக்குங் கற்பனையமைந்தவிசேடகதை.
கிர் - வார்த்தை.
கீர்வாணம் - வடமொழி.
கீரம் - கிளி, பால். (பிங்)
கீலம் - ஆப்பு, தூண், ஆயுதம்.
கீலாலம் - நீர்,அமுதம்,இரத்தம்.
கீழ் - கிழக்கு, பள்ளம், கீழ்மை.
கீழ்தல் - பிளத்தல். (சிந்)
* கீள் - கிழிக்கப்பட்ட சீலைக்கச்சு.
கீள்வு - பிளத்தல். (திருக்கோ)
கீளுதல் - கிழித்தல். (கந்)
* கீற்று - பிளவு. (தேவார)
கீன்றல் - கிழித்தல்.

## கு

கு - அற்பம், இகழ்ச்சி, தடை, பாவம், நிந்தை, பூமி, நீக்குதல்.
குக்கன் - நாய்.
குக்கி - வயிறு, மருங்கு.
குக்கில் - செம்போத்து, குங்கிலியம்.
குக்குடம் - கோழி, காணுங்கோழி.
குக்குலு - குங்குலியம்.
குகரம் - நிலவறை, (பார) குகை.
குகன் - முருகன், குகையில்வசிப்பவன்.
குகு - அமாவாசை. (பிங்)
குச்சம் - பூங்கொத்து, மயிற்ரேகை.
* குச்சித்தல் - அருவருத்தல்.
குச்சு - குச்சுப்புல், (புற) பாவாற்றி. (சிந்)
குசம் - தருப்பை, கடிவாளம், நீர்.
குசலம் - நன்மை, சாமர்த்தியம்.
குசலர் - வலியர். (சேது)
குசன் - செவ்வாய், பாவி.
* குசும்பை - குசும்பாமரம்.
குசுமம் - புட்பம், பலம். (சப்)
குசேசயம் - தாமரை.
குசை - கடிவாளம், தருப்பை.
குஞ்சம் - குறளை, குறுமை, நாழி, குன்றிக்கொடி, குறள், ஈயோட்டி.
குஞ்சரம் - யானை.
குஞ்சராசனம்-அரசமரம். (பிங்)
குஞ்சி - ஆண்மயிர், குன்றிக்கொடி. (பிங்)
* குஞ்சித்தல் - குந்துதல். (சிந்)
* குஞ்சிதம் - வளைவு.
குட்டம் - திரள், ஆழம், (சிந்) குளம்.
* குட்டமிடல் - தோண்டுதல்.
குட்டன் - புதல்வன், ஆட்டுக்குட்டி.
குட்டிமம் - கற்படுத்தநிலம்.
குட்டிநி - சோரநாயகனையுஞ் சோரநாயகியையுஞ் சேர்ப்பவள். (சப்)
குட்டுவன் - சேரன். (பிங்)
குடகன் - சேரன், குடகநாட்டவன்.
குடக்கு - மேற்கு.
* குடக்கோன்-சேரன். (திருவி)
குடங்கர் - குடம், குடிசை.
குடங்கை - உள்ளங்கை.
குடசம் - வெட்பாலை, மலைமல்லிகை.
குடஞ்சுட்டு - பசு. (கலி)
குடத்தியர் - இடைச்சியர். (பிங்)

குடந்தம் - கைகூப்பி உடம்பை வளைத்துநிற்றல். (தணிகை)
குடந்தை - கும்பகோணம்.
* குடப்பறை - பன்றிப்பறை.
குடம் - சேரனூடு, பசு, விட்டுணு வாடியகூத்து, மருதநிலத்தூர்.
குடம்பை - முட்டை, பறவைக்கூடு. (பிங்)
குடமுனி - அகத்தியன். (திருவி)
குடவர் - இடையர். (சிங்)
குடவரை - அஸ்தமலை.
குடாது-மேற்குள்ளது, மேற்கு.
குடாரம் - கோடாரி.
குடாவடி - கரடி. (மலை)
குடி - ஊர், குலம், கோத்திரம்.
குடிக்காடு-ஊர். காடு-செறிவு.
குடிசை - சிறுவீடு. (பிங்)
குடிஞை - யாறு, பறவை, கூகை.
குடில் - சிறுவீடு. (பிங்)
குடிலம்-ஆகாயம், சடை, வளைவு, வஞ்சகம், குராமரம். (சப்த)
குடிலை - பிரணவமந்திரம். (கந்)
குடும்பினி - மனைவி.
குடும்பு - பூங்கொத்து.
குடுமி - வெற்றி, உச்சி, ஆண்மயிர்.
குடுவை - கமண்டலம். (கந்த)
குடை-குமரனூடியகூத்து, உடைவேல்.
குடைதல் - துளைத்தல். (இரா) கடைதல், நீராடுதல்.
குண்டகன் - பிறனுக்குப்பெற்ற பிள்ளை. (தணி)
குண்டம் - நீர்நிலை, பானை, ஓமகுண்டம், குட்டிநி, கிடங்கு.
* குண்டர் - மூர்க்கர்.
குண்டலம் - ஆகாயம், வட்டம்
குண்டலி - பாம்பு, இசங்கு.
குண்டிகை - கமண்டலம், பானை.
குண்டில் - சிறுபாத்தி. (பிங்)
குண்டு - ஆழம், குதிரை, நிறைக்கல்.
குண்டை - எருது. (நாலடி)
குணக்கு - கிழக்கு.
குணங்கர் - பிசாசம்.
குணபம் - பிணம். (சேது)
குணம் - கயிறு, குடம், நிறம், பண்பு, நூல், மேன்மை, வின்ஞண்.
குணலை - ஒருகூத்து, வீராவேசவொலி.
குணக்கரநியாயம் - குணம் என்னும் புழு யாதேனும் ஒருமரத்திலே அரித்துவிட்ட இரேகைகள் ஒருங்குகூடி ஒரெழுத்தாக வந்து முடிந்ததுபோல முடிவதாகிய ஒரு நெறி.
குணது - கிழக்கின்கணுள்ளது, கிழக்கு.
குணி - ஊமை, குணமுள்ளது, வில்.
குணில் - கவண், குறுந்தடி.
குணுங்கர் - சண்டாளர், தோல்வினைஞர்.
குத்தி-அடக்கம், (திருநா) மண்.
குத்திரம் - மலை, வஞ்சகம், இழிவு, அற்பம்.
* குத்திரன் - வஞ்சகன். (பார)
குதட்டுதல் - அதக்குதல்.
குதம்பை - கடிப்பு என்னுங்காதணி. (சிங்)
குதலை-மூடன், மழலைவார்த்தை.
* குதித்தல் - கடத்தல். (இரா)
குதிர் - தானியம் வைக்குங்கூடு.

குதூகலம்-முன்காணுப்பொருளை க்காண்டலால்வரும்மகிழ்ச்சி.
குதை-அம்பினடிப்பாகம்.(இரா)
குந்தம் - குதிரை, குருந்தமரம், கைவேல், சிறுசவளம், அலரி மரம்.
குந்தளம்-மயிர், பாநபாத்திரம்.
* குந்தியநடை - மெல்லியநடை.
* குந்துருக்கம்-குக்குலு. (தணி)
* குநகி - அருவருக்கும் நகமுடையவன். (தணி)
குப்பம் - ஊர். (சூடா)
குப்பாயம் - சட்டை. (சிந்)
குப்புறல் - கடத்தல், பாய்தல்.
குப்பை - திரள், மேடு.
குபதம் - தீயவழி. (திருநூ)
* குபிதன் - கோபமுற்றவன்.
குபேரன் - சந்திரன். (பார)
* கும்பகம் - மூச்சு. (பிங்)
கும்பகாரன் - குயவன்.
கும்பசம்பவன் - அகத்தியன்.
கும்பசன் - துரோணன். (பிங்)
கும்பயோநி - அகத்தியன்.
கும்பி - யானை, நரகம், சேறு.
* கும்மாயம் - ஒருவகைச் சிற்றுண்டி. (மணி)
* குமட்டல் - அருவருத்தல்.
குமரம் - கொம்பிலாமிருகம்.
குமரி - அழிவின்மை, கற்றாழை, கன்னி, காளி, துர்க்கை. (பிங்)
குமரிச்சேர்ப்பன் - பாண்டியன்.
குமிலம் - பேரொலி. (பிங்)
குமிறல் - ஒலித்தல். (பிங்)
குமுதம் - ஆம்பல், அடுப்பு, தருப்பை.
குமைத்தல் - அழித்தல், (இரா) குழைவாக்குதல்.
குய்-நறும்புகை, தாளிப்பு. (சிந்)
குய்யம் - மறைவு, வஞ்சகம், நிந்தை.
குயம் - அரிவாள், முலை, சௌரக்கத்தி.
* குயமகன் - குயவன். (சிந்)
குயவரி - புலி.
* குயா - கோங்கு. (பிங்)
குயில் - சொல், துளை. (பிங்)
குயிலுதல் - செய்தல், சொல்லல்.
குயிலுவர்-தோல்வினைஞர், நரம்புக் கருவியாளர்.
குயிற்றல் - செய்தல், பதித்தல்.
குயின் - மேகம்.
குரகதம் - குதிரை. (கந்)
குரங்கம் - மான், மிருகம்.
குரங்கி - சந்திரன்.
குரங்குதல் - வளைதல், தாழ்தல்.
குரண்டம் - கொக்கு. (இரா)
குரத்தி - தலைவி, குருமனைவி.
குரம் - குளம்பு, சௌரக்கத்தி.
குரம்பு - செய்கரை, வரம்பு.
குரம்பை-சிறுவீடு,கூடு,முட்டை.
குரல் - இறகு, பயிர்க்கதிர், மயிர், ஒலி, யாழ்நரம்பு.
குரவகம் - வாடாக்குறிஞ்சி.
குரவம் - கோட்டம், பேரீந்து.
குரவன் - குரு, எப்பொருட்குமிறை.
குரவை-கைகோத்தாடுங் கூத்து, கடல், (இரா) கூத்து. (பிங்)
குரால் - கபிலநிறம், பசு, கூகை.
குரு - நிறம், பாரம், பிதா, அரசன்.
குருக்கள் - குருகுலத்தார்.(பார)
குருகு - உலைத்துருத்தி,(சிந்)குருக்கத்திக்கொடி, வெண்மை,

மூலநாள், கைவளையல், உலை
மூக்கு, கோழி, பறவை.
குருத்து - வெண்மை, மூளை.
குருதி - சிவப்பு, இரத்தம், செவ்வாய்.
குருதிக்காந்தள் - செங்காந்தள்.
* குரும்பி - புற்றுஞ்சோறு.
* குருமித்தல் - முழங்குதல்.
* குருமை - நிறம். (சிந்)
* குருமொழி - உபதேசம்.
* குருவிந்தம் - பதுமராகமணி, குன்றிக்கொடி, கோரைக்கிழங்கு.
* குருள் - குட்டி. (இரா)
குருளை - குட்டி. (வாண)
குரோதன் - வீரபத்திரன்.
* குல்லரி - இலந்தை. (பிங்)
குல்லை - கஞ்சா, வெட்சி, துளசி.
குலம் - வமிசம், வீடு, கூட்டம்.
குலவுதல் - வளைதல், கொண்டாடல்.
குலாயம் - கூடு, பறவைக்கூடு.
குலாலன் - குயவன்.
குலாவுதல் - கொண்டாடுதல், வளைதல்.
குலிகம் - சாதிலிங்கம். (பிங்)
குலிங்கம் - ஊர்க்குருவி.
குலிசம் - வச்சிராயுதம், வன்னிமரம்.
* குலிசி - இந்திரன். (இராமா)
குலீநன் - சிரேட்டகுலமுடையவன்.
குலுத்தம் - கொள்ளு. (பிங்)
குலை - செய்கரை, (பெரிய) அரும்பு பூ இலைமுதலியன சேர்ந்த தாறு.
குவடு-மலை, திரட்சி, மரக்கொம்பு
குவலயம் - பூமி, கருங்குவளை.
குவவு - திரட்சி, பெருமை, குவிதல்.
குவவுதல் - குவித்தல். (சிந்)
குவால் - கூட்டம், மேடு.
குவை - கூட்டம், மேடு.
குழகன் - முருகக்கடவுள்.
குழகு - இளமை, அழகு. (சிந்)
குழங்கல் - குழங்கலென்னும் மாலை. (கந்)
குழம்பு - கஞ்சி, சேறு. (பிங்)
குழல் - உட்டுளைப்பொருள், ஆண்மயிர், பெண்மயிர். (பிங்)
குழவு - இளமை.
குழற்சிகை - ஒருவகைமயிர்முடி.
குழாய் - துளையுடைப்பொருள்.
குழிசி - பானை, வண்டியின்குடம். (சிந்)
* குழித்தல் - குழியாக்கல்.
குழுமல் - கூட்டம், கூடுதல்.
குழை - குண்டலம், சேறு, தளிர், காது, துளையுடைப்பொருள்.
குழைதல் - வளைதல், சோர்தல்.
குழைவு-வளைவு, சோர்வு, கலப்பு.
குளகம் - பலகவிகளாய் ஒருவினைகொண்டு முடிவது, மரக்கால், புற்று.
குளகு - தழை. (நாலடி)
குளம் - சருக்கரை, நெற்றி. (பிங்)
குளவி - காட்டுமல்லிகை.
குளித்தல் - மறைதல், (சிறு) தைத்தல். (புறநா) நீராடல்.
குளியம் - உண்டை, மருந்து.
குளிர் - கிளிகளையோட்டும்படி வீணைபோல மூங்கிலிற் கட்டித்தெறிக்கும் ஒரு கருவி "தட்டை குளிர்தழலை" (கஒ)

கவண், முடமுழா, இலைமூக்க
ரியுங்கத்தி,பனிக்காற்று.(பிங்)
குளிர்தல் - தங்கல். (சிந்)
குளிறல் - ஒலித்தல். (தணி)
குளீரம் - நண்டு.
குற்சிதம் - அருவருப்பு.
குறங்கு - தொடை.
குறங்குசெறி - தொடையணி.
குறடு - திண்ணை, மரத்துண்டு.
குறள் - பூதம். (திருவி)
குறளன் - விட்டுணு. (பிங்)
குறளி - குறியவள். (சிந்)
குறளை - கோள்வார்த்தை.
குறி - அடையாளம், குறிப்பு.
குறிக்கோள் - ஒற்றுமை, (சூடா)
பிறர்குறிப்பறிதல்.
குறிச்சி - சிற்றூர், ஊர்.
குறிப்பு - கருத்து, ஒற்றுமை.
* குறுக்கம் - குறுகியது.
குறுகுதல் - அணுகுதல், குறுமை
யாதல்.
குறுங்கண் - பலகணி. (சில)
குறுங்கலி - சோமராகம். (பிங்)
குறுதல் - பறித்தல். (சில)
குறும்பர் - குறுநிலமன்னர்,
வேடர்.
குறும்பிடி - உடைவாள். (பிங்)
குறும்பு-பொல்லாங்கு, சிறுமை,
அரண், பாலைநிலத்தார், குறு
நிலமன்னன்.
குறும்பூழ் - காடைப்பறவை.
குறும்பொறை - மலை, சிறுமலை,
காடு, குறிஞ்சிநிலத்தார்.(பிங்)
குறுமை - சிறுமை. (சில)
குறுவாழ்க்கை - வறுமை.
குறை - முடிக்கப்படும்பொருள்,
(இரா) குற்றம், வறுமை.
குறைகோள் - இரத்தல். (இரா)
குறையிரத்தல் - குறைநீக்கும்
படிவேண்டுதல்.
குன்மம் - பெரும்பற்றை. (சூடா)
குன்றல் - குறைதல், கெடுதல்.
குன்றவர் - வேடர், குறிஞ்சிநில
மாக்கள்.
குன்று - மலை, சிறுமலை, சதய
நாள்.
குன்றெறிந்தோன் - முருகபி
ரான். (பிங்)
குனித்தல் - ஆடுதல், வளைத்தல்.
குனிவு - வளைவு. (பார)

## கூ

கூ - பூமி, கூவுதல்.
கூட்டம் - கூடுதல், தொகுதி,
சபை. (பிங்)
கூட்டமை - கறிவர்க்கம். (பிங்)
கூட்டு - நண்பு, (இரா) கொள்ளை,
கூட்டியபொருள், திறை.
கூட்டுணல் - கொள்ளைகொண்
டுணல்.
கூடசதுர்த்தம் - ஒருசித்திரகவி.
கூடசன் - சோரபுத்திரன்.
கூடபதம் - பாம்பு. (சப்த)
கூடம் - மறைவு, வஞ்சகம், கொல்
லன் சம்மட்டி, மலையினுச்சி,
வீடு, நகரவாயில், அறை, சாலை.
கூடல் - கூடுதல், மதுரை, இய
லுதல்.
கூடன் - சோரபுத்திரன். (ஏலா)
கூடாங்கம் - ஆமை. (சப்த)
கூடு - உடம்பு. (இரா)
கூத்தன் - ஆன்மா, (நாலடி)
சிவன்.
கூதளம் - கூதாளிச்செடி.

கூந்தல் - பெண்மயிர், மயிலின் தோகை.
கூப்பீடு - குரோசதூரம்.
கூப்புதல் - குவித்தல்.
கூபம் - கிணறு, குழி.
கூம்பல் - ஒடுங்கல், குமிழமரம்.
கூம்பு-தேர்மொட்டு, பாய்மரம்.
கூர்ச்சம் - தருப்பை, தலை, தூண்.
கூர்த்தல் - உப்புறைத்தல், மிகுதல்.
கூர்ப்பரம் - முழங்கை. (சிந்)
கூர்ப்பு - உள்ளதின் மிகுதல், உப்புறைத்தல், மிகுதி.
கூர்மம் - ஆமை, உடம்பிலிருக்கும் ஒருவாயு.
கூரம் - பொறுமை. (பிங்)
கூரை - சிறுவீடு, (திவா) வீட்டிறப்பு.
கூலம் - கடைவீதி, வரம்பு, நீர்க்கரை, பாகற்கொடி, பசு, மிருகத்தின்வால், பலவிதபண்டம், சரக்கு. (பிங்)
கூவல் - கிணறு, அழைத்தல்.
* கூவிடை - கூப்பிடுதூரம்.
கூவியர் - உணவமைப்போர், அப்பவாணிகர்.
கூவிரம்-தேர்க்கொடிஞ்சி, தேர்.
கூவிளம் - வில்வமரம். (சேது)
கூவிளி - ஆரவாரம், கூப்பிடுதூரம். (திரு)
கூழ் - சோறு, பயிர், பல்வகையுணவு.
கூழை-இறகு, பெண்மயிர், படைவகுப்பு, பிற்படை, கடைகுறைந்தது, மயில்.
கூளி - உறவு, எருது, பிசாசம், பூதம்.
கூளியர் - ஆறலைகள்வர், (புற) ஏவலாளர்.
கூற்று - வார்த்தை, இயமன்.
கூறு - பாதி, பங்கு.
கூன் - வளைவு, ஒருவகைப்பாத்திரம்.
கூனல் - சங்கு, வளைவு.
* கூனிரும்பு-அரிவாள். (திருவி)

## கெ

கெச்சை - சிறுசதங்கை.
கெடலணங்கு - மூதேவி.
கெடி - ஊர். (பிங்)
கெடவரல் - மகளிர்விளையாட்டு.
கெடுதி-இழந்துபோனபொருள், (வெண்) கேடு.
* கெண்டுதல் - வெட்டல், கிண்டுதல். (தணி)
கெதம் - போனது, முடிந்தது.
* கெமித்தல் - போதல். (இரகு)
கெழுதகைமை - உரிமை. (வள்)
கெழுமல்-நிறைதல், பொருந்தல்.
கெழுவுதல் - பொருந்தல். (சிந்)

## கே

கேகயம் - மயில், அசுணமா.
கேசம் - மயிர், வேர், அவுரி.
கேசரம் - பூந்தாது, மகிழமரம்.
கேசரர் - வித்தியாதரர். (சேது)
கேசரி-சிங்கம், குதிரை, புன்னை.
கேசவம் - பெண்வண்டு. (சூடா)
கேசவன் - விட்டுணு.
கேட்டை - மூதேவி, கேட்டைநாள்.
கேடகம் - படைகளைத்தடுக்கும் பலகை.
கேடம் - மலைநெருங்கிய கிராமம். (இரா)

கேண்மை - உரிமை, (வெண்) உறவு, நட்பு, கண்ணோட்டம்.
கேத்திரபாலன் - வைரவன்.
கேத்திரம் - விளைநிலம், மனைவி, உடம்பு.
கேதகை - தாழை. (திருவி)
கேதநம் - துகிற்கொடி, அடையாளம்.
கேதம் - துன்பம். (சேது)
கேதாரம் - வயல், பாத்தி. (சப்)
கேது - விருதுக்கொடி, ஒளி, அடையாளம்.
கேயம் - இசைப்பாட்டு, அகழி.
கேயூரம் - தோளணி.
கேரளன் - சேரன். (பிங்)
கேவணம் - மணியழுத்துங்குழி.
கேவலம் - தனிமை, நிச்சயம், முத்தி.
கேழ் - நிறம், ஒளி, ஒப்பு. (பிங்)
கேழ்வரகு - குரக்கன்.
கேழல் - குளநெல், (சிந்) பன்றி.
கேள் - உறவு, கணவன். (சிந்)
கேள்வன் - கவன், அன்பன்.
கேள்வி - யாழ், (பெரும்) காது, கல்வி, கேட்டல்.
கேளார் - பகைவர். (வள்)
கேளி - விளையாட்டு.
கேளிர் - நட்டார்.

## கை

கை - அலங்காரம், படைவகுப்பு, ஒழுக்கம், சிறுமை, செயல், கைம்மரம்.
கைகோள் - ஒழுக்கங்கொள்ளுதல்
கைங்கரியம் - தொண்டு, ஏவல் செய்தல்.
கைசெய்தல் - அலங்கரித்தல்.
* கைகொடுத்தல் - உதவுதல்.
கைத்தாய் - வளர்க்குந்தாய்.
கைத்து - பொன், திரவியம்.
கைதவம் - வஞ்சகம், சூது.
கைதவன் - பாண்டியன், வஞ்சகன்.
கைதூவாமை - ஒழியாமை.
கைதை - தாழை, (இரா) வயல்.
கைதைச்சுரிகையன் - மன்மதன்.
கைதொட்டல் - உண்ணுதல்.
* கைந்நாகம் - யானை. (கந்)
கைப்பற்றல் - விவாகம். (பிங்)
கைப்புடை - கைவிரற்கவசம்.
கைம்மா - யானை.
கைம்மாறு - எதிருபகாரம்.
கைம்மான் - யானை. (திருவி)
கைம்மை - அமங்கலி, விதவை விரதம்.
* கைம்மிகல் - அதிகமாதல்.
கையடை - அடைக்கலம். (கந்)
கையர் - கீழ்மக்கள், வஞ்சகர்.
கையரிக்கொளல் - தேடுதல், அரித்துக்கொள்ளல். (நைட)
கையறல் - இறத்தல், (பார) செயலறல்.
கையறவு - வருத்தம். (பெரிய)
கையாறு - துன்பம், செயலொழிந்தயர்தல்.
கையுறை - கைக்கவசம், கையிற்கொடுக்கும் பொருள். (திருவி)
கைரவம் - குமுதம், வெள்ளாம்பல்.
கைரிகம் - காவிக்கல்லு, பொன்.
கைவல்லியம் - முத்தி, தனிமை.
கைவலம் - முத்தி.
* கைவிலங்கு - யானை. (திருவி)
கைணி - அமங்கலி, அத்தநாள்.

## கொ

கொக்கரை - சங்கு, வலம்புரிச் சங்கு.
கொக்கு - மாமரம், மூலநாள், குதிரை, செந்நாய். (பிங்)
கொங்கன் - சேரன். (பிங்)
கொங்கு - தேன், பரிமளம், பூந்தாது.
கொங்கை - முலை. (சேது)
கொச்சை - இகழ்வு, வெள்ளாடு, திருந்தாமொழி.
கொஞ்சல் - மழலைவார்த்தைபேசல்.
* கொட்கல் - சுழலல். (வெண்)
கொட்டல் - அடித்தல், அப்புதல்.
கொட்டி - சிவனுடிய கூத்து.
கொட்டு - அடித்தல், தாளம், மண்வெட்டி.
கொட்டை - தலையணி, மிதியடிக் குமிழ்.
கொட்பு - கொள்கை, (இரா) சுழற்சி, திரிதல், வளைவு.
கொடி - ஒழுங்கு, (சிந்) காகம்.
கொடிச்சி - குறிஞ்சிநிலப்பெண்.
* கொடிஞ்சி - தாமரைப்பூப் போலத் தேர்த்தட்டின் முன்செய்துவைக்கும் மொட்டு, தேர்.
* கொடிஞ்சு - கொடிஞ்சி.
கொடிறு - குறடு, கபோலம், பூசம்.
கொடுகொட்டி - திரிபுரதகன காலத்திற் சிவபிரானுடிய கூத்து.
கொடுங்கண் - கொடுமை.
கொடுநுகம் - மேழி, மகநாள்.
* கொடும்பாடு - கொடுமை.
கொடுமரம் - வில்லு, தனுராசி.
கொடுமை - வளைவு, தீங்கு.
கொடுவரி - புலி. (புறநா)
கொடுவாய் - புறங்கூறல்.
கொடுவாள் - அரிவாள், மழு.
கொடைமடம் - வரையாவீகை.
கொண்கன் - கணவன், நெய்தற்றலைவன்.
கொண்டல் - கீழ்காற்று, மேகம்.
கொண்டி - கொள்ளை, உணவு.
கொண்டியம் - புறங்கூறுதல்.
கொண்டோன் - கணவன்.
கொண்மூ - மேகம், ஆகாயம்.
கொத்தளம் - மதிலுறுப்பு.
* கொந்து - கோபம். (ஞானு)
கொப்பரி - கிடாரம்.
கொப்புள் - கொப்புளம். (சிந்)
கொம்மை - அழகு, இளமை, முலை, வலி, மார்பு, வட்டம், திரட்சி, திடர். (பிங்)
* கொம்மைகொட்டல் - கைதட்டியழைத்தல். (சிந்)
கொய்யுளை - குதிரை. (பிங்)
* கொல்லிப்பாவை - கொல்லி என்னும் மலையிலுள்ள ஒரு பாவை; இது தெய்வத்தாற் செய்யப்பட்டது என்றும், கண்டார் மனத்தைக் கவர்ந்து காமம் மிகுவிக்குந் தன்மையது என்றுங் கூறுவர். (தணி)
கொல்லிவெற்பன் - சேரன்.
கொல்லை - தோட்டம், தினைப்புனம்.
கொழித்தல் - ஆராய்தல், தெள்ளுதல், வாருதல்.
கொழுதுதல் - குடைதல். (பார)
கொழுந்தன் - கணவனுடன் பிறந்தவன்.

கொழுந்தி - கணவனுடன் பிறந்தவள். (பார)
கொழுநன் - கணவன், எப்பொருட்குந் தலைவன். (புற)
கொழுமை - செழுமை, கொழுப்பு, அழகு.
கொள்கை-விரதம், கோட்பாடு.
கொள்ளை - கொலை, (இரா) மிகுதி, விலை.
* கொள்ளைநீர் - கடல். (இரா)
கொளுத்து-மூட்டு, சந்து. (பிங்)
கொளுத்துதல் - பொருத்துதல்.
கொளை - இசைப்பாட்டு, (கந்) கோட்பாடு. (கலி)
கொற்றம் - அரசியல், (திவா) வெற்றி, வலி.
கொற்றவன் - அரசன்.
கொற்றவி - தலைவி. (சிந்)
கொற்றவை - துர்க்கை. (சேது)
கொற்றி - பசுக்கன்று, காடுகாள். (பிங்)
கொறி - ஆடு, செம்மறியாடு.
கொன் - பயனிலாமை, காலம், பெருமை, அச்சம். (பிங்)
கொன்றை - ஒருபண்.

## கோ

கோ - அரசன், பசு, ஆகாயம், பூமி, கிரணம், அம்பு, வச்சிராயுதம், கண், சொல், நீர், திக்கு, மயிர், சந்திரன், சூரியன், யாகம். (பிங்)
கோகத்தி - பசுக்கொலை.
கோகம்-சக்கரவாகம், செந்நாய்.
கோகழி - திருவாவடுதுறை.
கோகனகம் - செந்தாமரை.
கோகனதம் - செந்தாமரை,செவ்வாம்பல். (சப்)
கோகிலம் - குயில், பல்லி.
* கோகிலம்-கலப்பை, உலக்கை.
கோகு - கழுதை, புயம். (சூடா)
கோகுலம் - பசுக்கூட்டம், பசுத்தொழுவம், இடைச்சேரி.
கோசம் - புத்தகம், முட்டை, திரவியசாலை, அரும்பு, கூட்டம், பொன், மதிலுறுப்பு.
கோசாரம் - விஷயம், தேசம்.
* கோசாதகி - புடோலை. (பிங்)
கோசிகம் - புடைவை, பட்டுப்புடைவை.
கோசிகன் - விசுவாமித்திரன்.
கோசு - தெரு, (பிங்) தோல்வி.
கோட்டகம்-நீர் நிலை, நீர்க்கரை.
கோட்டம் - வஞ்சகம், (சில) அழுக்காறு, வளைவு, பசுக்கொட்டில், நாடு, மருதநிலத்தூர், கோவில், குராமரம்.
கோட்டாலை - துன்பம். (பிங்)
கோட்டி - சபை, நகரவாயில்.
கோட்டுதல்-வளைத்தல். (பெரிய)
* கோட்டுமண்கொளல் - குத்தியெடுத்தல். (சிந்தா)
கோட்டுமா - பன்றி, யானை.
கோட்படல் - கொள்ளப்படல்.
கோட்பு - கொள்கை. (இராமா)
கோடகம் - குதிரை, புதுமை.
கோடணை - கொடுமை, வாச்சியம், ஒலி.
* கோடம் - ஒலி, கமுகு.
கோடரம்-மரக்கொம்பு, சோலை, குதிரை, எட்டிமரம், குரங்கு, மரப்பொந்து.
கோடல்-வெண்காந்தள், கொள்ளுதல், வளைதல், வெண்கிடை.
கோடவதி - வீணை.

கோடாய் - வளர்க்குந்தாய்.
கோடி - சீலை, புதுமை, நுதி.
கோடிகம் - பூந்தட்டு, சீலை.
கோடித்தல் - அலங்கரித்தல்.
கோடியர் - கூத்தர்.
கோடீரம் - முடி,சடை. (சேது)
கோடு - மலையுச்சி, நீர்க்கரை, வரம்பு, சங்கு, கொம்பு, வளைவு, வீணைத்தண்டு, மேடு.
கோடுதல் - வளைதல்.
கோடை-குதிரை, (சேது) வெண்காந்தள், மேற்றிசைக்காற்று, வேனில்.
கோண் - கொடுங்கோன்மை, வளைவு.
கோண்டை - இலந்தைப்பழம்.
* கோண்மா - சிங்கம். (இரா)
கோணம்-வளைவு,மூக்கு,குதிரை, வாட்படை, தோட்டி, மூலை.
கோணல் - கூன், வளைவு. (பிங்)
* கோணி - பூமி, தானியப்பை.
* கோணை - அழிவின்மை.
கோத்தநி - முந்திரிகைக்கொடி.
* கோத்தல் - நுழைதல். (இரா)
கோத்திரம் - மலை, வமிசம், பூமி, நாமதேயம், காடு, வயல்,வழி.
கோத்திரவம் - வரகு. (சூடா)
கோத்திரை - பூமி, மலை.
கோதண்டம் - வில்லு, புருவம்.
கோதநம்-பசுக்கன்று. (சேதுபு)
கோதம் - குரோதம், "கோதநெஞ்சினன்" (பாரத) பொல்லாங்கு. (சிந்)
கோதா - உடும்பு.
கோதாட்டல் - சீராட்டுதல்.
கோதாநம்-விவாகத்தின்முன்செய்யப்படுஞ் சௌரக்கிரியை.
கோதி - நெற்றி, கோதுமை.
* கோதித்தல் - கோபித்தல். "கோதித்தநெஞ்சன்"(பாரத) இதற்குமூலம் குரோதம் என்பது.
கோது - குற்றம்,உள்ளீடில்லது.
கோதை - வின்னாண் தாக்காது முழங்கையின் கீழிடுந் தோற்கவசம், (சேது) மாலை,காற்று, பெண்மயிர், ஒழுங்கு, சேரன்.
கோப்பழித்தல் - சீரழித்தல்.
கோப்பு - கோத்தல், பெருமை.
கோபதி - இந்திரன். (பிங்)
கோபன் - இடையன். (சப்த)
கோபாலர் - இடையர். (பார)
* கோபிசந்தநம் - வைஷ்ணவரணியும்வெள்ளைமண். (சேது)
* கோபிதாரம் - குராமரம்.(பி)
கோபுரம் - நகரவாயில். (அமர)
கோம்பல் - தணியாக்கோபம்.
கோம்பி - ஓந்தி. (சேது)
கோமகன் - அரசன், தலைவன்.
கோமளம் - மிருது, அழகு, இளமை.
கோமாட்டி - தலைவி.
கோமாயு - நரி. (சேது)
கொமாளி - பரிகாசகாரன்.
கோமான் - அரசன், தலைவன்.
* கோமி - சரஸ்வதி.
கோமூத்திரி - ஒருசித்திரகவி.
கோய் - பரிமளச்சாந்திடுங்கலம்.
* கோரகம் - அரும்பு, சிவல்.
கோரகை - அரும்பு, குயில்.
கோரண்டம் - பெருங்குறிஞ்சி.
கோரம் - வட்டில், (இரா) கொடுமை, குதிரை, சோழன் குதிரை.

கோல் - திரட்சி, குதிரைச்சம மட்டி, யாழ்நரம்பு, அம்பு, மரக்கொம்பு.
கோலம் - அழகு, இலந்தைக்கனி, பன்றி, பாக்கு, பீர்க்கு, (பிங்) கருங்குவளை, (சிங்) வளைவு, (இரா) நீரோட்டம்.
கோலாகலம் - ஆரவாரம்.
கோலி - இலந்தை. (பிங்)
கோலுதல் - வளைத்தல்.
கோவலர் - இடையர். (பார)
கோவிதன் - வித்துவான். (சப்)
கோவிந்தர் - இடையர்.
கோவியர் - இடைச்சியர். (பார)
கோவை - ஒழுங்கு, கோத்தமாலை.
கோழி உறையூர். (புறநா)
கோழிவேந்தன் - சோழன்.
கோழை - காசம்.
கோள் - கொள்கை, வலிமை, இடையூறு, கொலை, புறங்கூறல், குலை, கிரகம்.
கோளகம் - மிளகு, மண்டலிப்பாம்பு.
கோளகன் - அமங்கலிமகன்.
கோளகை - வட்டம், பூண்.
* கோளம் - வட்டம். (இரா)
கோளரி - சிங்கம். (பார)
கோளி - அத்தி, ஆல், பூவாதுகாய்க்குமரம், கொழிஞ்சிமரம்.
கோளிப்பாகல் - பலாமரம்.
கோற்கொடி - இலந்தை, சுரை.
கோற்புழு - உலண்டு.
கோற்றேன் - தேன்கூடு.
கோறல் - கொல்லுதல்.
கோறின்னல் - பல்விளக்கல்.
கோன் - அரசன், இடையன்.

## கௌ

கௌசலை - இராமன்றாய்.
கௌசிகம் - விளக்குத்தண்டு, கூகை, பட்டுச்சீலை, மருதயாழிசை.
கௌசிகன் - இந்திரன், விசுவாமித்திரன், பாம்பாட்டி.
கௌடி - பலகறை.
கௌணியர் - பூமியிலுள்ளார்.
கௌதுகம் - பெருமகிழ்ச்சி, மங்கலம்.
கௌதூகலம் - பெருமகிழ்ச்சி.
* கௌந்தேயன் - குந்திபுத்திரன்.
* கௌமுதி - நிலாக்கிரணம்.
கௌமோதகி - விட்டுணுவின் தண்டு. (சேது)
கௌரம் - வெண்மை, செம்மை.
கௌரவம் - பெருமை, பாரமுடைமை.
கௌரவர் - குருகுலவேந்தர்.
கௌரி - உமை, துளசி; சரசுவதி.
கௌரியன் - பாண்டியன்.
கௌவை - துன்பம், பழிமொழி, கள்ளு, முழக்கம், எள்ளிளங்காய், ஒலி.

## ச

சக்கரம் - வட்டம், கடல், பூமி, தேர்ச்சில்லு, பெருமை, திரிகை.
சக்கிரி - அரசன், குயவன், செக்கான், விஷ்ணு, இந்திரன், பாம்பு, தேர்.
சக்கு - கண். (சப்த)
சக்காரம் - மாமரம். (பிங்)

சகசம் - இயற்கை, உடன்பிறந்தது.
சகடம் - வண்டி. (நாலடி)
சகடு - உரோகிணி, வண்டி.
சகடை - வண்டி, ஒருவாச்சியம்.
சகத்திரம் - ஆயிரம். (சேது)
சகத்து-உலகம், பிராணி. (சப்த)
சகதண்டம் - பிருதுவியண்டம்.
சகதி - சேறு, பொல்லாநிலம்.
சகம் - பூமி. (சப்த)
சகலன் - மனைவியின் சகோதரி கணவன், மும்மலமுமுடைய ஆன்மா.
சகன் - நண்பன், தோழன்.
சகாயன் - தோழன். (பிங்)
சகி - தோழன், (சிவத) தோழி.
சகுடம் - சேம்பு. (பார)
சகுந்தம் - கழுகு, பறவை.
சகுநம் - நன்மை தீமைகளை அறிவிக்கும் நிமித்தம், பறவை, கிழங்கு. (பிங்)
சகுனி - பறவை, நிமித்தம் பார்ப்பவன்.
சகோரம் - நிலாமுகி, பேராந்தை.
சங்கடம் - துக்கம், அற்ப அவகாசமுள்ள இடம். (சப்த)
சங்கதம் - ஆரியபாஷை, பொருத்தம்.
சங்கதி - இயைபு, கலப்பு.
சங்கம் - சங்கு, கணைக்கால், நெற்றி, சபை, புலவர்.
சங்கமம் - இயங்கியற்பொருள், புணர்ச்சி, யாறுங்கடலுங்கூடுமிடம். (சப்த)
சங்கரம் - கலப்பு, நஞ்சு. (சப்த)
சங்கரி - உமாதேவி.
* சங்கரீகரணம் - கழுதை குதிரை முதலியவற்றைக் கொல்லல். (சப்த)
சங்கற்பம் - நியமம், விருப்பம்.
சங்கனனம் - நரம்பு.
சங்காதம் - கடுநட்பு, சமூகம்.
சங்கித்தல் - சந்தேகித்தல்.
சங்கிதை - சரித்திரம். (திருவி)
சங்கியை - எண், ஆராய்வு, புத்தி.
சங்கிரகம் - சுருக்கம், திரட்டல்.
சங்கிராமம் - யுத்தம். (சேது)
சங்கீர்ணம் - கலப்பு. (சப்த)
சங்கு - தூண், ஆணி, ஆப்பு.
சங்கேதம்-குறிப்பாலறிவிப்பு.
சங்கை - ஐயம், அச்சம். (சப்த)
சங்கோசம் - மூடமாதல், குங்குமம்.
சசகதி - முயலின்கதி. (விநாய)
சசம் - முயல். (கந்த)
சசி - இந்திராணி, சந்திரன், கருப்பூரம்.
சசிதரன் - சிவன். (பிங்)
சசியம் - பயிர், மரங்களின்வருவாய்.
சஞ்சயம் - திரட்டுதல், ஐயம்.
சஞ்சரம் - அசைவு, சரீரம்.
சஞ்சரிகம் - வண்டு.
சஞ்சலம் - அசைவு, துயர், வாயு.
சஞ்சலை - மின்னல், திப்பலி.
சஞ்சாளிகம் - வண்டு. (சூடா)
சஞ்சிதம் - திரட்டியது.
சஞ்சீவநி - குற்றுயிர்பிழைப்பிக்கும் மருந்து. (சப்த)
சஞ்சு-பறவைமூக்கு, ஆமணக்கு.
சட்டகம் - உடம்பு, மக்கட்படுக்கை.
சட்டுவம் - அகப்பை.

சட்பதம் - வண்டு, அறுகால்.
சட்பம் - இளம்புல்லு.
* சடக்கரம் - ஆறெழுத்து.
சடகம் - ஊர்க்குருவி, வட்டில்.
சடங்கு - கிரியை, செய்முறை.
சடசீதி-எண்பத்தாறு. சட்-ஆறு.
சடம் - உடம்பு, பொய், கொடுமை.
சடரம் - வயிறு. (கந்)
சடன் - மூடன், கீழ்மகன்.
சடாதரன் - வீரபத்திரன். (பிங்)
சடிதி - சீக்கிரம். (சப்த)
சடிலசேகரன் - சிவன். (சேது)
சடிலம் - சடை, குதிரை.
சடுலம் - அசைவு, மின்னல்.
சடை - மயிர், பின்னல் மயிர், வேர், விழுது, வேதபாடபேதம்.
சடைச்சி - பாசி, நெட்டி.
சண்டம் - வேகம், கொடுமை, கோபம், மிக்கவலி. (சப்த)
சண்டன் - இயமன், அலி, சண்டேசுரன்.
சண்டாளன் - பார்ப்பனிக்குஞ் சூத்திரனுக்கும் பிறந்தவன், புலைஞன்.
சண்டி - துர்க்கை, கோபமுள்ளவள்.
சண்டிகை - காளி, துர்க்கை.
* சண்ணித்தல் - விபூதியை உத்தூளனமாக அணிதல்.
சண்பை - சீகாழி.
* சண்மதம் - அறுசமயம்.
* சத்தமன் - யாவரினுமிக்கவன்.
சத்தி - உமாதேவி, வல்லமை, வேற்படை, சூலம், பெருங்கொடி.
* சத்திதரன் - முருகக்கடவுள்.
சத்திநிபாதம் - சத்தியின் வீழ்ச்சி. நிபாதம் - வீழ்ச்சி.
சத்தியம் - சபதம், சித்தாந்தம், உண்மை, அரசமரம். (சப்த)
* சத்தியாநிருதம் - வாணிகம்.
சத்திரம் - அன்னசாலை, ஆயுதம், குடை, வேற்படை, வேள்வி.
சத்து - உள்ளது, பெரியவன்.
சத்துவம் - இயற்கை, பிராணி, திரவியம், மனம், முயற்சி.
சத்தை - உளதாந்தன்மை.
சதக்கிரது - இந்திரன்.
சதக்கினி - நூறு பேரைக்கொல்லும் ஒரு பொறி. (சிந்)
சதகம் - நூறு செய்யுட் பிரபந்தம்.
சதகோடி - வச்சிராயுதம்.
* சதநியுதம் - கோடி. (சிவத)
சதபத்திரம் - தாமரை, மயில்.
சதம் - நூறு, இறகு, வெகு, உண்மை.
சதமகன் - இந்திரன். (இரா)
சதனம்-இலை,இறகு, வீடு,தோல்.
சதா - மரக்கலம், என்றும்.
சதாகதி - வாயு. (பார)
* சதாசாரம் - நல்லொழுக்கம்.
சதாநந்தன் - சதாசிவன், பிரமன்.
சதாபலம் - எலுமிச்சை, தெங்கு.
சதி - சடிதி, (பார) உரோகிணி, பதிவிரதை, வஞ்சகம், தாளவொத்து. (பிங்)
* சதித்தல் - அழித்தல். (பார)
சதுக்கம் - நாற்றெருக்கூடுமிடம்.
சதுட்டயம் - நான்கு பிரிவுடையது.

சதுர்த்தர் - சூத்திரர்.
சதுர்முகன் - பிரமன்.
* சதுரந்தயாநம் - சிவிகை.
சதுரம் - சாமர்த்தியம்.
சதுரன் - காரியசமர்த்தன், சமர்த்தன்.
* சதைத்தல் - கொல்லல். (கந்த)
சந்ததம் - எப்போதும்.
சந்ததி - பிள்ளை. (சேது)
சந்தநம் - தேர், சந்தனமரம்.
சந்தம் - அழகு, நிறம், சந்தனம், கருத்து, கவியின்வண்ணம்.
* சந்தனுடவி - சந்தனக்காடு.
சந்தாபம் - வெம்மை. (வெங்)
சந்தானகரணி - இலுப்பை.
சந்தி - அந்தி, பொருத்து, மூங்கில்.
* சந்திகாரியம் - சந்தியாவந்தநம்.
சந்திரகம் - மயிலிறகு, மிளகு.
* சந்திரகாசம் - வாள். (சப்த)
* சந்திரசாலை - நிலாமுற்றம்.
சந்திரதிலகம் - சந்தனம்.
சந்திரம் - பொன், அழகு, கர்ப்பூரம்.
* சந்திராதபம் - நிலாக்கிரணம்.
சந்து - தூது, பொருத்து, சந்தனம்.
* சந்துபடல் - பொருந்தல்.
சந்தேசம் - தூது. (சப்த)
* சந்தோகம் - சாமவேதம்.
சந்தை - வேதம், செய்யுள்.
* சந்நாகம் - சட்டை. (வாண)
* சந்நிதி - சமீபம்.
சந்நியாசம் - துறவு.
* சநம் - பிராணி. (பார)
சநார்த்தனன்-விட்டுணு. (சேது)
சப்பாணிகொட்டல் - கைகொட்டல்.
* சப்பியம் - சபைக்கேற்ற வார்த்தை.
சபதம் - சத்தியஞ்செய்தல்.
சபரம் - கெண்டைமீன்.
* சபரியை - பூசை. (திருவி)
சபலம் - அசைவு, நடுக்கம், நிறைவேறல், பயன்படல்.
சபலை - மின்னல், இலக்குமி.
சபாகம்பம் - சபைக்கஞ்சுதல்.
சம் - நன்மை, தொடர்பு, சுகம் விருப்பம் முதலிய பொருள்களை அறிவிக்கும் ஒருவடமொழியிடைச்சொல், (சப்) பிறப்பு.
சம்படம் - சீலை.
சம்பத்து - செல்வம்.
சம்பம் - வச்சிராயுதம், இடி.
* சம்பரசூதனன் - மன்மதன்.
சம்பரம் - சரபப்பறவை, நீர், மேகம், மேன்மை, மருதமரம்.
சம்பராரி - மன்மதன்.
சம்பவம் - பிறப்பு, காரணம்.
சம்பளம் - வழிக்குக் கொண்டு போகும் உணவுமுதலியன.
சம்பாடணை - நன்குபேசுதல்.
சம்பிரதாயம் - விதி, பரம்பரை.
சம்பிரமம் - வேகம், விரைவு.
சம்பீரம் - எலுமிச்சை. (பிங்)
சம்பு - சிவன், நரி, நாவல். (பிங்)
சம்புகம் - நரி. (பார)
சம்பை - மின்னல். (சூடா)
சம்மட்டி - குதிரை செலுத்துங் கருவியு ளொன்று.
சம்யமனி - யமனகர். (பிங்)
சம்வாகம் - ஊர்.
சமங்கை - வறட்சுண்டி.

சமட்டி - முழுமையும்.
சமத்தம் - முழுவது. (பிங்)
சமம் - உள்ளிந்திரியங்களையடக்குதல், ஒப்பு, போர்.
சமயம் - காலம், ஒழுக்கம், அங்கிகாரம், நியமம், சித்தாந்தம்.
* சமயமுதல்வி - உமாதேவி.
சமரம் - யுத்தம். (பார)
சமரி - துர்க்கை. (சில)
* சமலை - ஆன்மசத்தி. (சிவத)
சமவாயம் - கூட்டம், ஒற்றுமை.
* சமவேதன் - எங்குநிறைந்திருப்பவன்.
சமழ்த்தல் - வருந்துதல், நாணுதல். (தணி)
சமன் - இயமன், (சேது) நடு.
* சமன்விதன் - கூடினவன்.
* சமாகிதம் - துணைப்பேறு.
சமாசம் - சமூகம்.
சமாதானம் - முரண்டவிர்த்திணக்கல்.
சமாதி - ஒரேமனமாய்க் கடவுளைத்தியானித்தல். (சப்த)
சமாவர்த்தனம் - பிரமசரியவிரதம் முடிக்குங்கிரியை. (சிந்)
சமி - வன்னிமரம், அருகன்.
சமித்தல்-பொறுத்தல், சீரணம்.
சமித்து - ஓமவிறகு.
சமிதை - ஓமவிறகு. (சேது)
* சமிராட்டு - அரசர்க்கரசன்.
சமீரணன் - வாயு, வழிப்போக்கன்.
* சமீரணி - வீமன், அநுமான்.
* சமூதர் - சேனைகள். (இரா)
சமூசயம் - சந்தேகம்.
சமுதாயம் - கூட்டம்.
சமேதம் - கூடியிருத்தல்.
சமை - உட்கருவிகளையடக்கல், வருடம், பொறுமை.
* சமைவு - நிகழ்ச்சி. (இரா)
சயந்தன் - இந்திரன்மகன், சந்திரன். (சப்)
சயந்தனம் - தேர். (சேது)
சயநம் - படுக்கை, நித்திரை.
சயம் - வெற்றி, திரட்டல், சருக்கரை.
சயம்பு - அருகன், சிவன். (பிங்)
சயமகள்-துர்க்கை, வீரலக்குமி.
சயமரம் - தானேகணவனைவரித்தல்.
* சயிலகோபன் - இந்திரன்.
சயிலாதி - கைலாசமலை. (பிங்)
சயை - திருதியை அட்டமி திரயோதசி என்னுந்திதிகள்.
சர்ப்ப - விரைய. (திருவி)
சரக்கு - பொருள், மருந்துச்சரக்கு.
சரகம் - தேனீ, மதுக்கலம்.
சரடம் - ஓந்தி, குசும்பாமரம்.
சரண் - அடைக்கலம். (இரா)
சரணம்-பாதம், புகலிடம், மயிற்றேகை, வீடு, மருதநிலத்தூர், காத்தல், போதல்.
* சரணி - வழி, பாதமுடையவன். (சப்த)
சரதம் - உண்மை, நிச்சயம்.
சரபம்-எண்காற்புள், வரையாடு.
சரம்-இயங்கியற்பொருள், மணிவடம், அம்பு, நீர், போதல்.
சரமம் - அந்தியம், மேற்கு.
சரவணசாதன் - முருகக்கடவுள்.
சரளம் - தேவதாரு, நேர்மை.
சராசரம் - பிரபஞ்சம்.
சராசனம் - வில்லு. (சேது)

சராயுசம்-கருப்பையிற்பிறப்பது.
சரி - கைவளை, வழி, சமம்.
* சரித்து - யாறு. (பார)
சரிதம் - ஒழுக்கம், சஞ்சாரம்.
சரிதை - கதை, ஒழுக்கம்.
* சரிப்பு - போதல். (இரகு)
சரு - சோறு, தேவருணவு.
சருச்சரை - ஒப்பரவின்மை.
சருமம் - தோல், பரிசை.
* சருவத்து - தலைத்திராணம்.
சரை - கிழத்தன்மை, நரை.
சரோருகம் - தாமரை.
* சரோருகன் - பிரமா. (இரா)
சல்லகி - ஆத்திமரம்.
சல்லபம் - முட்பன்றி.
சல்லரி - திமிலைப்பறை.
சல்லாபம் - வினவும்விடையுமாகப்பேசும்வார்த்தை.
சல்லியம் - முட்பன்றி, ஆப்பு, அம்பு.
சலகாமி-நீரிற்செல்லுங்குதிரை.
சலசம் - தாமரை, பாசி.
சலசரம் - மீன், முதலை.
சலசலோசநன் - விட்டுணு.
சலசை - இலக்குமி.
சலதம் - முகில், கர்ப்பூரம்.
சலதரம் - முகில், கடல், குளம்.
சலதாரை - மதகு.
சலதி - } கடல். (சப்த)
சலநிதி - } கடல். (சப்த)
சலபம் - விட்டிற்பறவை.
சலம் - பொய், (சில) மாறுபாடு, (சிங்) அசைவு, வஞ்சகம், பெருங்கோபம், நீர்.
சலராசி - சமுத்திரம். (பிங்)
சலனம் - அசைவு, காற்று, போதல்.
சலாகை-நாராசம்,ஊசிக்காந்தம்
சலாங்கு - பொய்யாப்புள்.
* சலிலகுந்தளம் - பாசி. (சப்த)
* சலிவு - அசைவு. (பார)
சவ்வியசாசி - அருச்சுநன்.
சவ்வியம்-இடப்பக்கம், தெற்கு.
சவட்டல்-மெல்லல். கொல்லல்.
* சவணம் - சிரவணம். (வேதா)
சவரர் - குறவர், வேடர்.
சவரி - கவரிமா, சாமரை.
சவனன் - வேகமுடையவன்.
சவி - அழகு, (சிங்) ஒளி, மணிவடம்.
சவிதா - சூரியன். (சப்த)
சவைமகள் - மிதுனம்.
சழக்கு - குற்றம், பொய்.
சழங்குதல் - நெகிழ்தல். (தணி)
சளம் - வஞ்சகம், நடுக்கம்.
சளி - குளிர்ச்சி, (சிங்) கோழை.
சற்காரம் - பெருமைப் படுத்தல்.
* சற்சங்கம் - சாதுசங்கம்.
சற்சலம் - தெளிந்தநீர்.
* சற்பாவம் - குருவைக் கடவுளெனல்.
சன்மம் - பிறப்பு, தோல்,
சன்மலி - இலவமரம். (சப்த)
* சன்மன் - மகன். (பார)
சன்னத்தம் - ஆயத்தம்.
* சன்னவீரம் - ஒருவகைக்கழுத்தணி. (இரா)
சனபதம் - நாடு.
சனனம் - பிறப்பு.
சனித்தல் - பிறத்தல். (பார)

## சா

சா - மரணம், பேய்.
சாக்கியன் - புத்தன்.

சாக்கிரம் - விழிப்பு.
சாகசம் - வலாற்காரம். (சப்)
சாகதன் - வலியவன். (பார)
சாகம் - ஆடு, தேக்கு, சிறுகீரை.
சாகரம் - கடல், கவசம்.
* சாகல்லியம்-கூட்டம். (சப்த)
சாகாடு - வண்டி, உரோகணி.
சாகாமிருகம் - குரங்கு, அணில்.
சாகா - மரக்கொம்பு.
சாகி - மரம், மிலேச்சன். (சப்)
சாகியம் - நட்பாயிருத்தல்.
சாகினி - சிறுகீரை, சேம்பு.
* சாகுந்தலேயன் - பரதன்.
சாகேதம் - அயோத்திநகர்.
சாகை - மரக்கொம்பு, வேதநூற் பிரிவு, சாதல், முடிவு.
* சாகைமிருகம்-குரங்கு. (பார)
சாங்கம் - கை கால் முதலிய உறுப்பு, சங்கின்தொனி.(சப்)
* சாங்கரர் - சங்கரசாதியார்.
சாங்கரியம் - கலப்பு. (சப்த)
சாசநம் - ஆஞ்ஞை, ஒழுங்கு.
* சாஞ்சித்தர் - முற்பிறப்பிற் செய்ததவத்தினுலே அந்தக்கரண சுத்தராய்ப் பிறந்து சிவனைத்தியானஞ் செய்பவர்.
* சாட்சியம் - சான்று. (தாயு)
சாட்டாங்கம் - எட்டுறுப்பொடு கூடியவணக்கம்.
சாட்டியம் - வஞ்சகம், அறுபது நாளில் விளையும் நெல்லு.
சாட்டுவலம் - பசும்புற்றரை.
சாடி - சீலை, புறங்கூறல். (பிங்)
சாடு - புலவன், சகடம்.
சாண்மாதுரன் - முருகக்கடவுள்.
சாணம் - தழும்பு. (மது)
சாணி - விபூதி, சாணகம்.
* சாத்தம் - உரையளவை.
சாத்தன் - அருகன், மாசாத்தன்.
சாத்தியம் - முடிக்கத்தக்கது.
* சாத்து - வாணிகஞ்செய்வோர் திரள்.
சாதகம் - பூதம், பேய், பிறவி, வானம்பாடி. (பிங்)
சாதநம் - முடிப்பது, மரணம், சித்தி, காரணம், திரவியம், போக்கு. (சப்த)
சாதம் - உண்மை, சுகம், பிறப்பு.
சாதரூபம் - பொன்.
சாதவேதா - நெருப்பு.
சாதனை - சாதித்தல். (சேது)
சாதாரணம் - பொது.
* சாதாரி - செவ்வழியாழ்த்திறத்தொன்று.
சாதி - குலம், சிறுசெண்பகம், தேக்கு, கள்ளு, பிரம்பு, மரம்.
சாதித்தல் - கொல்லுதல், அழுத்துதல்.
* சாதிமை - பெருமை. (இரா)
சாது - அழகு, தக்கது, பெரியோன்.
* சாதுரங்கம் - சதுரங்கசேனை.
சாதுரியம் - சாமர்த்தியம், நாகரிகம்.
சாதேவம் - குழிநாவல்.
சாந்தம் - பொறுமை, சந்தநம்.
சாந்தன் - பொறுமையாளன்.
சாந்தாற்றி - சிற்ருலவட்டம்.
சாந்திராயணம் - ஒருவிரதம்.
சாந்தை - பூமி. (பிங்)
சாநகி - சீதை. (இரா)
சாநவி - கங்கை.
சாநித்தியம் - அண்மை.
சாநு - முழங்கால், மலைச்சாரல்,

சாப்பறை - நெய்தற்பறை.
சாப்பை - புற்பாய்.
சாபம் - வில்லு, சபிப்பு, மிருகக்குட்டி.
சாபலம் - நிலையின்மை. (பார)
சாபலன் - ஆட்டுவாணிகன்.
சாம்பல் - ஒடுங்கல், பழம்பூ.
சாம்புதல் - ஒடுங்குதல்,குவிதல்.
சாம்பூநதம் - பொன், சாம்பூநதநதி.
சாமக்கிரியை - காரணசமுகம், திரவியம்.
சாமந்தர் - பரம்பரைமுடிமன்னர். (பிர)
சாமம் - சமப்படுத்தல், இரவு, கருமை.
சாமளம் - பச்சை.
சாமன் - காமன்தம்பி. (சிங்)
சாமாநியம் - பொது.
சாமி - தலைவன், பொன், முருகன்.
சாமீகரம் - பொன். (சேது)
சாமுண்டி - துர்க்கை, காளி.
சாய் - ஒருவகைக்கோரை.
* சாய்தல் - ஒழிதல். (வள்)
சாய்ப்பு - தாழ்வு, சாய்த்தல்.
சாயகம் - அம்பு, வாள்.
சாயம் - சாயங்காலம். (சேது)
சாயல் - இளைப்பு, (புறநா) உள்ளதனிற் சுருங்கல், மிருது, அழகு, ஒப்பு, நிறம், நுண்மை.
சாயாநதம் - ஓந்தி. (சூடா)
* சாயாபதி - சூரியன். (பார)
சாயை - மனைவி, நிழல், சூரியன் மனைவிகளுள் ஒருத்தி. (சப்த)
சார்ங்கம் - வில்லு, விட்டுணுவின்வில்.
* சார்தல் - கலத்தல். (பிங்)
சார்வபௌமன் - சக்கரவர்த்தி.
* சார்வாரம் - கச்சின்கடைக்கயிறு.
சாரங்கம் - சாதகப்பறவை, மான், வண்டு, மயில், தாமரை, கர்ப்பூரம்.
சாரசம் - வெண்ணுரை,தாமரை.
சாரணர் - ஒற்றர்,சமண்முனிவர்.
சாரதி - தேர்ப்பாகன், புலவன்.
சாரம் - இனிமை, மரவயிரம், உறுதியான பாகம், வெண்ணெய், பெலம்,நீர், திரவியம், மருந்து.
சாரமேயன் - நாய்.
சாரி - சூதாடுகருவி.
சாரிகை - நாகணவாய்ப்புள், சுழல்காற்று, வட்டமாயோடல்.
சாரித்திரம் - ஒழுக்கம், கதை.
* சாரிவரல் - சூழ்ந்துவரல்.
சாரு - அழகு, கிளி. (பிங்)
சாருகன் - கொலையாளி.
சால்பு - அமைதி, மாட்சிமை, குணம்.
சாலகம் - மதகு, பலகணி, பூவரும்பு.
* சாலபஞ்சிகை - மரப்பாவை.
சாலம் - ஆச்சாமரம், மதில், வலை, பலகணி, சபை,கூட்டம்.
சாலி - அருந்ததி,கள்ளு,நெல்லு.
சாலிகர் - நெய்வார்.
சாலிகை - சட்டை. (சிங்)
சாலினி - தேவராட்டி,அருந்ததி.
சாலேகம் - பலகணி,(சேது)பூவரும்பு.
சாலேயம் - நெல்விளையும் நிலம்.

சாலை - வீடு, குதிரைப்பந்தி.
சாவகர் - சமணர்.
சாவரம் - பாவம், குற்றம்.
சாவு - பேய்.
சாளரம் - பலகணி. (இரா)
சாளிகம் - வண்டு.
சாற்றுதல் - அமையச்செய்தல்.
சாறு - திருவிழா, பூங்கொத்து, கள். (பிங்)
சான்மலி - இலவமரம்.
சான்று - சாட்சி. (இரா)
சான்றோன் - அறிஞன், சூரியன்.
சானித்தல்-தியானித்தல். (சேது)

சி

சிக்கடி - அவரைக்கொடி.
சிக்கம் - குடுமி, உறி, சீப்பு, உச்சி.
சிக்குரு - மரம், முருங்கை. (சப்)
சிக்கெனவு - திண்ணெனவு.
சிகண்டம் - மயிலின் தோகை.
சிகண்டி-மயில், விட்டுணு, அலி.
சிகண்டிசன் - வியாழன். (பிங்)
சிகதை - மணற்குன்று. (சிவத)
சிகரம் - தலை, மலையினுச்சி, மரத்தினுனி, புளகம், அந்தம்.
சிகரி - கோபுரம், மலை, எலி, கருநாரை, நாயுருவி, மரம்.
சிகழிகை - மயிர்முடி, மாலை.
சிகாவலம் - மயில். (பார)
சிகி - மயில், நெருப்பு, ஆமணக்கு, கேது, மரம், மலை.
சிகிச்சை - வைத்தியம்.
சிகிவாகனன் - முருகக்கடவுள்.
சிகுவை - நாக்கு, வாக்கு. (சப்)
சிகை - அக்கினிச்சுவாலை, குடுமி.
சிங்கநாதம்-சிங்கத்தின்முழக்கம்.
* சிங்கல்-சிக்குதல், (சிந்) குறைதல். (இரா)
சிங்காரம் - புணர்ச்சி, இனிமை, ஆபரணம், கூத்து, சூர்ணம்.
சிங்கி - நஞ்சு, இராகுவின்றாய்.
* சிங்கிடல் - குறைதல். (விநா)
சிசிரம் - பின்பனி. (இரா)
சிசு - குழந்தை, அற்பம்.
* சிசுரூடை - ஏவற்றொழில்.
சிஞ்சம் - புளிமா, புளியமரம்.
* சிஞ்சிதம் - நாணொலி.
* சிஞ்சினி - வின்னாண். (பார)
சிட்டம் - பொறுமை, நல்லறிவு.
சிட்டி - சிருட்டி, கட்டளை.
* சிட்டுணு - வெல்வியாளன், விட்டுணு.
சித்தசன் - மன்மதன்.
சித்தம் - மனம், பக்குவம், முடிந்தது, நிச்சிதம், நித்தியம்.
சித்தன் - சித்தியுள்ளவன், வைரவன், அருகன்.
சித்தாந்தம் - பரபக்கத்தினைமறுத்துத் தன்பக்கதாபனமாய் முடிந்த முடிபு. (சப்த)
சித்தார்த்தம் - வெண்கடுகு.
சித்தி - முத்தி, வளர்ச்சி, செல்வம், அறிவு, மிதியடி, மறைவு.
சித்திரகம் - திலகம், ஆமணக்கு.
சித்திரகாயம் - புலி.
சித்திரம் - மெய்போலத் தோன்றும் பொய், (திவா) அழகு, அதிசயம், பலவிதநிறம், திலகம், ஆமணக்கு, அசோகு, நிந்தை, ஆகாயம், சித்திரகவி.
சித்து - அறிவு, அறிவுடைப்பொருள்.
சித்துரு - கடவுள், ஞானவடிவு.
சிதகம் - தூக்கணங்குருவி.

சிதகல் - உருவுதல். (பிங்)
சிதடன் - குருடன், அறிவிலான்.
சிதடி - சிள்வண்டு, குருடி.
சிதடு - குருடு, பேதைமை.
சிதம் - வெண்மை, நட்சத்திரம், அறிவு, வெற்றி. (சப்த)
சிதர் - உறி, துளி, வண்டு, பூந்தாது.
சிதர்தல் - சிந்துதல்.
* சிதலை - கறையான், சீலை, நோய்.
சிதவல் - கந்தைத்துணி.
சிதறி - மழை. (திவா)
* சிதன் - சுக்கிரன். (பிங்)
சிதார் - கந்தைத்துணி.
சிதை - ஈமவிறகு, வெண்டுளசி.
சிதைவு - வழு. (தொல்)
சிந்தகம் - புளியமரம்.
* சிந்தம் - கொடி, (பார) புளியமரம்.
சிந்தாகுலம் - மனக்கவலை.
சிந்தாமணி - சிந்தித்ததைக்கொடுக்கும்மணி.
சிந்து - நீர், கடல், நதி, குறள்.
சிந்துதல் - களைதல், சிதறுதல்.
சிந்துரம் - யானை, சிவப்பு, திலகம்.
சிந்துவாரம் - வெண்ணொச்சி.
சிந்தூரம் - புளியமரம், செஞ்சுண்ணம்.
* சிந்தை - வருத்தம். (சிந்)
சிந்தைசூரியன் - புதன்.
* சிந்நம் - அறுத்தல். (கந்)
சிநகரம் - கோயில். (சூடா)
சிம்புள் - சரபப்பறவை.
சிம்பை - அவரைக்கொடி.
சிமயம் - மலை, மலையுச்சி. (சில)
சிமிலி - உறி, சிள்வண்டு, குடுமி.
சிமிழ்த்தல் - கட்டுதல், கண்மூடல்.
* சிமை - கொடுமுடி. (வாண)
சிரகம் - கரகம், தலைப்பாகை.
சிரஞ்சீவி - நெடுங்காலம்வாழ்வோன், காகம், இலவமரம், மார்க்கண்டன்.
சிரத்தை - விசுவாசம், விருப்பம்.
* சிரந்தநம் - பழையது. (சப்த)
* சிரபுரம் - சீகாழி. (கந்)
சிரம் - முதன்மை, நெடுங்காலம், தலை.
சிரமம்-இளைப்பு, யுத்தப்பயிற்சி.
சிரல் - மீன்குத்திப்பறவை.
சிரவணம் - காது, கேள்வி, திருவோணம்.
சிரவம் - கவுதாரி, காது, கீர்த்தி.
சிராவணம்-ஆவணிமாசம்,கல்லு.
சிரீடம் - வாகைமரம்.
சிருகாலன் - நரி.
சிருங்கம் - மிருகக்கொம்பு, மலையுச்சி.
சிருங்கலை - விலங்கு, யானைகட்டுங்காற்சங்கிலி.
சிருங்காடகம் - நான்குவழிகூடுமிடம்.
சிரேணி - இடையர்வீதி, வரிசை.
சிரை - நரம்பு.
சிரோருகம் - தலைமயிர். (பிங்)
சில்லம் - தேற்றுமரம்.
சில்லி - தேருருள், சிறுகீரை, வட்டம், சிள்வண்டு.
* சில்லுணு - சிற்றுண்டி. (கந்)
சில்லை - இழிவு, தூர்த்த மங்கை, சிள்வண்டு.
சிலகம் - சட்டுவம்.

சிலதர் - தொழிலாளர், தோழர்.
* சிலம்பன் - முருகக்கடவுள்.
சிலம்பு - ஒலி, மலை, பக்கமலை.
சிலம்புதல் - ஒலித்தல். (பிங்)
சிலாக்கியம் - புகழத்தக்கது.
சிலாவட்டம் - சாணைக்கல்லு.
சிலிர்த்தல் - தளிர்த்தல், புளகம்.
சிலீமுகம் - அம்பு, வண்டு, முலைக்கண்.
சிலுகு - துன்பம், (இரா) குற்றம்.
சிலேடை - பலபொருள் பயக்கும் வாக்கியம்.
சிலை - ஒலி, வில்லு, கல்லு, மலை.
சிலைத்தல் - ஒலித்தல். (புற)
சிலோச்சயம் - மலை.
சிவணுதல்-பொருந்தல், சார்தல்.
* சிவதாரு - தேவதாருமரம்.
சிவப்பு - கோபக்குறிப்பு, செம்மை.
சிவம் - நன்மை, முத்தி, சுகம், மங்கலவிதி, வேதம், நீர்.
சிவல் - கவுதாரி. (விநாய)
* சிவிறி - நெடுந்துருத்தி. (சிந்)
சிவுகம் - மோவாய்.
சிவை - உமாதேவி, நரி, வேர், உலைத்துருத்தி, உலைமூக்கு.
சிற்பம் - அற்பம், சித்திரத்தொழில்.
* சிற்பரன் - கடவுள்.
* சிற்றவை - சிறியதாய். (இரா)
சிற்றில் - சிறுவீடு, சிறுதுகில்.
சிற்றூர் - குறிஞ்சிநிலத்தூர்.
சிறக்கணித்தல் - சுருக்குதல்.
சிறகாற்றல் - சிறகடித்தல்.
சிறகு - தெரு, (பிங்) இறகு.
சிறத்தல் - சிறப்பாதல், மிகுதல்.
சிறப்பு - விழா, (வள்) தலைமை, மிகுதி, செல்வம்.
சிறார் - சிறுபிள்ளைகள்.
* சிறான் - சிறுவன். (விநா)
சிறுகால் - தென்றற்காற்று.
சிறுகாலை - உதயகாலம்.
சிறுகுடி - குறிஞ்சிநிலத்தூர்.
சிறுசெய் - பாத்தி.
* சிறுசொல் - பழிவார்த்தை.
* சிறுநாக்கு - உண்ணாக்கு.
சிறுபுறம் - பிடர், முதுகு. (சிந்)
சிறுமாரோடம்-செங்கருங்காலி.
சிறுமி - மகள். (பிங்)
சிறுமை-துயர், நோய், அற்பம்.
சிறுவரை - அற்பகாலம்.
சிறுவிலை - பஞ்சம். (சேது)
சிறை - இறகு, நீர்க்கரை, வரி, இடம், காவல், மதில், தடை, பக்கம்.
* சிறைத்தல் - தடுத்தல். (தணி)
சின்மயம் - ஞானரூபம்.
சின்மயன் - கடவுள்.
* சின்முத்திரை - பெருவிரனுதியோடு தர்ச்சனி விரனுதியைச் சேர்த்து மற்றைவிரல்களை நேரே நிறுத்துவது.
சின்னப்பூ - சின்னப்பட்டபூ.
சின்னம் - அடையாளம், பொடி, சுளகு, துண்டம், சிறுமை.
சினவுதல் - கோபித்தல். (இரா)
சினிவாலி - சதுர்த்தசியோடுகூடிய அமாவாசி.
சினை - முட்டை, கருப்பம், உறுப்பு, மரக்கொப்பு. (பிங்)

சீ

* சீ-இலக்குமி, காந்தி, செல்வம்.
சீகண்டன் - சிவன்.

சீகரம் - இலக்குமீகரம், (கந்த) கடற்றிரை, மழை, துளி, அழகுசெய்வது.
சீசம் - ஈயம். (சப்த)
சீத்தல் - நீக்குதல், துரால்களைதல்.
சீத்தை-குணமின்மை, கீழ்மகன்.
சீதநீர் - பனிநீர்.
சீதம் - குளிர், நீர், பனி, மேகம்.
* சீதரன் - விட்டுணு.
சீதளம்-குளிர், தாமரை, முத்து, சந்தனம்.
சீதாபதி - இராமன்.
சீது - கள்ளு, (இரகு) கருப்பங்கள்ளு.
சீதை - உழவுச்சால், பொன்னுங்காணி.
* சீந்தல் - கோபித்தல். (சிந்)
சீபதி - விட்டுணு, அருகன்.
* சீபந்நம் - குமிழமரம். (சிவத)
* சீபலம் - வில்வமரம். (சிவத)
சீமங்கலி - நாவிதன்.
சீமான் - செல்வன், தலைவன், அருகன்.
சீமூதம் - மேகம், மலை.
சீமை - எல்லை, வயல், கரை.
சீயம் - சிங்கம்.
* சீர் - தாளவறுதி, செல்வம், புகழ், துலாம், பாரம், அழகு, நன்மை.
சீர்த்தல் - கோபித்தல். (கந்த)
சீர்த்தி - மிகுபுகழ்.
சீரகத்தாரோன் - குபேரன்.
சீரணம்-சமித்தல், பதங்கெடல்.
சீரம்-மரவுரி, (இரா) கலப்பை.
சீருணம் - செம்பு, (சேது) பழுது.
சீருள் - ஈயம், செம்பு. (பிங்)
சீரை - துலாம், (புற) மரவுரி, இசைப்பாட்டு, சீலை.
சீலம் - நிலை, (சிந்) சுபாவம், சரித்திரம், நற்குணம், நல்லொழுக்கம். (சப்த)
சீவகர் - பௌத்தசமயத்தார்.
சீவந்தி - சீந்திற்கொடி, பாலை.
சீவநம்-உயிர்வாழ்தல், நீர்,வெண்ணெய்.
சீவநி - சீந்திற்கொடி, பாலை.
சீவநீயம் - நீர், சீவித்தற்கருவி.
சீவரம் - துவருட்டினசீலை.
சீவன் - உயிர், வியாழன்.
சீவன்முத்தன் - சீவிக்கையிற்றனே உலகப்பற்று நீங்கினவன். (சப்த)
சீழ்க்கை - நாவினுதியைக்கோலி ஊதும் ஒருவகை ஒலி. (சிந்)
* சீற்றம் - மிகுசினம். (சில)

## சு

சு-நன்மை, அதிசயம், மேன்மை, சம்மதி, பிரயாசம், செல்வம் முதலிய பொருள்களைக்காட்டும் ஒரு வடமொழியிடைச்சொல். (சப்த)
சுக்கிரன் - வெள்ளி என்னுங்கிரகம்.
சுக்கிலத்தியானம் - உயிர்தன்னறியாமைநீங்கிப் பரமான்மாவாகத் தன்னை இடைவிடாது நினைத்தல். (வள். பரிமே)
சுக்கிலம்-வெண்மை, இந்திரியம்.
சுக்கை - நட்சத்திரம், மாலை.
சுகம் - இன்பம், இன்பங்கொடுப்பது, கிளி, மகிழ்ச்சி.

சுகரம் - சுகமாய் முடிக்கத்தக்கது.
சுகிர் - உட்டுளைப்பொருள்.
சுகிர்தல் - கிழித்தல். (சிந்தா)
சுகுமாரம்-மென்மை, இனியது.
சுங்கம் - ஆயவரி.
சுங்கன் - சுக்கிரன். (பிங்)
சுசி - சுத்தம், கோடைகாலம், (பிங்) நெருப்பு, வெண்மை, சந்திரன்.
சுசுந்தரி - மூஞ்சூறு.
சுட்கம் - உலர்ந்தது, உலர்தல்.
சுட்டு - நல்லது, குறிப்பு.
சுடர் - நெருப்பு, ஒளி, விளக்கு, சந்திரன், சூரியன், தீச்சிகை.
சுடலையாடி - சிவன்.
சுடிகை - சுட்டி, கிரீடம், உச்சி.
* சுடுமண் - செங்கல்லு. (சில)
சுடுவல் - இரத்தம். (திவா)
சுடுவு - சும்மாடு. (சூடா)
சுண்டன் - மூஞ்சூறு, சதயம்.
* சுண்டாலி - யானை. (பிங்)
சுண்டி - கள்ளு, வேர்க்கொம்பு
* சுண்டுதல் - வற்றுதல். (இரா)
* சுண்டை - யானையின்கை, கள்ளு.
* சுண்ணம் - மணிபொன் கர்ப்பூரம் முதலியவைகளைப் பனி நீரிலும் புழுகிலும் நனைத்தூற வைத்து இடித்தெடுக்கும் பரிமளப்பொடி, பொடி, சுண்ணும்பு.
சுணங்கு - தேமல்.
சுத்தி - சங்கு, தலையோடு.
சுதம் - அழிவு, போதல்.
சுதரிசநம் - கண்ணாடி, சக்கரம்.
சுதன் - மகன், அழிவுடையவன்.
சுதன்மை - இந்திரசபை. (சேது)
சுதாகரன் - சந்திரன், கருடன்.
சுதை-சுடுசுண்ணச்சாந்து, மகள், அமிழ்து, உதைகாற்பசு, நீர்.
சுந்தரம் - நன்மை, (சிந்தா) அழகு.
சுந்தரி - பெண், இந்திராணி, அழகி.
சுநாசீரன் - இந்திரன்.
சுப்பிரதீகம் - வடகீழ்த்திசை யானை.
சுப்பிரம் - வெள்ளி, சந்தநம், வெண்மை.
சுபக்கம் - தன்பக்கம்.
சுபம் - நன்மை. மோட்சம், தருமம்.
சுபாசுபம் - நன்மைதீமை.
சுபாவம் - இயற்கை.
சும்பகம் - ஊசிக்காந்தம்.
* சும்புளி - சுருக்கம். (இரா)
* சும்புளித்தல் - சுருங்கல், கூசுதல். (இரா)
சும்மை - ஊர், சுமை, ஒலி, நாடு.
சுமடு - அறிவின்மை, சும்மாடு.
* சுமடர் - மூடர். (இரா)
சுமநசம் - புட்பம், கோதுமை.
சுமாலி - கள்ளு. (சூடா)
சுமையடை - சும்மாடு.
சுரகுரு - வியாழன். (பிங்)
சுரத்தல் - ஊறுதல், பயத்தல்.
சுரதம் - புணர்ச்சி, அன்பு.
சுரநதி - கங்கை. (சேது)
சுரபி - பரிமளம், வசந்தகாலம், அழகு, பொன், மகிழமரம், மல்லிகை.
* சுரபுரசிந்து - கங்கை.
சுரம் - அருநெறி, காடு, பாலை

நிலம், வழி, வெப்புநோய், கள்ளு.
சுரன் - தேவன், சூரியன், பண்டிதன்.
* சுராசன் - நல்ல அரசன்.
சுராட்டு - நல்ல அரசன். (சப்த)
சுராபகை - கங்கை. (சப்த)
சுராலயம்-மேருமலை,தேவுலகம்.
சுரிகை - உடைவாள், (இரா) கவசம்.
சுரியல் - ஆண்மயிர், பெண்மயிர், நீர்ச்சுழி, சுரிதல். (பிங்)
சுருக்கு - சுருக்கம், நெய்த்துடுப்பு.
சுருக்குதல்-கட்டுதல்,ஒடுக்குதல்.
சுருங்கை - மதகு, நுழைவாயில்.
* சுருதி - வேதம், காது, கேள்வியறிவு.
சுரும்பு - வண்டு, ஆண்வண்டு.
சுருவை - நெய்த்துடுப்பு.
சுரை - பொய், (சிந்) மூட்டுவாய், (கலி) கள்ளு, பசுவின் முலை, உட்டுளை.
சுரோணிதம் - இரத்தம்.
சுரோத்திரம் - காது, கேள்வி.
சுல்லி - அடுப்பு, மடைப்பள்ளி.
சுல்லு - வெள்ளி.
சுல்வம் - தாமிரம். (சேது)
சுலபம் - நன்குபெறத்தக்கது.
சுலாவுதல் - சுற்றுதல்.
சுலோகி - கள்ளு. (பிங்)
சுவர்ணம் - பொன், நன்னிறம்.
சுவத்தம் - நோயின்மை.
* சுவத்திகம் - மேழி. (திருவி)
சுவதந்திரம் - சுவாதீநம்.
* சுவப்பநம் - நித்திரை, படுக்கை.
சுவப்பிரம் - நரகம், பாதலம்.
சுவயம்வரம் - தானேவரித்தல்.
* சுவர்க்கம் - தேவுலகம், முலை.
சுவல் - தோளின்மேல், பிடர், மேடு.
சுவலன் - நெருப்பு, (பிங்)
சுவலை - அரசமரம்.
சுவவு - பறவையின்மூக்கு, மூஞ்சூறு.
சுவனம் - கனவு, (சேது) ஒலி.
சுவாகதம் - கிளி, நல்வரவு.
* சுவாத்தியம் - ஆரோக்கியம், மகிழ்ச்சி.
* சுவாதவாதம் - மூச்சுக்காற்று.
சுவாமி - கடவுள், சிவன், அதிபதி, அரசன், முருகக்கடவுள்.
சுவார்த்தம் - தன்பொருட்டு.
சுவிகை - கள்ளு. (பிங்)
சுவீகாரம் - அங்கீகாரம்.
சுவேதசம் - வேர்வையிற்பிறப்பது.
சுவேதம் - வெண்மை, வேர்வை.
சுவேதவாகநன் - அருச்சுனன்.
சுழல்படை - வளைதடி.
சுழிகுளம் - ஒருசித்திரகவி.
சுழியல்-ஆண்பெண்மயிர், சுருள்.
சுழுத்தி - ஆன்மாவுக்குரிய ஓரவத்தை.
சுழுனை - சுழுமுனைநாடி.
சுழுமுனை - இடைநாடிக்கும்பிங்கலைநாடிக்கும் இடையிலுள்ள ஒருநுண்ணியநாடி. (சப்த)
சுள் - கருவாடு,(கந்)மெல்லியது.
சுள்ளி - அனிச்சம், ஆச்சா, சிறுகம்பு.
சுள்ளை - மட்கலஞ்சுடுஞ்சூளை.
சுற்றல் - உடுத்தல், சூழுதல்.

சுற்று - பக்கம். (இரா) வட்டமாயோடல், மதில்.
* சுறவுக்குழை - மகரவாயணி.
சுறுக்கொளல் - சுருளல். (இரா)
சுனகன் - நாய்.

## சூ

* சூக்கம்-நுண்ணியது. (திருவி)
* சூக்குமதரம் - அதிகநுண்மை.
சூக்குமம் - வஞ்சகம், அற்பம், அணு, நுண்மை.
சூகரம் - பன்றி, ஒருவகைமான்.
* சூசகம் - காகம், நாய், பூனை.
சூசநம் - அறிவிப்பு, அபிநயம்.
சூசி - ஊசி, தருப்பை. (சப்த)
சூசுகம் - முலைக்கண்.
சூட்டு - நுதலணி, சுட்டது.
சூடகம் - கைவளையல்.
சூடம் - தலை, சிவன்சடை.
சூடாகரணம் - குடுமிவைத்தல்.
சூடாமணி - முடிமணி.
சூடிகை - முடி. (பார)
சூடை - முடி, மயிற்சிகை, தோளணி, ஆபரணம், கிணறு. (சப்)
* சூடைக்காசு - சூடாமணி.
* சூத்திரதாரன் - கூத்தாட்டுபவன்.
சூத்திரம் - சொற்ப எழுத்தமைந்த சொற்றொடராய்ப் பற்பல பொருள்களை அடக்கி வரும் நூற்பா, நூல், நியாயம்.
சூதநம் - அழித்தல், அங்கிகாரம்.
சூதம் - மாமரம், வண்டு, பாவம்.
* சூதன் - தேர்ப்பாகன், புகழ்வோன், பாணன், பாகஞ்செய்பவன்.
சூதிகை - பிள்ளைப்பெற்றவீடு.
சூது - உபாயம். (சிந்)
சூநு - மகன், தம்பி, சூரியன்.
சூர் - அச்சம், துன்பம், நோய், தெய்வம், கொடுமை.
சூர்த்தல் - அச்சங்கொடுத்தல், சுழலல்.
சூர்ப்பம் - சுளகு, ஒரளவு.
சூர்ப்பு - கொடுந்தொழில், அச்சம்.
சூரணம் - கருணைக்கிழங்கு, சுண்ணம்.
சூரத்துவம் - வீரம்.
சூரமகளிர் - தெய்வப்பெண்கள். (பிங்)
சூரல் - சூரைப்பூ, (குறி) பிரம்பு. (சேது)
சூரன் - சூரியன், வீரன், நாய்.
* சூராட்டி - படிமத்தாள்.
சூரி - காடுகாள், காளி, பண்டிதன்.
சூரியன் - சோழன், ஆதித்தன்.
சூல் - கருப்பம். (சேது)
சூலம் - இரேவதிநாள்.
சூலி - சிவன், காளி, கருப்பவதி.
சூலுதல் - தோண்டுதல். (சிந்)
சூழ்ச்சி - ஆராய்வு, உபாயம்.
சூழல் - ஆராய்தல், இடம்.
சூழி - நீர்நிலை, முகபடாம், உச்சி.
சூள் - ஆணை, சபதம்.
சூளாமணி - முடிமணி.
சூளிகை-யானைச்செவியடி, செய்குன்று, மேல்வீட்டின்முகப்பு, வீட்டினுச்சி.
சூளை - வேசை, மட்கலஞ்சுடுமிடம்.
சூறல் - தோண்டுதல். (பார)
சூறுவளி - சுழல்காற்று. (கந்த)

சூறை - கொள்ளை, சுழல்காற்று.
* சூறையாடல் - கொள்ளையாடல். (தணி)
சூறைகோடல்-கொள்ளையாடல்.
சூன்றல் - தோண்டுதல்.
சூனர் - ஊன்விற்பவர்.
சூனியம் - இன்மை, பாழ், குறைவு, ஆகாயம்.

## செ

செக்கர் - சிவப்பு, செவ்வானம்.
செகில் - தோள், (பொரு) தோண்மேல்.
செகுத்தல் - அழித்தல், கொல்லல்.
செங்கண்மா - கரடி, (உரிச்)
செங்கதிர் - சூரியன். (பிங்)
செங்களம் - போர்க்களம்.
செங்கீரையாடுதல் - சிறுபிள்ளை கைகால்களை ஊன்றித் தலைநிமிர்த்தாடல்.
செங்கை - திருவாதிரை.
செங்கொல் - பொன். (சிங்)
செங்கோடு - செருந்திமரம்.
செங்கோல் - நீதி, செவ்வியகோல்.
செங்கோற்கடவுள் - இயமன்.
செச்சை - சந்தனக்குழம்பு, சட்டை, வெள்ளாடு, வெட்சி.
செஞ்சாலி - செந்நெல்.
* செஞ்செவ் - செப்பம். (இரா)
செஞ்சொல் - எளிதிற்பொருள் பயக்குஞ்சொல், செந்நெல்.
செட்டி - முருகக்கடவுள்.
செடி - ஒளி, பாவம், குணமின்மை. (பிங்)
* செண்டாடல் - பந்தாடல்.
செண்டாயுதன் - மாசாத்தன்.
செண்டு - பந்து, குதிரைசெலுத்தும்வீதி, பூஞ்செண்டு.
செண்ணம் - வடிவு. (இரகு)
செதிள் - தூள், (சிந்) தோல்.
செதுக்கு - வாடல். (பெரு)
செதுக்கை - உடற்றழும்பு.
* செதுத்தல் - சீவுதல். (சிந்)
செதும்பு-சேறு, பொல்லாநிலம்.
* செதுமொழி - பொல்லாமொழி. (கலி)
* செதுவது - அழிந்தது. (தணி)
செந்தாது - பொன். (இரகு)
செந்திணை - கம்பு, சிவந்ததிணை.
செந்தீவண்ணன் - செவ்வாய்.
செந்து - அணு, பிராணி, உயிர்.
செந்நீர்-இரத்தம், புதுநீர். (சிந்)
செப்படிப்பவர் - செப்படிவித்தைக்காரர். (பார)
செப்பம்-வழி, நடுநிலை,செவ்வை, தெரு. (பிங்)
செப்பு - வார்த்தை, மறுமொழி.
செம்பால் - இரத்தம். (பிங்)
* செம்புனல் - இரத்தம். (கந்)
* செம்புணீர் - இரத்தம். (பார)
செம்புலம் - போர்க்களம், பாலைநிலம்.
செம்பொருள் - கடவுள்.
செம்மணி - மாணிக்கம். (பார)
செம்மல் - தருக்கு, (வள்) பெருமை, வலி, பழம்பூ, பெருமையிற் சிறந்தோன், மகன்.
செம்மாத்தல்-இறுமாந்திருத்தல், வீற்றிருத்தல்.
செம்மாப்பு - இறுமாப்பு, வீற்றிருக்கை.
* செம்முதல் - மூடுதல். (இரா)

செம்மை - சிவப்பு, செவ்வை, தலைமை, பெருமை.
செய் - வயல், செய்தல்.
செய்தி - காரியம், ஒழுக்கம்.
செய்யல் - சேறு, ஒழுக்கம்.
* செய்யவன் - செம்மையுடையான். (கந்)
செய்யாள் - இலக்குமி. (பிங்)
செய்யுள் - பாட்டு, வயல்.
செயலை - அசோகமரம். (திருமு)
செயிர் - கோபம், குற்றம்.
* செயிர்ப்பு - குற்றம். (செந்)
செயிரியர் - பாடன்மாந்தர்.
செரு - யுத்தம். (சேது)
செருக்கு - அகங்காரம், களிப்பு.
செருத்தல் - முலைமடி. (சிந்)
செருந்து - செருந்தி. (வாண)
* செருமகள் - துர்க்கை. (வாண)
செல் - இடி, மேகம், கறையான்.
செல்லல் - போதல், துயர்.
செல்வன் - அரசன், மகன்.
செல்வி - மகள், இலக்குமி.
செலவயர்தல் - போதல்.
* செலவழுங்கல் - போக்கொழிதல்.
செலவு - செல்வம், (பார) வழி, போதல்.
செவ்வி - தக்ககாலம், (வள்) காலம், பருவம், அழகு.
* செவ்வெனல் - சிவத்தல். (சில)
செவிட்டல் - அழித்தல். (பிங்)
* செவிமடுத்தல் - கேட்டல்.
செவிலி - அக்காள், வளர்த்ததாய்.
செழியன் - பாண்டியன். (திருவி)
செழுமை - அழகு, கொழுப்பு, மாட்சிமை.
செற்றம் - தணியாக்கோபம்.
செற்றலர் - பகைவர்.
செற்றார் - பகைவர். (பிங்)
செற்றுதல் - பின்னுதல், நெருங்கல்.
செற்றை - சிறுதூறு. (பெரு)
செறல் - கோபம், கொலை. (சிந்)
* செறிஞர் - உறவர். (இரா)
செறித்தல் - அடைத்தல். (புற)
செறிதல் - நெருங்குதல், பொருந்தல், மிகுதல்.
* செறிப்பு - அடக்குதல். (வெண்)
செறிவு - நெருக்கம், மிகுதி, அடங்குதல்.
செறு - வயல், சிறுவயல்.
செறுத்தல் - கொல்லல், கோபித்தல்.
செறும்பு - பொருக்கு, (இரா) தணியாக்கோபம். (சிந்)
சென்னி - தலை, சோழன், பாணன்.
* செனகன் - பிதா. (பார)
* செனனி - தாய். (பார)

## சே

சே - எருது, அழிஞ்சின்மரம்.
* சேக்குதல் - கிடத்தல், தங்கல்.
சேக்கை - சயநம், தழும்பு, முலை.
சேகண்டி - சேமக்கலம்.
சேகரம் - தலை, முடி, மாமரம்.
* சேகிலி - வாழை. (பிங்)
சேகு - வயிரம். (கந்)
சேகை - சிவப்பு. (கந்)
சேட்டன் - மூத்தோன்.
சேட்டை - தொழிற்படல், மூதேவி, முன்பிறந்தவள், விசாகம், சுளகு, பெருவிரல்.
* சேட்படுத்தல் - தூரப்போக்கல்.

சேடம் - மிச்சம். (சேது)
சேடன் - பெரியோன், (சிந்) இளைஞன், அடிமை, தோழன்.
சேடி - தோழி, வித்தியாதரருலகு, இடையர்வீதி.
சேடித்தல் - மிஞ்சிநிற்றல்.
சேடு - அழகு, திரட்சி, நன்மை, பெருமை.
* சேடெறிதல் - சேறுக்கல்.
சேடை - மாக்காப்பு, நிர்மாலியமாலை.
சேண் - மலையினுச்சி, நீளம், உயர்வு, ஆகாயம், தூரம்.
சேணம் - கல்லணை, மெத்தை.
சேணி - ஏணி, வரிசை.
சேத்தல் - சிவத்தல், துயிலல், தங்கல்.
சேத்திரம் - உடம்பு,வயல்,தலம்.
சேத்து - ஐயம், கருத்து, ஒப்பு, சிவப்பு. (பிங்)
சேதகம் - சேறு, செந்நிறம்.
சேதநம் - அறிவுடைப்பொருள், வெட்டுதல்.
சேதா - செந்நிறப்பசு, செயிப்பவன்.
சேதாரம் - மாமரம். (பிங்)
சேதித்தல்-அறுத்தல், வெட்டல்.
சேதிமம் - தேவர்கோவில்.
சேது - நீர்தடுக்கும்வரம்பு, சிவப்புநிறம்.
சேந்தன் - முருகக்கடவுள்.
சேமம் - காவல், நன்மை.
சேய்-இளமை, புதல்வன், நீளம், செவ்வாய், சிவப்பு. (பிங்)
சேய்மை - தூரம், நீளம்.
* சேர்ப்பர் - பரதவர். (தணி)
சேர்ப்பு - கடற்கரை. (புற)
* சேர்விடம்-துயிலிடம் (பிங்)
சேர்வு - திரட்சி, வீடு, ஊர்.
சேரலர் - பகைவர்.
சேவகம் - யானைதுயிலிடம், வீரம், கூலித்தொழில்.
சேவல் - காவல், கோழி.
* சேவை - வழிபாடு, தொண்டு.
சேறு - விழா, இனிமை, தேன்.
சேனம் - பருந்து. (திருவி)

## சை

சைங்கிகேயன் - இராகு. (சப்த)
சைசவம் - இளமை.
சைத்தியன் - சுக்கிரன். (பிங்)
சைத்திரரதம் - குபேரன்சோலை.
சைதந்நியம் - அறிவு.
சைந்தவம் - குதிரை.
சையம் - மலை, கல்லு.
சையோகம் - புணர்ச்சி.
சைலம் - மலை. (திருவி)
* சைவரல்-இகழ்வுறல்.(சங்கற்)
சைவலம்-பாசி,தாமரைத்தண்டு.

## சொ

சொக்கு - அழகு, பொன், மயக்கு.
* சொட்டை - குறும்பிடி.
* சொத்து - பொருள். (இரா)
சொம் - பொருள்.
சொரிதம் - நலிதல். (திருவி)
சொல் - நெல்லு, புகழ். (சிந்)
* சொல்லாடல் - சொல்லல்.
சொலித்தல் - இடந்திடல், ஒளிர்தல்.
சொன்றி - சோறு. (சேது)
சொன்னம் - பொன். (சேது)
சொன்னல் - சோளம். (தணி)

## சோ

சோ - மதில். (விநா)
சோகம் - திரட்சி, சோம்பல், துயர், தயை.
சோகாத்தல் - துயருறல். (வள்)
சோகித்தல் - துயருறல். (சித)
* சோகிதர் - துயருற்றவர்.
சோகு - பிசாசம். (சூடா)
சோடசம் - பதினாறு.
* சோடணம் - வறட்டுதல்.
* சோடை - வறட்சி. (தணி)
சோணம் - சிவப்பு, அக்கினி.
சோணிதம் - இரத்தம், சிவப்பு.
* சோத்தம் - அஞ்சலி. (திருக்)
சோத்திரம் - காது.
* சோத்து - அஞ்சலி. (தேவா)
* சோதகன் - ஆகமங்களை அறிவிக்கும் குரு. (சைவ)
சோதரன் - சகோதரன்.
சோதரி - சகோதரி.
சோதனம்-சுத்தி, சுத்திசெய்தல்.
சோதனி - துடைப்பம். (சேது)
* சோதனை - இலக்கியத்திலே இலக்கணம் உண்டோ இன்றோ என்றாராய்தல், (திருவி) பரீக்ஷை.
சோதி - ஒளி, சூரியன், சிவன், இரவெரிமரம், அருகன்.
* சோதியான்—சூரியன். (இரா)
சோபநம் - பல்லாண்டு, ஒளி, தாமரை, வாழ்த்து, நன்மை.
சோபாநம் - தாழ்வாரம், கற்படி, படி.
* சோபாலிகை - வெண்ணொச்சி, அடம்பு. (திவா)
சோபை - அழகு, ஒலி.
சோமம்-ஆட்டாங்கொடி, வாயு, நீர், அமுதம். (சப்த)
சோமன் - சந்திரன், சிவன்.
* சோமன்புத்திரி - நிருமதையாறு.
சோர்தல் - வடிதல், (புற) தளர்தல், சொரிதல்.
சோரம் - களவு. (பார)
சோரி - இரத்தம். (சேது)
சோணை - திருவோணம், விடாமழை.

## சௌ

* சௌகரியம் - ஆயாசமின்றி முடிக்கத்தக்கது.
சௌசம் - சுத்தி.
சௌண்டிகன் - கள்விற்பவன்.
சௌதாமினி - மின்னல்.
சௌந்தரி - உமாதேவி, அழகி.
* சௌபலன் - சகுனி. (பார)
சௌமியன் - புதன், சிவன்.
சௌரி - சனி, கன்னன், விட்டுணு.
சௌரியம் - களவு, வீரம்.
சௌளம் - குடுமிவைத்தல்.

## ஞ

ஞமலி - நாய், மயில், கள்.
ஞரலல் - முழங்கல். (திருமு)
* ஞலவல் - நுளம்பு. (பிங்)

## ஞா

ஞாங்கர் - முன், (தொல்) பக்கம், வேல்.
ஞாஞ்சில் - கலப்பை. (சேது)
ஞாட்பு-யுத்தம், பாரம். (சேது)
ஞாதம் - அறிவது, (பார) அறியப்பட்டது.(சப்த)

ஞாதி - பிதாவழிச்சுற்றத்தான்.
ஞாதியர் - பிதாவழிச்சுற்றத்தார்.
ஞாதிரு - அறிபவன். (சுப்த)
* ஞானசாதனம் - இந்திரியம்.
ஞானம் - அறிவு.
* ஞானமயன் - கடவுள்.
ஞானன் - பிரமா. (பிங்)
ஞானி - மெய்யுணர்வுடையவன், பிரமன், அருகன்.
* ஞாபகம்-அறிவிப்பது, அறிவு.
* ஞாபனம் - அறிவிப்பு.
* ஞாய் - தாய். (கலி)
ஞாயம் - நியாயம். (பார)
* ஞாயர் - தாயர். (கலி)
ஞாயில் - மதிலுறுப்பு. (சேது)
ஞாலம் - பூமி. (கந்)
* ஞாலுதல் - தொங்கல், (சிந்) வீழ்தல். (புற)
* ஞாழல் - ஞாழன்மரம், கோங்கு. (திவா)
ஞாளி - கள், நாய். (சூடா)
ஞாளிகம் - வள்ளைக்கொடி.
ஞாளியூர்தி - வைரவன்.
ஞாற்சி - தொங்குதல்.

## ஞி

ஞிமிர்தல் - ஒலித்தல்.
ஞிமிறு - வண்டு, பொன்வண்டு.

## ஞெ

ஞெகிழம் - சிலம்பு, (சில) ஓசை செய்தலை.
ஞெகிழி - சிலம்பு, நெருப்புக் கொள்ளி, தீக்கடைகோல்.
* ஞெமலல் - பரத்தல். (புற)
ஞெமிர்த்தல் - முரித்தல்.
ஞெமிர்தல்-பரத்தல், முரிதல்.
ஞெமுங்கல் - அழுந்துதல்.
ஞெரேலெனல் - விரைதல். (கந்)
ஞெலிகோல் - கடைகோல்.
ஞெலிதல் - கடைதல். (பெரு)
ஞெள்ளல் - பள்ளம், தெரு, மேன்மை,(பி)சோர்வு. (திவா)

## ஞே

ஞேயம் - அறியப்படும்பொருள்.

## ஞொ

ஞொள்கல் - குலைதல். (பிங்)
ஞொள்குதல் - சோம்புதல்,அலைதல், இளைத்தல்.

## த

தக்கர் - நிபுணர், தளர்வில்லாதவர், காரியம் முடிக்குந்திறலோர். (இரா)
தக்கிணம் - தெற்கு,வலப்பக்கம்.
தக்கிரம் - மோர். (சூடா)
தகடு - புறவிதழ், (புற) இலை, இலைபோன்ற மெல்லியவடிவு.
தகண் - தடை. (சிந்)
தகர் - மேட்டுநிலம், (புற) ஆடு.
தகரம்-தகரமரம், மயிர்ச்சாந்து.
* தகல் - தடை. (பார)
தகவு - நடுநிலை, குணம், அருள்.
தகுணிதம் - வாச்சியம்.
தகுதி - நடுவுநிலை, குணம், ஒழுக்கத்தாலுயர்தல், உரிமை.
தகுவர் - அசுரர். (கந்)
தகை - அழகு, அன்பு, (உரிச்) அருள், பெருமை, குணம், தடை, கூறுபாடு.
தகைதல் - தடுத்தல். (பார)
தகைமை - அழகு, குணம், பெருமை.
* தங்கல் - அடங்கல். (வள்)

* தசகண்டன் - இராவணன்.
தசநம் - பல்லு, கவசம். (சப்த)
தசம் - பத்து. (இரகு)
* தசமுகாதி - கங்கை. (பிங்)
தசும்பு - குடம், கிடாரம், மிடா.
தசை - நிலை, ஊன். (சிந்)
தஞ்சம்-எளிமை, பற்றுக்கோடு, தாழ்வு, துணை.
* தஞ்சு - பற்றுக்கோடு. (கம்ப)
தட்டம் - உண்கலம், பல்லு, பாம் பின்பல்லு, தட்டுதல்.
* தட்டல்-தடுத்தல், (புற) முட் டல்.
தட்டி-அரைச்சல்லடம், (கந்த) காவல், பரிசை, கதவு.
தட்டு - தீங்கு, குற்றம், பரிசை, வட்டம், சுளகு, தடை.
* தட்டுளுப்பு - தடுமாற்றம்.
தட்டை - மூங்கிலைக் கணுக்கணு வாகப்பிளந்து கிளியோப்புத ற்கு ஒன்றிடைக்குங் கருவி, (கந்த) கரடிகைப்பறை, மூங் கில், தினைத்தாள். (பிங்)
தடத்தம் - அருகிலிருப்பது, கரை யிலிருப்பது. (சப்த)
தடம் - விசாலம், குளம், மலை, மலைப்பக்கம், நீர்க்கரை.
* தடவரல் - வளைவு, (புற) தட வுதல்.
தடவு-நெருப்பிடுங்கலம், வளைவு, பெருமை, ஓமகுண்டம். (பிங்)
தடறு - படைகளினுறை. (விநா)
தடா - பெருமை, (சேது) மிடா.
தடாரி - பம்பை, உடுக்கை.
தடி - வில்லு, தசை, உடும்பு, தண்டாயுதம், வயல், மின்னல்.
தடித்தல் - பருத்தல். (இரா)
தடித்து - மின்னல். (கந்த)
தடிதல் - வெட்டல், குறைத்தல்.
தடிநி - யாறு. (சப்)
தண்சுடர் - சந்திரன். (பிங்)
தண்டதரன் - அரசன், இயமன்.
தண்டம்-சேனை, யானைசெல்வழி, குதிரை, தண்டித்தல், திரவிய சாலை.
தண்டலை - சோலை, தோட்டம்.
தண்டனிடல்-வணங்கல், (சேது)
தண்டாமை - நீங்காமை.
* தண்டாவனம்-தண்டகவனம்.
* தண்டிலம் - ஓமாக்கினிதாபி க்கும்பொருட்டுச் சதுரமாக மணல்பரப்பிய இடம். (இரா)
தண்டு - ஓந்தி, சிவிகை, வீணை.
தண்டுதல் - கோடுதல், (வெண்) தணிதல், நீங்குதல்.
தண்டுலம் - அரிசி.
* தண்டை - பரிசை. (தணி)
தண்ணடை - நாடு, மருதநிலத் தூர். (சேது)
தண்ணம் - ஒருகட்பறை, மழு.
தண்ணவன் - சந்திரன். (பிங்)
* தண்பணை - மருதம். (நைட)
தண்மை - எளிமை, புல்லறிவு, தாழ்வு.
தணத்தல் - பிரிதல், நீங்குதல்.
தணியல் - கள். (ஞான)
தத்தம் - கொடுக்கப்பட்டது.
தத்துவம்-உண்மை, பரமான்மா.
தத்தை - கிளி, தமக்கை. (பிங்)
ததர்தல் - சிதறல். (கலி)
ததி - கூட்டம், தயிர். (பார)
ததும்பல் - நிறைதல். (பிங்)
ததைதல் - நெருங்குதல்.
தந்தம் - பல்லு, யானைக்கொம்பு.

தந்தாவளம் - யானை. (பார)
தந்தி-பாம்பு,யானைமீன்,(கந்த) யானை, யாழ்.
தந்திரம் - நூல், பிரதானம், சேனை, காரணம், செல்வம், வீடு. (சப்த)
தந்திரி - கருமம்முடிப்பவன், யாழ்நரம்பு, சோம்பல்.
தந்து - நூல், சந்ததி. (சப்த)
* தந்துவாயன் - நெய்வான்.
தநதன் - குபேரன், தநங்கொடுப்பவன்.
தபதி-தச்சன், தலைவன். (சப்த)
தபநம் - தாகம், வெப்பம்.
தபநன் - சூரியன், அக்கினி.
தபநியம் - பொன். (சப்த)
* தபுத்தல் - கெடுத்தல், கொல்லல்.
தபுதல் - கெடுதல், சாதல்.
* தபுதி - கேடு, சாவு.
தபுதாரம் - தாரமிழந்தநிலை.
தம்பதி - நாயகனும் நாயகியும்.
தம்பம்-கபடம், தூண், சட்டை.
* தம்பல் - தம்பளம். (இரா)
தம்பலம் - இந்திரகோபம். (பி)
தம்மனை - தாய். (மணிமே)
தம்மில்லம் - மயிர்முடி. (சூடா)
தம்முன் - தமயன். (பார)
தமம் - புறக்கரணங்களை யடக்கல், இராகு, இருள்.
தமர் - சுற்றம், துளை. (உரி)
தமருகம் - உடுக்கு.
தமனகம் - மருக்கொழுந்து.
தமாலம் - இலை, பச்சிலைமரம்.
தமிச்சிரம் - இருள், கோபம்.
* தமித்தல் - தனித்தல். (புற)
தமிழ் - இனிமை, நீர்மை. (பிங்)
* தமை - புறக்கரணமடக்கல்.
தயக்கம் - விளக்கம், அசைவு.
தயங்குதல் - விளங்குதல், அசைதல்.
தயா - இரக்கம், அன்பு. (இரா)
தரக்கு - புலி, சிறுபுலி. (சப்த)
தரங்கம் - திரை, துன்பம். (கந்)
தரங்கிணி - யாறு. (சப்த)
* தரங்கித்தல் - துயருறல்.
* தரங்கு - வழி. (பிங்)
தரணம் - கடத்தல், தரித்தல்.
தரணி - பூமி, சூரியன், மலை, ஓடம், (பி) மருத்துவன். (சித்)
* தரணிபன் - அரசன். (பார)
தரம் - வகை, உயர்வு, தலை, பெலம், வீரம், முறை.
தரளம் - அசைவு, முத்து, ஒளி.
தராதரம் - மலை, உயர்வுதாழ்வு, (திருவி)
தரா்பதி - அரசன்.
தராமரன் - வேதியன். (சப்த)
தராய் - பிரமி. (சிந்)
தராவலயம் - பூகோளம்.(இரா)
தரிசநம் - கண், கனவு, கண்ணாடி. (சப்த)
தரியலர் - பகைவர். (பார)
தருக்கம் - அறிவுக்குக் கருவியான ஆராய்ச்சி, அவாய்நிலை, ஊகம். (சப்த)
தருக்கு - செருக்கு, களிப்பு.
தருணம் - இளமை, புதுமை.
தருப்பணம் - கண்ணாடி, ஓமவிறகு. (சப்த)
தருப்பம் - கெர்வம், அகங்காரம்.
* தருமநூல்-மிருதிநூல்.(இரகு)
தருமம் - நல்வினை, தன்மை.

தருவி - அகப்பை. (சிந்)
தல் - புணர்ச்சி. (சூடா)
தலம் - இடம், இலை, பூமி.
தலை - முதல், முதன்மை, பெருமை.
* தலைக்கீடு - கபடம், சாட்டு.
தலைத்தலை - ஒன்றற்கொன்று.
தலைப்படல் - எதிர்தல். (இரா)
* தலைப்பாடு - நேர்படல், கூடல். (புற)
* தலைபுலை - உயர்வு தாழ்வு.
தலைமகன் - கணவன், தலைவன்.
தலையல் - முதன்மழை, மழைவிடல். (பிங்)
* தலையிழிபு - தாழ்வு. (சூடா)
தவ்வுதல் - ஒடுங்குதல். (தணி)
தவ்வெனல் - ஒடுங்குதல், குறைதல். (தணி)
தவ்வை - தமக்கை, மூதேவி.
தவ - மிகுதி, குறைவு. (திவா)
தவர் - முனிவர், வில்லு.
தவல் - கெடல், (வெண்) இறத்தல், (புற) குறைவு.
தவழ்தல் - பரத்தல். (சிந்)
தவளம் - வெண்மை, அழகு.
தவறல் - இறத்தல், வழுவுதல்.
* தவனம் - வெம்மை. (சேது)
தவிசு-மெத்தை, தடுக்கு, பீடம்.
தவிர்தல் - தங்குதல், ஒளிர்தல்.
தழங்குதல் - ஒலித்தல்.
தழல் - கையாற் சுற்றினகாலத்துத் தன்னிடம் பிறக்கும் ஓசையாற் கிளிமுதலியவற்றை ஓட்டுங் கருவி, "தட்டைகுளிர்தழலை" (கந்த) கவண், நெருப்பு.
தழாஅல் - தழுவுதல். (மலைபடு)
தழிஞ்சி - ஓட்டினர் மேற்சாராமை.
* தழூஉ-குரவைக்கூத்து. (மது)
தழை - இலை, பீலிக்குடை, மயிலிறகு.
தள்ளல் - தடுமாறல், (இரா) பொய், குற்றம்.
தள்ளாடுதல் - அசைதல். (இரா)
* தள்ளாவாரம் - சோம்பு. (பி)
தளம் - இலை, சேனை, சாந்து, பூவிதழ்.
* தளம்பு - அசைவு. (பார)
தளவு - முல்லை, செம்முல்லை.
தளி - துளி, கோவில், குளிர்.
தளிகை - உண்கலம்.
* தளித்தல் - பூசுதல். (சிந்)
தளிமம் - அழகு, மெத்தை.
* தளிர்ப்பு - குளிர்ச்சி. (இரா)
தளை - ஆண்மயிர், கட்டு, காற்சிலம்பு, கயிறு, வரம்பு.
தளைத்தல் - கட்டுதல்.
தற்பம் - துயிலிடம், மனைவி.
தற்பரன் - கடவுள்.
தற்போதம் - தன்னறிவு.
தற்றல் - இறுக்குதல். (வள்)
தறி - தூண், ஆப்பு.
தறுகண் - விரைந்துகொல்லல், (சிறு) அஞ்சத்தக்கனவற்றிற்கும் அஞ்சாமை, கொடுமை.
தறுகண்மை-கொடுமைக்குணம்.
தன்கு - உள்ளக்களிப்பு.
தன்மம் - தருமம்,வேதம். (பிங்)
* தன்மாத்திரை - விடயம்.
* தன்மிட்டன் - தருமவான்.
தன்மை - இயல்பு, இயல்புடையது.
தன்னம் - அற்பம். (சூடா)

தனஞ்செயன் - நெருப்பு, அர்ச்சுனன்.
தனம் - பொன், முலை, தன்மை.
தனயன் - புதல்வன். (சேது)
தனயை - புதல்வி. (இரா)
தனிகன் - செல்வன்.
* தனிசு - கடன். (சிந்)
தனிதம் - முழக்கம். (பார)
தனு - உடம்பு, வில், சிறுமை.
* தனுவேதி - வில்வித்தையறிந்தவன். (பார)

## தா

தா-பரப்பு, வலி, வருத்தம், கேடு, பகை.
தாக்கணங்கு-இலக்குமி. (சேது)
* தாக்காயணி - உமாதேவி.
தாக்கு - யுத்தம், எதிர்த்தல்.
தாக்குதல் - தாவிப்பற்றல், வெட்டல், (புற) பாய்தல், அடித்தல்.
தாகம் - விடாய், வெம்மை.
தாங்கல் - பூமி, (இரா) குளம், தாங்குதல்.
தாங்கி - தாங்குவது, பூண்.
* தாசரதி - இராமன். (இரா)
தாசன் - அடியவன், பரதவன்.
தாசி - அடியவள், பரணிநாள்.
தாசேரம் - ஒட்டகம்.
தாட்டாந்தம் - திருட்டாந்தத்தாலே முடிக்கப்பட்டது.
* தாட்படுத்தல் - கிழாக்கல்.
தாட்படை - கோழி. (கந்த)
தாடங்கம் - காதணி, தோடு.
தாடநம் - அடித்தல், தட்டல்.
தாடி - விரலுறை, (சிந்) மோவாய்.
தாடிமஞ்சம் - சத்திக்கொடி.
தாடிமம் - தாதுமாதுளை.
தாண்டவம் - கூத்து, தாவல்.
தாணு - நிலைபேறு, தூண், மலை, சிவன். (பிங்)
தாத்திரி - பூமி, மாதா.
* தாத்துவிகம் - தத்துவசம்பந்தங்கள்.
தாதகி - ஆத்தி. (வாதவூ)
தாதன் - அடியவன், பிதா.
தாதா - கொடையாளி.
தாதான்மியம் - பேதமின்மை.
தாதி-அடியவள், செவிலித்தாய்.
தாது-காவிக்கல், பொடி, பொன் முதலிய உலோகம், நாடி, தேன்.
தாந்திரிகம் - தந்திரசம்பந்தம்.
* தாநி - ஆதாரம். தாந+இ.
* தாபதநிலை - விதவைவிரதம்.
தாபதம் - முனிவர்வீடு. (சேது)
தாபதர் - முனிவர். (சிந்)
தாபம் - வெம்மை, பிரயாசம்.
தாம்பிரம் - செம்பு, சிவப்பு.
தாம்பு - கயிறு, பசுக்கயிறு.
தாம்பூலி - வெற்றிலைக்கொடி.
* தாமநி - பசுக்கட்டுங்கயிறு.
தாமம் - மாலை, பூ, மணிவடம், ஊர், ஒளி, கயிறு, கொன்றை, சார்பு, இடம், பிறப்பு.
தாமரசம் - தாமரை, பொன்.
தாமன் - சூரியன். (பார)
தாமிச்சிரம் - நள்ளிருள். (சப்த)
தாயத்தார்-தங்குடிச்சுற்றத்தார்.
தாயம் - உரிமை, இடம். (சப்த)
தாயாதன் - பிதிர்வழியான்.
தார் - மாலை, பூ, முற்படை, கிங்கிணிமாலை. (பிங்)

* தார்க்கிகன் - தர்க்கசாத்திரி.
தார்க்கியன் - கருடன்.
* தார்த்தராட்டிரர் - திருதராட்டிரன் புத்திரர். (பார)
* தார்மிகன் - தருமசீலன்.
தாரகம் - பிரணவம், ஆதாரம்.
* தாரகன் - கடப்பிப்பவன்.
தாரகாகணம் - நட்சத்திரக்கூட்டம். (சேது)
தாரகாபதி - சந்திரன். (பார)
* தாரகாரி - முருகக்கடவுள்.
தாரகை - நட்சத்திரம்.
தாரணம் - தரித்தல்.
தாரணி - பூமி.
தாரணை - மனத்தினை ஒருவழி நிறுத்துதல், நியாயநெறி, நிச்சயம்.
தாரதம்மியம் - உயர்விழிவு.
தாரம் - மனைவி, வெள்ளி, வீணையினொருநரம்பு, உச்சவிசை, அரும்பண்டம், தரா, நாக்கு.
தாராதரம் - மேகம். (சப்த)
தாராபதி - சந்திரன்.
தாராபந்தி - நட்சத்திரவரிசை.
தாரி - வழி, தரிப்பவன். (கந்த)
* தாரிணி - பூமி, இலவமரம்.
தாரு - மரம், மரக்கொம்பு.
தாருணம் - பயம், துக்கம்.
தாரை - கண்மணி, விண்மீன், நேரோடல், கூர்மை, நீரொழுக்கு, சிறுசின்னம், பெருமழை, கீர்த்தி, கூந்தற்கமுகு.
தால் - தாலாட்டு.
தாலகேது - பலராமன். (பார)
தாலம் - தட்டு, (இரா) உண்கலம், பனை, பூமி, நாக்கு, பாகபாத்திரம்.
தாலவட்டம் - யானையின்வால்.
தாலவிருந்தம் - விசிறி.
தாலிபுலாகநியாயம் - ஒருபானை சோற்றுக்கு ஓரவிழ்பதம் பார்ப்பதுபோலக் கொள்ளும் நியாயம்.
தாலு - நாக்கு.
தாவடி - யுத்தம்.
தாவநம் - சுத்தி.
தாவம் - காடு, காட்டெரி.
தாவரம் - நிலையியற்பொருள், மலை, உடம்பு, மரம்.
தாவளம் - ஊர், இடம். (பிங்)
தாவுதல் - பரத்தல், பாய்தல், செல்லல், குறைதல். (இரா)
தாழ் - திறவுகோல். (சிங்)
தாழ்தல் - விரும்புதல், தங்கல், தாமதித்தல், கீழாதல்.
தாழ்வு - மலையடி, (சிங்) இழிவு.
தாழக்கோல் - திறவுகோல்.
* தாழம் - தாமசம், (தொல்.)
தாழி - சாடி. (பார)
தாழை - தெங்கு, தாழைமரம்.
தாள் - பாதம், முதல், முயற்சி.
தாளாண்மை - முயற்சி.
தாளி - அறுடம், பனை.
தாற்பரியம்-சொல்வான்கருத்து.
தாற்றுக்கோல் - முட்கோல்.
தாறு - இருப்புமுள், குலை.
தானம் - இடம், கொடை, வலி, யானைமதம், தேவுலகம்.
* தானாகரன் - கொடையாளி.
தானை - சீலை, ஆயுதம், சேனை.

## தி

திக்கயம் - திக்கிலுள்ளயானை.
திக்காரம் - நிந்தித்துத்தள்ளல்.
திகம்பரன் - அருகன், சிவன்.

திகழ்தல் - விளங்குதல்.
திகாந்தம் - திக்கின்முடிவு.
திகிரி - மலை, சக்கரப்படை, வட்டம், தேர், தேர்ச்சில்லு, மூங்கில். (பிங்)
திகை - திசை, தேமல். (பிங்)
திங்கணாள் - மிருகசீரிடம்.
திங்கள் - மாதம், சந்திரன்.
* திசாதிசை - திசைதோறும்.
திசாமுகம் - திக்கு.
* திசைத்தல்-திகைத்தல். (இரா)
திசைமுகன் - பிரமா.
திட்கல் - அச்சக்குறிப்பு.
* திட்டாந்தம் - உதாரணம்.
திட்டி - கண், மேடு.
* திட்டிவிடம் - கண்ணில் விடமுடையபாம்பு. (மணி)
திட்டை - மேடு, உரல், திண்ணை.
திட்பம் - திண்மை.
திடம் - உறுதி, வலி, கடினம்.
* திடுக்கம் - நடுக்கம். (இரா)
திண்டாட்டம் - கலக்கம்.
திண்ணகம் - செம்மறிக்கடா.
* திண்ணெனவு - உறுதி. (பெரி)
திண்மை - உறுதி, வலி.
திணிதல் - நெருங்கல். (புற)
* திணுக்கு - நடுக்கம். (இரா)
திணை - நிலம், குலம், ஒழுக்கம்.
தித்தம் - கைப்பு.
தித்திரி - சிச்சிலிக்குருவி.
திதம் - அசைவின்மை.
திதலை - தேமல்.
* திதனி - தேமல். (சலி)
திதி - காவல், நிலைபேறு, அசுரமாதா, நெறியினிற்றல். (சப்த)
திந்திடீகம் - } புளியமரம்.
திந்திரிணி - }
* திங்நாகம்-திக்கியானை. (இரா) திக்+நாகம்.
* திநகாரி - சூரியன். (பார)
திநமணி - சூரியன்.
* திநமுகம் - உதயம். (இரகு)
* திப்பியம் - மேன்மை.
திமிசு - வேங்கைமரம். (சிந்)
* திமிதம் - அசைவின்மை.
* திமிர் - அகங்காரம். (பழம)
* திமிர்த்தல்-அடித்தல். (கல்லா)
திமிர்தல் - பூசுதல். (சிந்)
திமிரநாசனன் - சூரியன். (பார)
திமிரம் - இருள்.
திமில் - மரக்கலம், எருத்தின்முரிப்பு.
திமிலம் - பேரொலி.
திமிலர் - நெய்தனிலமாக்கள்.
தியக்கம் - கலக்கம்.
தியாகம் - கொடை, கைவிடல்.
தியாச்சியம் - தள்ளற்பாலது.
தியாநம் - மனத்தை வேறுவழியிலே விடாமற் கடவுளிலே நிறுத்துதல், சிந்தித்தல். (சப்த)
திரங்கல் - சுருங்கல், மிளகு.
* திரங்குதல் - உலர்தல், (மலை) சுருளுதல், "திரங்குசெஞ்சடை" (இராமா)
திரட்சி - கூட்டம்.
திரட்டு - திரட்டப்பட்டது.
* திரபு - பித்தளை. (சிவத)
திரம் - நிலைபேறு, உறுதி, மலை, பூமி.
திரயம் - மூன்றன்கூட்டம்.
திரவம் - பொசிதல்.
திரவியம் - பொன், பொருள்.
திராவிடம் - தமிழ்மொழி.
திரிகடுகம்-சுக்கு திப்பலி மிளகு

என்னும் உறைப்புப்பொருள் மூன்றுங்கூடியது. (சப்த)
* திரிசிகை-சூலப்படை. (இரா)
* திரித்தல் - திருப்புதல்.
திரிதல் - சுழலல், வேறுபடல்.
திரியதகை - கங்கை.
திரியலை-கடுநெல்லி தான்றி என்னும் மூன்றுங்கூடியது. (சப்)
திரிபு - செய்யுளிலே அடிதோறும் இரண்டாம் எழுத்துத் தொடங்கிப் பத்துவரையும் ஒன்றாயிருக்க அமைக்கும் பிரபந்தம், ஒன்றினை மற்றொன்றாகத் திரித்துணர்தல்.
* திரிபுடம் - மல்லிகை. (சப்த)
* திரிபுடி - ஒன்றற்கொன்று சம்பந்தமான மூன்று பொருள்கள். அவை காண்பான் காட்சி காட்சிப்பொருள் என்பன. திரி - மூன்று. புடம்-ஒன்றற்கொன்று சம்பந்தம்.
திரிபுண்டரம் - நெற்றியிலே பூசும் விபூதியாலாய முக்குறி.
திரிபுரம் - முப்புரம்.
திரிபுராந்தகன் - சிவன். (பிங்)
திரிபுரி - சாறடை.
திரிவு - தவறு. (வெண்)
திரு-நல்வினை, (சிங்) இலக்குமி, செல்வம், அழகு, தெய்வவுத்தி.
* திருக்கம் - வளைவு. (இரா)
திருக்கு - கண், வளைவு, வஞ்சகம், முறுக்கு. (இரா)
* திருக்குதல் - முறுக்குதல், (சிங்) முறுக்கிப்பறித்தல், வளைத்தல்.
திருகுதல் - மீறுதல், முறுகுதல், பறித்தல், வளைதல்.
திருட்டாந்தம் - சாத்திரம், உதாரணம்.
திருட்டி - கண், பார்வை.
* திருணபதி - பனை. (பிங்)
திருணம் - புல்லு, துரும்பு.
திருத்தம் - ஒழுங்கு, தீர்த்தம்.
திருந்தலர் - பகைவர்.
திருந்தார் - பகைவர்.
திருமரம் - அரசமரம்.
திருமலர் - தாமரை.
திருமறுமார்பன் - அருகன், விட்டுணு.
திருமாலுந்தி - தாமரை.
திருமுதல் - திரும்புதல். (இரா)
திருமுற்றம் - குதிரைவையாளி வீதி.
திரை - வெற்றிலை. (சிங்)
* திரைத்தல் - சுருட்டல். (புற)
திரையல் - வெற்றிலை, சுருங்கல்.
திரையன்-நெய்தனிலத்தலைவன்.
திரோதகம் - மறைப்பது. (சிவ)
திரோதானம் - மறைப்பு.
* திரோதானகரி - மறைப்பது.
* திரோதாயி - மறைப்பது.
திரோபவம் - மறைப்பு.
* திரோபவித்தல் - மறைத்தல்.
* திரௌபதர்-திரௌபதி புதல்வர். (பார)
தில்லம் - காடு. (இரகு)
தில்லை - புலியூர்.
திலகம் - பிரதானம், மஞ்சாடிமரம், நெற்றிக்குறி, திலகக்கலித்துறை.
திலம் - எள்ளு, மஞ்சாடி. (பிங்)
திவ்வியம் - அழகு, தேவத்தன்மை, சந்தநம், ஒளியுள்ளது.
திவசம் - நாள், சிராத்தம்.

திவலை - மழை, துளி.
திவவு - படி, யாழ்வலிக்கட்டு.
திவளுதல்-அசைதல், (சிந்)மெலிதல்.
திவா - பகல். (இரகு)
திவாகரன் - சூரியன். (சேது)
* திவாந்தம் - சாயங்காலம்.
* திவிதலம்-தேவுலகம். (சிவத)
திளைத்தல் - ஒருதொழிலை இடைவிடாதுபயிறல், (சில) அசைதல், (திருமு) விளையாடல், (புறநா) அநுபவித்தல், நிறைதல்.
திற்றி - தின்னப்படுவது.
திறம் - கூறுபாடு, வகை, (மலை) பக்கம், (புறநா) சுற்றம், (சிந்) குலம், (சிந்) யுத்தம், (பிங்) வலி, காரணம், குறைநரம்புள்ளவீணை.
திறம்புதல் - தவறுதல். (இரா)
திறல் - பகை, வலி.
* தின்மை - தீமை. (இரா)
தினகரன் - சூரியன்.
தினமணி - சூரியன்.
தினநாதன் - சூரியன். (பார)
தினவு - சொறி.

## தீ

தீ - நெருப்பு, அறிவு, தீமை.
* தீக்ஷிதர் - தீக்கைபெற்றவர்.
தீக்குணம் - தீயகுணம்.
தீக்கை - நியமம், மந்திரோபதேசம், யாகம். (சப்த)
தீங்கு - குற்றம், தீமை.
தீச்சொல் - பழிவார்த்தை.
* தீட்டாமொழி - வேதம்.
தீட்டு - அழுக்கு, எழுத்து,சீட்டு.
தீட்டுதல் - கோதுதல், (புற) எழுதுதல்.
தீத்தல் - எரித்தல். (இரா)
தீத்திரள் - ஊழித்தீ.
தீது - குற்றம், தீமை.
தீபகம் - விளக்கு, காரியங்களை விளக்குதல்.
தீபம் - விளக்கு, இரவெரிமரம், சோதிநாள், தீவு.
தீபாவலி - தீபவரிசை.
தீபிகை - விளக்கு. (இரா)
தீம் - இனிமை, தித்திப்பு.
தீம்பர் - கீழ்மக்கள்.
தீமொழி - சாபம்.
தீயர் - வேடர், கீழ்மக்கள்.
* தீயுண்புள் - தழல்விழுங்கிப் பறவை. (இரகு)
* தீர்க்கக்கிரீவம் - ஒட்டகம்.
* தீர்க்கநித்திரை - மரணம்.
தீர்க்கம் - நிச்சயம், நீளம்.
தீர்க்காயு - நீண்டவயசு, காகம்.
தீர்த்தம் - நீர், சாத்திரம்,யாகம்.
தீர்த்தன் - குரு, அருகன், சிவன்.
தீர்த்திகை - தீர்த்தம். (கந்)
தீர்தல் - முடிதல், விடுதல்.
தீர்வு - பிராயச்சித்தம், முடிவு.
தீர்வை - கிரி, (மலை) பிராயச்சித்தம், முடிவு.
* தீர - முற்றுக. (இரா)
தீரம் - நீர்க்கரை, உறுதியான மனநிலை.
தீரன் - பண்டிதன், வல்லவன்.
தீவகம் - பார்வைமிருகம். (திரு)
* தீவரன் - கரையான். (சப்)
தீவலஞ்செய்தல் - விவாகம்.
தீவளர்ப்போர் - வேதியர்.
* தீவிகை - தீபம். (சிந்)

தீவிரம் - கடுமை, கூர்மை.
தீவிளி - பசுங்காய்.
தீற்றல் - உண்பித்தல். (சிந்)
தீனம் - வறுமை, துயர்.
தீனன் - வறியவன், துயராளன்.

## து

து - சுத்தம், உணவு.
துக்கம்-இட்டமல்லாத காரியங்களிலே உண்டாகும் மனநிலை, பீடை, கஷ்டம்.
* துக்கரம் - செயற்கரியது.
* துக்கிதன் - துக்கமுற்றோன்.
* துகத்தல் - கசத்தல். (பழம)
துகள் - குற்றம், புழுதி. (பிங்)
* துகளிலி - கடவுள். (சிவத)
* துகிதா - மகள். (சப்த)
துகிநம் - பனி, நிலவு.
துகிர் - பவளம்.
துகில் - பட்டு, சீலை. (சிந்)
துகிலிகை - எழுதுகோல்.
* துகூலம் - நுண்ணியசீலை.
துகைத்தல் - வருத்துதல், (சிந்) உழக்கல்.
* துங்கதை - உயர்ச்சி. (கந்)
துங்கம் - உயர்ச்சி, பிரதாநம், மலை.
துச்சம்-இழிபு, வெறுமை, பதர்.
* துச்சர் - தீயர். (சிவதத்)
துச்சில் - ஒதுக்கிடம், தங்குமிடம். (இனி)
துஞ்சுதல் - தங்குதல், (புற) சாதல், நித்திரைசெய்தல், நிலைபேறு. (பிங்)
* துட்கரம் - செயற்கரியது.
துட்கெனல் - அச்சக்குறிப்பு.
துட்டன் - கீழ்மகன், பாதகன்.
* துட்டி - மகிழ்ச்சி. (சிவத)
துட்டை - குட்டினி.
* துட்பதம் - தீயவஞ்சகம்.
* துடக்குதல் - அகப்படுத்தல், (கலி) கட்டுதல்.
துடவை - சோலை, தோட்டம்.
துடி-வேற்றுருவங்கொண்டு கடலிலே நின்ற சூரனுடைய மார்பைப் பிளந்து துடிகொட்டி முருகனுடிய கூத்து, ஏலம், அகில், இடைசுருங்குபறை, காலநுட்பம், பாலைப்பறை.
துடியடி - யானைக்கன்று.
* துடுப்பு - ஓடமியக்குங்கருவி, (இரா) பூவரும்பு, (கலி) அகப்பை.
* துடுப்பெடுத்தல் - அரும்பையுயர்த்தல், "குலைச்செங்காந்தடுடுப்பெடுத்து"(கந்தபு)
* துடுமெனல் - விரைதல்.
துடுவை - நெய்யகப்பை.
துடைத்தல் - தடவுதல். (புறநா)
துடைப்பம் - வாருகோல்.
துண்டம்-முகம், மூக்கு, துண்டு, சாரைப்பாம்பு. (பிங்)
துண்டன் - கொலைஞன்.(சேது)
துண்டித்தல் - துண்டாக்கல்.
துணங்கறல் - இருள், திருவிழா.
துணங்கை-இருகைகளையும் முடக்கிப் பழுப்புடை ஒற்றியாடுதல்,
துணர் - பூங்கொத்து, பூ, பூந்தாது.
துணர்த்தல் - குலைகொள்ளல்.
துணி-சீலை, சோதிநாள், துண்டு.
* துணியல் - துண்டம். (மது)
துணிவு - நிச்சயம், தெளிவு.

துணுக்கம் - அச்சம்.
துணை - அளவு, ஒப்பு, உதவி, இணை.
துணைவன் - சகோதரன், தோழன்.
துத்தம் - பால், ஓரிசை, வயிறு.
துத்தி - படப்பொறி, தேமல்.
துதி - புகழ்ச்சி, துளை. (தணி)
துதைதல் - நெருங்குதல்.
* துந்தம் - வயிறு. (சப்த)
* துந்தி - வயிறு. (சப்த)
துந்துபி - பேரிப்பறை.
துந்துளம் - பெருச்சாளி.
துப்பு - மெழுகு, பவளம், ஆயுதம், துணை, வலி, பொலிவு, நெய், அநுபவம், சுத்தம், சிவப்பு, முயற்சி, நுகர்பொருள்.
துப்புரவு - அநுபவிக்கப்படும் பொருள். (நால)
தும்பி - வண்டு, யானை, சுரைக் கொடி. (பிங்)
* தும்புரு - வீணை. (கல்லா)
தும்மல் - விடுதல், தும்முதல்.
துமானம் - ஆபரணப்பெட்டி.
துமித்தல் - அறுத்தல், துளித்தல்.
துமிதம் - துளி. (இரா)
துமுலம் - யுத்தம், ஒலி. (சப்த)
துய் - பஞ்சு. (இரா) சிம்பு, (சிங்) பஞ்சினுனி போல்வது.
துய்த்தல் - அநுபவித்தல்.
துய்யது - சுத்தமுள்ளது.
துய்யாள் - சரசுவதி. (பிங்)
துயக்கம் - அறிவுவேறுபடல்.
* துயக்கு - துயக்கம். (இரா)
துயரி - யாழினரம்பு. (சிங்)
* துயல்வரல் - அசைதல். (கந்)
* துயலல் - தூங்குதல், (வெண்) அசைதல். (சிங்)
* துயவு - அறிவுவேறுபடுகை.
* துயில் - மரணம், (வெண்) நித்திரை.
துயிலெடை - துயிலெழுப்பல்.
* துயிறல் - தங்குதல். (சிங்)
துர் - தீமை நிந்தை விலக்கு துக்கம் என்னும் பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழி யிடைச்சொல். (சப்த)
துர்லபம் - அடைதற்கரியது.
துரகதம் - குதிரை.
துரகம் - குதிரை, மனம். (சப்த)
* துரங்கமம் - குதிரை. (பார)
* துரத்துதல் - எறிதல், (வெண்) செலுத்தல்.
* துரந்தம்-தவறியமுடிவு. (சப்)
துரந்தரன் - பாரஞ்சுமப்பவன்.
* துரப்பு - நீக்குதல். (இரா)
துராசாரம் - தீயொழுக்கம்.
துரால் - செற்றை.
துரிசு - குற்றம், துயர்.
துரிதம் - பாவம், விரைவு.
துரியம் - பொதியெருது, சிரேட்டம்.
துருக்கம் - காடு, கோட்டை, குங்குமம்.
துருத்தி - யாற்றிடைக்குறை, தோல்.
* துரும்பு - கூளம். (பெரு)
துருமம் - மரம், பாரிசாதமரம்.
துருமோற்பலம் - கோங்கமரம்.
துருவம் - ஒப்பு, (சிங்) அசையாநிலை.
* துருவர்ணம்-வெள்ளி. (சப்த)
துருவல் - துருவியபொருள்.

துருவாடு - செம்மறியாடு.
* துருவு - செம்மறியாடு, துருவுதல்.
துருவுதல் - கடைதல், தேடுதல்.
துருவை - ஆடு, செம்மறியாடு.
* துரூஉ - செம்மறியாடு. (அக)
* துரை - மிகுதிப்பாடு, அரசன், வேகம்.
துரோணம் - சரபம், தும்பை, வில்லு, காகம், பதக்கென்னும் அளவு. (பிங்)
* துரோணி - தோணி. (சப்த)
துல்லியம் - உவமை, ஒப்பு.
துலா - இறைக்கும் மரம், நிறைகோல், ஒப்பு, அளவு. (சப்த)
துலை - ஒப்பு, அளவு.
* துலையிலி - ஒப்பிலி. (சிவத)
துவ்வு - அநுபவிக்கப்படும்பொருள்.
துவ்வுதல் - உண்ணுதல்.
துவக்கு - உடம்பு, கட்டு, தோல்.
துவக்குதல் - கட்டுதல்.
துவசம் - துகிற்கொடி, மரவுரி.
துவசர் - கள்ளுவிற்பவர்.(இரா)
* துவஞ்சம் - அழிவு. (சப்த)
துவட்டர் - கம்மாளர்.
* துவட்டா - தேவதச்சன்.
துவந்தனை - பந்தம், வேதனை.
* துவநம் - ஒலி. (பார)
* துவநி - ஒலி. (பார)
துவம் - அசையாநிலை. (கந்த)
துவர் - சிவப்பு, பவளம், துவர்ப்பு.
துவர்க்காய் - பாக்கு. (சிந்)
துவர்த்தல் - துவர்ப்புக்கொள்ளல்.
* துவர்தல் - முதிர்தல். (தணி)
துவர - மிக. (முரு)
* துவராபதி-துவாரகை. (பார)
துவலை - மழை, துளி.
துவளல் - வளைதல், அசைதல், தொடல்.
* துவற்றல்-துவலைவிடல்.(தணி)
துவன்றல் - நிறைதல், நெருங்குதல்.
துவாந்தம் - இருள், நரகம்.
துவாரம் - வாயில். (பார)
துவிசன் - இருபிறப்பாளன்.
துவிதம் - இருவிதம்.
* துவிவசநம் - இருமையுணர்த்துஞ் சொல்.
துவை - புளிங்கறி, ஒலி.
துவைத்தல் - ஒலித்தல்.
துவைதம் - இருவிதம். (சப்த)
துவைப்பு - ஆரவாரம். (மலை)
* துவைபாயநன் - வியாசன்.
துழனி - ஒலி, பறவையொலி.
துழாய் - துளசி.
துழாவுதல் - கலத்தல், வெட்டல்.
* துழைத்தல்-பரப்புதல்,(சிலப்)
துள்ளல் - ஆடு, கொசுகு.
* துளக்கம் - வருத்தம். (சிந்)
துளங்குதல் - அசைதல், ஒளிசெய்தல், தளர்தல்.
* துளுப்பல் - கலக்குதல். (சிந்)
துளும்பல் - அசைதல், கலங்குதல்.
துளை - துவாரம், மூங்கில்.
துற்றி - உண்ணப்படுவது.
துற்று - உணவு, சோறு. (நாலடி)
துற்றுதல் - உண்ணுதல்.
துறக்கம் - தேவுலகம்.
* துறக்கை - துறத்தல்.
துறத்தல் - விடுதல், நீங்குதல்.

துறவர் - நீத்தவர், விட்டவர்.
துறுத்தல் - நெருக்குதல், திணித்தல்.
துறுதல் - நெருங்குதல்.
* துறுவல் - புசித்தல். (ஞானு)
துறுமல் - திரட்சி, நெருங்கல்.
துறுவுதல் - நெருங்குதல்.
துறை - யாறு, கூறுபாடு, வழி, கடற்றுறை, இடம், தங்குமிடம், அகப்பொருளுறுப்புக்களுள் ஒன்று, நூல்.
* துறைபோதல் - கரையிற்போதல், முற்றக்கற்றுணர்தல்.
துன்றல் - நெருங்குதல்.
துன்னம் - துளைத்தல், தைத்தல்.
துன்னர் - தோல்வினையாளர், தையற்காரர்.
துன்னல் - நெருங்கல்.
துன்னலர் - பகைவர். (இரா)
துன்னியார் - அடுத்தோர். (வள்)
துன்னுதல் - அணுகுதல், நெருங்குதல், தைத்தல்.
* துன்னெறி - தீயவழி. (கந்)
துனி - வெறுப்பு, துன்பம், புலவிமுதிர்வு.
* துனித்தல் - வெறுத்தல். (சிந்)
துனைவு - விரைவு. (வாண)

## தூ

தூ - வலி (கலி) சுத்தம், பற்றுக்கோடு, பகை, தசை. (பிங்)
* தூக்கல் - எழுப்பல். (இரா)
தூக்கு - ஆராய்வு, உறி, துலாம், கூத்து, பாட்டு, (பிங்) பாக்களைத்துணித்து நிறுத்துதல், (தொல்) வாச்சியம். (சில)
தூக்குதல்-ஆராய்தல், உயர்த்தல்.
* தூக்குறி - தொய்யிற்குறி.
தூகுதல் - அலகிடல். (திருவா)
தூங்கல் - யானை, அற்பநித்திரை.
தூங்குதல் - செறிதல், (புற) ஆடுதல், சோர்தல், நாலுதல், சோம்புதல்.
* தூசம் - யானைகட்டுங்கயிறு.
தூசி - முற்படை, குதிரை.
தூசு - சீலை, யானைகட்டுங்கயிறு.
தூடணம் - நிந்தை.
* தூடியம் - படங்குவீடு.
தூணம் - தூண், அம்புக்கூடு.
தூணி - அம்புக்கூடு, ஓரளவு.
தூது - தூதுவளை, (சிந்) கோடாங்கல்.
தூதுணம் - புறாப்பறவை. (தணி)
தூதுவன் - புதன், தூதன்.
தூபம் - புகை, நறும்புகைப்பொருள்.
தூபிகை - கோவிலினுச்சி.
தூம்பு - துளை, துளையுடைப்பொருள், வாயில், மூங்கில், மரக்கால், மதகு. (பிங்)
தூமகேது-வால்வெள்ளி, (இரா) அக்கினி.
தூமம் - புகை, மட்கலச்சூளை.
தூர் - சேறு, வேர். (இரா)
தூர்க்கை - பூரநாள்.
தூர்த்தல் - நிறைத்தல். (கந்)
தூர்த்தன் - வஞ்சகன், சூதுவிளையாடுவோன், காமுகன்.
தூர்த்தை - தூர்த்தஸ்திரி.
தூர்வகம் - பொதியெருது, சுமைதாங்கல்.
தூர்வை - அறுகம்புல். (விநா)
தூரியம் - எருது, வாத்தியம், நற்சீலை, உவகைப்பறை. (பிங்)

தூலசரீரம் - பஞ்சபூதங்களின் உருத்திரிவாலுண்டாயசரீரம்.
தூலம்-பருமை, பஞ்சு, ஆகாயம்.
* தூலலிங்கம் - கோபுரம்.
தூலாருந்ததிநியாயம்-பெரியநட்சத்திரம் ஒன்று காட்டி அதன் பின் அருந்ததி நட்சத்திரங் காட்டல்போல பெரும் பொருள் காட்டிப் பின்னர் நுண் பொருள் காட்டும் ஒரு நெறி.
தூலிகை - எழுதுகோல்.
* தூலோச்சயம் - யானைக்கொம் பினடி.
தூவத்தி - வாட்படை.
தூவல் - இறகு, துளி, சிதறல், மழை.
தூவி - இறகு, மயிற்பீலி.
தூற்றுதல் - பரப்புதல், பழி கூறல்.
தூறு - பற்றை, பழிச்சொல்.

## தெ

தெக்கு - தெற்கு. (பிங்)
* தெகிழ்தல் - விரிதல், (சிங்) நிறைதல்.
* தெட்டவர் - தெளிந்தவர்.
தெட்டுதல் - வஞ்சித்தல்.
தெட்பம் - பேரறிவு. (திவா)
* தெட்பு - தெளிவு. (இரா)
தெண்டிரை - கடல். (பிங்)
தெப்பம் - மரக்கலம்.
தெம்முனை - பகைமுகம். (கந்)
தெய்வதம் - தெய்வம். (கந்)
* தெரிசம் - அமாவாசை.
தெரித்தல் - எழுதுதல், தெரிவித்தல், சொல்லல், கொழித்தல்.
தெரியல் - மாலை, ஆராய்தல்.
தெரிவை - பெண்.
தெருட்டுதல் - தெளிவித்தல்,வற்புறுத்தல்.
தெருமரல்-மனக்கவற்சி, சுழற்சி.
தெருள் - அறிவு, தெளிவு.
தெவ் - பகை, கவர்தல், யுத்தம்.
தெவ்வர் - பகைவர்.
* தெவ்வுதல் - கவர்தல். (தணி)
தெவிட்டல் - உமிழ்தல், (திவா) தொனித்தல்,குதட்டுதல்,நிறைவுபெறல், தங்குதல்.
* தெவிளல் - திரளுதல். (நெடு)
தெழித்தல் - அதட்டல், ஒலித்தல், கோபித்தல். (சிந்)
* தெழிப்பு - அதட்டல். (இரா)
* தெள்விளி - இசைப்பாட்டு.
தெள்ளியர் - அறிவுடையவர்.
தெள்ளுதல் - தெளிதல், கொழித்தல்.
தெளிவு - அறிவு, துணிவு.
தெற்றி - திண்ணை. (இரா)
தெற்றியம்பலம் - சித்திரகூடம்.
தெற்றுதல் - மாறுபடல், பின்னுதல், பிணங்குதல், தடுத்தல்.
தெற்றெனல் - தெளிதல், விரைதல்.
தெறித்தல் - துள்ளுதல். (புற)
தெறுக்கால் - விருச்சிகம்,தேள்.
தெறுத்தல் - நெரித்தல்.
தெறுதல் - சுடுதல், தண்டஞ்செய்தல், (புறநா) அழித்தல், கொல்லல்.
தெறுநர்-கொலையாளர்,பகைவர்.
தென் - அழகு, இசை,தெற்கு.
தென்கலை - தமிழ்மொழி.
தென்கால் - தென்றற்காற்று.

தென்கீழ்த்திசையிறை - நெருப்பு.
தென்புலத்தார் - பிதிரர்.
தென்மலை-பொதியமலை. (நைட)
தென்றற்றேரோன் - மன்மதன்.
தென்றி-தென்றற்காற்று,தெற்கு
தென்னவன் - பாண்டியன், இயமன்.
தென்னவன்கொடி-கயன்மீன்.
தென்னன் - பாண்டியன்.
தென்னகம் - பொதியமலை.
தென்னை - தெங்கு.
தெனாது - தெற்கின்கண்ணது.

## தே

தே - நாயகன், (கந்த) கடவுள்.
தேக்கிடுதல் - நிறைந்துவழிதல்.
தேக்கெறிதல் - நிறைந்து வழிதல்.
* தேகலி - வாயிற்படி. (சப்த)
தேகலிதிபநியாயம் - வாயிற்படியில் வைத்த தீபமானது உள்ளும் புறமுஞ் சென்று இருள் போக்குதல் போல ஒரு விடயம் நடுநின்று இருபாலும் பயன்படும் நெறி.
* தேகி - ஆன்மா. (சப்த)
* தேங்குதல் - குலைதல். (சிந்)
* தேசன் - குரு. (சேது) தேசுடையவன்.
தேசிகம் - அழகு, ஒளி, பொன், திசைச்சொல்லு, ஒருகூத்து.
தேசிகன் - வேற்றுத்தேசத்தான், உபாத்தியாயன், குரு, வணிகன்.
* தேசியம் - திசைச்சொற்பிரயோகம்.
தேசு - அழகு, ஒளி, கீர்த்தி, வீரம்.
தேசோமயம் - ஒளிவடிவம்.
தேட்கடை - மூலநாள்.
தேட்டு - தேட்டம்.
* தேத்தடை - தேன்கூடு.
தேம் - இனிமை, இடம், தேசம், தித்திப்பு.
தேம்பல் - பழம்பூ, வாடல், மெலிதல்.
* தேய்கை - தேய்தல். (இரா)
தேய்வை - சந்தனக்குழம்பு.
* தேயம் - தியாகிக்கப்படும்பொருள், (கந்தபு) கொடுக்கப்படுவது,களவு, இடம்,நாடு.
* தேயன் - திருடன். (சிவத)
தேயு - நெருப்பு, மயக்கம்.(பிங்)
தேர்ச்சித்துணைவர் - அமைச்சர்.
தேர்வு - ஆராய்வு, தெளிவு.
தேரலர் - பகைவர்.
தேரன் - பௌத்தன். (வாதவூ)
தேவகி - கண்ணன்றாய்.
தேவகுரு - வியாழன்.
தேவகுலம் - கோயில். (ஆசார)
தேவதரு - தேவுலகத்துள்ள ஐந்தரு.
தேவதேவன் - சிவன். (பிங்)
தேவபாஷை-சம்ஸ்கிருதபாஷை
* தேவமணி - குதிரைக்கழுத்துச்சுழி. (இரா)
தேவரன் - கணவனுடன்பிறந்த கனிட்டன்.
தேவராட்டி - படிமத்தாள்.
தேவராளன் - படிமத்தான்.
* தேவலன் - கூலிக்குப்பூசை செய்பவன்.
தேவவிரதன் - வீட்டுமன்.

* தேவாங்கம் - நற்பணிப்புடைவை.
தேவி-தலைவி,மனைவி,பார்ப்பதி.
* தேவு - தெய்வம். (சிந்)
* தேற்றம் - துணிவு, தெளிவு.
தேற்றுதல் - தெளிதல், தெளிவித்தல்.
* தேறல் - கள்ளின்தெளிவு, தேன், தெளிவு.
* தேறலான் - பகைவன்.(பார)
தேறு - நிச்சயம், தேற்றுமரம்.
தேன் - வண்டு, கள்ளு, மணம்.
* தேனடை - தேன்கூடு.
தேனர் - திருடர்.
* தேனித்தல்-இனித்தல். (தணி)
தேனு - பசு, களவு.

## தை

தைசசம் - சத்துவகுணவகங்காரம்.
* தைத்தல் - உட்புகுதல்.(இரா)
தைத்தியர் - அசுரர்.
தைத்திரியம் - இரண்டாம்வேதம்.
தையல்-அழகு, பெண், தைத்தல்.
தைரியம்-வீரம், கவலையின்மை.
தைலம் - எண்ணெய்.
தைவரல் - துடைத்தல், (பார) தடவுதல், அநுசுருதியேற்றல்.
தைவிகம் - தேவசம்பந்தமுடையது, தேவராற்றுபிக்கப்பட்ட இலிங்கம், தெய்வத்தால் வருந்துயர்.

## தொ

தொக்கு - தோல், உடம்பு.
தொகுத்தல் - கூட்டுதல், சுருக்குதல்.
தொகுதல் - கூடுதல், சுருங்கல்.
தொகுதி - கூட்டம்.
தொகை - கூட்டம், சுருக்கம்.
தொங்கல் - மாலை, வெண்குடை, மயிலின்தோகை, குடை.
தொட்டல் - தோண்டுதல், தீண்டுதல்.
* தொட்டிமை-ஒற்றுமை. (சிந்)
* தொடக்குதல் - பிணித்தல்.
தொடர் - நட்பு, (வள்) சங்கிலி, கோவை. (புற)
தொடர்ப்பாடு-சம்பந்தம். (வள்)
தொடர்பு - பாட்டு, தொடர்ச்சி.
* தொடல் - பிடித்தல். (பிங்)
தொடலை - மாலை, மகளிர்விளையாட்டு.
தொடி - கங்கணம், பூண், ஒருபலம், கைவளை, வீரவளை.
தொடு - மருதநிலம், வஞ்சகம், தோட்டம்.
தொடுதல் - இடுதல், (கலி) கட்டல், (வெண்) தோண்டல், தொடங்கல்.
தொடுதோல் - செருப்பு.
தொடுப்பு-புறங்கூறல், கலப்பை.
தொடை - வினு, (வெண்) கட்டு, தாறு, (சிந்தா) அம்பு, மாலை, நாணி, யாழ்நரம்பு.
* தொடையல் - தொடர்ச்சி.
தொண்டகம் - ஆகோட்பறை, (சிந்) குறிஞ்சிப்பறை.
தொண்டலம்-யானைத்துதிக்கை.
தொண்டி-நெல்லாலாக்கினகள்.
தொண்டு - அடிமை, பழமை, ஒன்பது.
தொண்டை - கொவ்வை; யானையின்கை. (பிங்)

தொத்து-அடிமை, பூங்கொத்து.
* தொத்துதல்-கூடுதல். (ஞாஞ)
தொந்தம் - தொடர்பு, நெடுங் கோபம்.
தொந்தி - வயிறு.
* தொப்பி - நெல்லாற் சமைத்த கள்ளு. (பெரு)
* தொய் - குற்றம். (சிந்தா)
* தொய்யகம் - தலைப்பாளை.
தொய்யல் - இளைத்தல், (இரா) இன்பம், சேறு, உழவு, அகமகிழ்ச்சி.
தொய்யில் - எழுதுங் குழம்பு, (மது) தோளிலும் முலையிலும் எழுதுங்கோலம்.
தொல்லை - பழமை, பிரயாசம்.
* தொலைபு - கெடுதல். (பெரு)
தொலைவு - தோல்வி, கேடு.
* தொழித்தல் - சிதறல், கோபித்தல், ஆரவாரித்தல், (சிந்)
தொழு-பட்டி, இரேவதி, தொழுமரம், வெப்புநோய், மடு.
தொழுகுலத்தோர் - வேதியர்.
தொழுத்தை-குட்டினி, அடிமை.
தொழுதி-கூட்டம், திரட்சி. (சிந்)
* தொழும்பு-தொண்டு. (பெரிய)
தொழுவர் - தொழில்செய்வோர்.
தொழுனை - யமுனையாறு.
* தொழூஉ - தொழுவம். (கலி)
* தொள்கு-சேறு. (இராமா கி)
* தொள்குதல் - துளைத்தல்.
தொள்ளம் - சேறு.
தொள்ளை - துளை, மரக்கலம்.
* தொளி - சேறு. (பிங்)
தொறு - பசுநிரை, கூட்டம்.
தொறுத்தி - இடைச்சி. (சிந்)
தொறுவர் - இடையர்.
தொன்மரம்-ஆலமரம். (திருவி)
தொன்மை - உரைவிரவிப்பழங்கதையைப் பொருளாகக் கொண்டு விளங்குஞ் செய்யுள் வனப்பு, பழமை.
* தொன்று - பழமை. (வெண்)
தொன்னீர் - கடல். (பிங்க)

## தோ

தோகம் - அற்பம்.
தோகை-மயில், மயிற்பீலி, வால், கொய்சகம், முன்றானை.
* தோசம் - குற்றம். (சிந்தா)
* தோட்கோப்பு - வழியுணா.
தோட்டி-காவல், (வெண்) கதவு, அழகு.
* தோடஞ்ஞன் - பண்டிதன்.
தோடம் - குற்றம், பாவம்.
தோடு - குடுமி, (இரா) கூட்டம் (சிந்) பூவிதழ்.
தோண்டுதல் - அகழ்தல். முகத்தல்.
தோணுமுகம் - கழியிருக்கை.
தோணி - ஒருமரத்தாலாய மிதவை, (இலக்கணவி) மரக்கலம், அம்பு, மதிலுறுப்பு, இரேவதி.
* தோணோக்கம் - ஒருவரிக்கூத்து. (சில)
* தோதகம் - வஞ்சகம், வருத்தம். (சிந்)
* தோது - தொகுதி. (பாரத)
தோம் - குற்றம், பாவம். (கந்)
தோமரம்-இருப்புலக்கை, பெருஞ்சவளம்.
* தோய்தயிர் - உறைந்ததயிர்.
* தோய்தல் - இறுகுதல், (சிந்) கலத்தல்.

* தோயதரம் - மேகம். (சப்த)
தோயம் - நீர், பூராடம். (சப்த)
தோரணம்-நகரவாயில்,வாகநம்.
தோரணி - பரம்பரை, வரலாறு.
* தோரியமடந்தை - பற்றுப்பாடும் மடந்தை. (சிந்)
தோரை - மூங்கிலரிசி, பொன்வடம். (சிந்)
தோல் - பரிசை, (புற) இனிய சொல்லினுலே விழுமியபொருள் கூறும் வனப்பு, (தொல்) யானை, தோல்வி. (பிங்)
தோலடிப்பறவை-அன்னப்புள்.
* தோழ் - தொழுவம். (சிந்)
தோழம் - தொழுவம்.
* தோழமை - நண்பு. (இரா)
தோள் - கைத்தலம், புயம்.
* தோள்செய்தல் - துளைத்தல்.
* தோளாமணி - துளையாமணி.
* தோற்பரம் - பரிசை. (சிந்)
தோற்றம் - வலிமை, பிறப்பு, காட்சி. (பிங்)
தோற்றுதல்-தோன்றுதல், தோன்றுவித்தல்.
தோன்றல்-புதல்வன், தலைவன்.

## தௌ

தௌகித்திரன் - புதல்வியின்மகன்
* தௌகித்திரி - புதல்வியின்மகள்
தௌதம் - வெள்ளி.
* தௌலிகன் - சித்திரகாரன்.
தௌவாரிகன்-துவாரபாலகன்.
தௌவை-முன்பிறந்தாள், தாய்.

## ந

ந - இன்மை, சிறப்பு.
* நக்கரம்-முதலை, (இரா)தேள்.
நக்கன் - சிவன், நிர்வாணி.
* நக்கிநம் - நிர்வாணம். (சப்த)
* நக்கிராகியம்-முதலை. (சிவத)
நகம் - மரம், மலை. (சப்த)
நகர் - கோவில், ஊர், வீடு.
நகரம் - இராசதாநி, ஊர்.
* நகார் - எயிறு. (சிறு)
நகிலம் - முலை.
நகுதல் - சிரித்தல், விளங்குதல்.
நகுலம் - கீரி, குங்குமம். (சப்த)
* நகுலன் - சிவன். (பார)
* நகேசன் - மலையரசன்.
நகை - முத்து, (சிந்தா) பல்லு, சிரிப்பு, ஒளி, மகிழ்ச்சி, பூவரும்பு, இகழ்ச்சி.
* நங்குதல் - பழித்தல்.
நங்கை - பெண்ணிற்சிறந்தவள்.
நச்சு - விருப்பம்.
நசித்தல் - அழித்தல்.
நசியம்-மூக்கிற்கொடுக்கும் மருந்து.
நசை - விருப்பம், குற்றம்.
நட்டம் - அழிவு, மறைவு,கூத்து.
நட்டார் - உறவர், நண்பர்.
நடம் - கூத்து.
நடலை - வருத்தம், (சிந்) வஞ்சகம், பொய், நுடக்கம்.
நடவை - நடக்குமிடம், வழி.
நடனம் - கூத்து.
* நடனியர் - நாட்டியஸ்திரிகள்.
நடேசன் - சிவன்.
நடாவுதல் - நடத்துதல். (இரா)
* நடுக்கல் - அஞ்சுவித்தல்.(சிந்)
நடுவன் - இயமன், மத்தியஸ்தன்.
நடை - வழி,முறைமை,வழக்கம்.
நடைக்கலம் - மரக்கலம்.

* நடைத்தேர் - சிறுதேர்.
* நடைமலை - யானை.
* நடையொழியாதோன் - காற்று
* நண்ணலர் - பகைவர். (பிங்)
நண்ணுதல் - அணுகல், சேர்தல்.
நண்பகல் - மத்தியாநம்.
நணுகுதல் - கிட்டுதல்.
நத்தம் - இரவு, சங்கு, வளர்தல்.
நத்தமாலம் - புன்கமரம். (சப்த)
நத்து - சங்கு, விருப்பம்.
* நதம் - மேற்கே செல்லும் யாறு. (சேது)
* நதி - கிழக்கேசெல்லும்யாறு.
நதிபதி - கடல், வருணன்.
நதுத்தல் - அவித்தல், கெடுத்தல்.
நந்தம் - சங்கு, பெருமகிழ்ச்சி.
நந்தன் - புத்திரன், கண்ணன்பிதா.
நந்தனவனம் - பூந்தோட்டம்.
நந்தனன் - புத்திரன், மகிழ்விப்பவன்.
* நந்தாவனம் - சோலை. (வாண)
நந்தாவிளக்கு - தணியாவிளக்கு.
நந்தி - இடபம், சிவன், செக்கான்.
* நந்துதல் - வளர்தல், கெடுதல்.
* நபம் - கார்காலம். (பார)
நபுஞ்சகம் - அலி.
* நம் - வணக்கம். (பாரத)
நம்பன் - சிவன், விரும்பத்தக்கவன்.
நம்பி - புருடரிற்சிறந்தவன்.
* நம்பிமூத்தபிரான் - பலதேவன்.
நம்புதல் - விரும்புதல், விசுவசித்தல்
நமன் - இயமன், நம்மவன்.
* நமித்திரர் - பகைவர். (இரா)
* நமைத்தல் - சூட்டுதல். (சிந்)
நயச்சொல் - முகமன்வார்த்தை.
நயத்தல் - விரும்புதல், மகிழ்தல்.
நயந்தோர் - மித்திரர். (பிங்)
நயப்பித்தல் - விரும்புவித்தல்.
நயப்பு - விருப்பு, அன்பு, மகிழ்ச்சி.
நயப்புணர்வு - கண்ணோட்டம்.
நயம் - மகிழ்ச்சி, நன்மை, இன்பம், நற்பயன், நீதி.
* நயமொழி - உபசாரவார்த்தை.
* நயன் - அருள். (கலி)
நயனம் - கண், அடைவித்தல்.
நரதேவன் - அரசன். (சப்த)
நரந்தம் - நாரத்தை, கஸ்தூரி.
நரபதி - அரசன்.
* நரலல் - ஒலித்தல். (வெண்)
நரலை - கடல்.
நரவாகநம் - சிவிகை. (கந்)
நரன் - மனிதன், அர்ச்சுனன்.
நராதிபர் - அரசர். (பார)
நரேசன் - அரசன். (பார)
நரேந்திரன் - அரசன், விஷவைத்தியன்.
நரை - வெண்ணிறம், எருது, கவரிமா.
நல்குதல் - கொடுத்தல், உவத்தல்.
நல்குரவு - வறுமை.
நல்கூர்தல் - வறுமையாதல்.
நல்லம் - கறுப்பு.
நலம் - சுகம், உபகாரம், நன்மை, அழகு, விருப்பு.
நலிதல் - நெருக்கல், இன்னுசெய்து நெருக்கல், வருந்துதல், மெலிதல்.
நவ்வி - மான், அத்தநாள்.
* நவ்வியம் - புதுமை. (சப்த)
நவ்வு - தோணி. (பார)

நவதி - தொண்ணூறு.
நவநீதம் - வெண்ணெய். (சேது)
நவம் - ஒன்பது, புதுமை, கார் காலம்.
நவியம் - கோடரி, மழு. (பிங்)
நவிர் - ஆண்மயிர், வாள்.
நவிரம் - மலை, புன்மை, மயிர், மயில், உச்சந்தலை.
நவிலுதல் - பயிலல், (புற) செய்தல், சொல்லல்.
நவீநம் - புதுமை.
நவை - குற்றம், இகழ்ச்சி.
* நழுவல் - விலகல். (இரா)
நள் - செறிவு, நடு.
* நள்ளாமை - விரும்பாமை.
நள்ளி - உறவு, நண்டு.
* நள்ளிருள் - செறிந்த இருள்.
நள்ளுநர் - மித்திரர்.
நளி - நெருக்கம், பெருமை, குளிர்.
நளிநம் - தாமரை, பாசி, நீர்.
நளிநி - தாமரைப்பொய்கை.
நறவம் - அனிச்சம், கள்ளு, தேன், மணம்.
நறு - கள்ளு, தேன், வாசனை.
நறுமருப்பு - இஞ்சி.
நறுமை - நன்மை. (சூடா)
நறை - நறும்புகை, தேன், வாசனை, கள்ளு.
நன்காடு - சுடுகாடு. (தணி)
நன்கு - அழகு, நன்மை, மிகுதி.
* நன்செய் - வயனிலம்.
நன்பகல் - கடும்பகல். (சிந்)
நன்று - நன்மை, பெரிது, சுகம்.
நன்னர் - நன்மை.
நனந்தலை - நடுவிடம், உச்சி.
நனவு - அகற்சி, தெளிவு.
நனி - மிகுதி.
நனை - பூவரும்பு, கள், தேன்.

## நா

நா - நடு, நாக்கு.
நாகநாதன் - இந்திரன்.
நாகம் - ஆகாயம், குரங்கு, மலை, பாம்பு, யானை, நற்புடைவை.
நாகர் - தேவர், பாதலத்தார்.
நாகரி - குருக்கத்திக்கொடி.
நாகரிகம் - நகரத்திற்குரியது, கண்ணோட்டம்.
நாகரிகர் - நகரவாசிகள், காமுகர்.
* நாகவல்லி - வெற்றிலைக்கொடி.
* நாகியர் - நாகக்கன்னியர்.
நாகு - இளமை, சங்கு.
நாங்கூழ் - பூநாகம்.
* நாச்செறு - வைவு. (சிந்)
நாசநம் - அழித்தல்.
நாசி - மூக்கு, நிலையின்மேற்சட்டம்.
* நாசிதாரு - கதவுநிலையின்மேற்சட்டம். (சப்த)
நாஞ்சில் - கலப்பை, மதிலுறுப்பு.
நாட்செய்தல் - நாட்கொள்ளல்.
நாட்டம் - ஆராய்தல், (கலி) அழகு, கண், வாட்படை, விருப்பம்.
நாட்டமைதி - நாட்டுச்சிறப்பு.
நாட்டியம் - கூத்து, கூத்துக்குரிய நிருத்தகீதவாத்தியங்கள், குறிப்பு. (சப்த)
* நாட்டியோக்தி - கூத்துக்குரிய வார்த்தை.
நாடகம் - கூத்து.
நாடி - நரம்பு, நாழிகை, நாசி.

நாடுதல் - தேடுதல், விரும்பல்.
நாண்மகிழிருக்கை - திருவோலக்கம். (மலை)
* நாண்மலர்-நாட்காலத்துமலர்.
நாண்மீன் - நட்சத்திரம்.
நாணல் - நாணற்புல்லு.
நாணி - வில்லிநாண்.
* நாத்தி - இல்லை. (விநா)
நாத்திகன் - கடவுளும் புண்ணிய பாவாதிகளும் இல்லை என்பவன்.
நாத்தூண் - மைத்துனி. (சேது)
நாதம் - ஒலி, சிவதத்துவம்.
நாதன் - தலைவன், சுவாமி.
நாதித்தல் - ஒலித்தல்.
நாந்தகம் - வாள். (சேது)
நாந்தி - மங்கலவாழ்த்து. (சப்த)
நாநம் - முழுகுதல், சுத்திசெய்தல். (சப்த)
நாநா-வெகுவிதம், பலபொருள்.
நாப்பண் - நடு, தேர்நடு.
நாபி - கொப்பூழ்.
நாம் - அச்சம். (சிந்)
நாம்பல் - இளைத்தல்.
நாமகரணம் - பெயரிடுதல்.
* நாமசேடம் - மரணம். (சப்த)
நாமடந்தை - சரசுவதி.
நாமதேயம் - பெயர்.
* நாய்-சூதாடுகருவி. (புறநா)
* நாய்க்கடுவான் - பிராமணப் பெண்ணிடத்திற் சண்டாளனுக்குப்பிறந்தவன். (சிவத)
நாயகம் - நடத்துந்தன்மை, தலைமை.
நாயகன்-நடத்துந்தலைவன், கணவன், சுவாமி, பிரபு. (சப்த)
* நாயம் - நீதி. (இரா)
நாயன்-நடத்துவோன், தலைவன்.
நாயனார் - தலைவர்.
* நாயில் - ஞாயில். (சிந்)
நார் - அன்பு, கயிறு.
* நாரகர் - நரகவாசிகள். (சிவ)
நாரங்கம் - நாரத்தை.
நாரசிங்கன் - விட்டுணு.
நாரணன் - விட்டுணு.
நாரணி - துர்க்கை. (சேது)
நாரம் - நீர், நரர்கூட்டம், பாசி.
நாராசம் - அம்பு, இருப்புச்சலாகை.
நாராயணன் - விட்டுணு.
நாரி - பெண், வின்னாண், பன்னாடை, கள்ளு. (பிங்)
நாரிகேளம் - தெங்கு.
நாரிபாகன் - சிவன்.
நால்வாய் - யானை. (திருவி)
நாலுதல் - தூங்குதல்.
* நாவல் - உழவர் பகடுரப்புதற்கண் கூறும் ஒரு குறிப்புச்சொல். (தொல்) ஓர் இரக்கக் குறிப்பு, "நாவலிக்கணம் நண்ணுதிர்" (கந்)
நாவலர் - புலவர், அமைச்சர்.
* நாவலோ - (நாவல் என்பதன் பொருளையே இதற்குங்கொள்க.)
* நாவழி - நாக்குவழிக்குங் கருவி. (சிந்)
நாவாய் - ஓடம், (வெண்) இரேவதி.
நாழி - உட்டுளைப்பொருள், நாழிகை, அளக்கும் நாழி, பூரட்டாதி. (பிங்)
* நாளந்தி - விடியற்காலம்.
நாளம் - உட்டுளை, பூந்தண்டு.

நாளிகம் - வள்ளைக்கொடி.
நாளிகேரம் - தென்னைமரம்.
* நாற்றி - நான்மடங்கு. (சிந்)
நாற்றுதல் - தூங்கவிடல். (கந்)
நாறுதல் - உண்டாதல், மணத்தல்.
நானம் - கத்தூரி, மணம், பூசப்படுவது, கவரிமா. (பிங்)

நி

நி - இன்மை, அதிகம், சமீபம், நிச்சயம், வன்மை, விருப்பம் முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழி இடைச்சொல். (சப்த)
* நிக்கந்தன் - அருகன். (சில)
நிக்கிரகம் - அழித்தல், அதட்டல், கட்டுதல், வெறுத்தல், தண்டித்தல்.
* நிக்கிராகம்-சாபஞ்சொல்லல்.
* நிகடம் - சமீபம். (சப்த)
நிகமம் - வழி, வேதம், அங்காடி வீதி.
* நிகர் - ஒளி, ஒப்பு. (அக)
நிகரம் - கூட்டம், (பார) திரவியம்.
நிகலம் - தோளின்மேற்பாகம்.
நிகழ்தல் - விளங்குதல், உண்டாதல்.
* நிகளம் - விலங்கு.
நிகாயம் - மருதநிலத்தூர், வாசஸ்தானம்.
* நிகாரம் - அவமானம், அபகாரம்.
நிகிலம் - எல்லாம்.
நிகுஞ்சம் - குகை, புதல்வீடு.
நிகேதநம்-கோயில், வீடு. (சப்த)
நிச்சயம் - துணிவு, மெய்.
நிச்சயித்தல் - துணிதல்.
நிச்சலம் - அசைவின்மை, பூமி, நிலை.
* நிச்சலும் - என்றும்.
நிச்சிந்தன் - கடவுள், அருகன்.
நிச்சுவாசம்-சுவாசத்தை உள்ளிழுத்தல்.
நிசா - இரவு.
நிசாகரன் - சந்திரன்.
நிசாசரன்-அரக்கன், நரி. (சப்த)
நிசாபதி - சந்திரன், கர்ப்பூரம்.
* நிசாரி - சூரியன். (பார)
நிசாளம் - ஒருவாச்சியம்.
நிசி - பொன், மஞ்சள், இரவு.
நிசிசரர் - அரக்கர்.
* நிசித்தம் - விலக்கு.
நிசிதம்-கூர்மை, நிறைவு. (சப்த)
* நிசும்பர் - கொலைஞர். (கந்)
நிசை - இரவு. (பார)
நிட்களம் - அருவம்.
நிட்காமியம் - விருப்பின்மை.
* நிட்கிரமணம் - வெளியிற்போதல். (சப்த)
* நிட்டுரதரர் - கொடுமைமிக்கவர். (சிவத)
நிட்டுரம் - கொடுமை.
நிட்டை-நம்பிக்கை, நிச்சயமான நிலை, சிந்தித்துத் துணிந்த பொருளுடன் உறுதியாய் நிற்றல்.
நிடலம் - நெற்றி.
* நிடாதன் - சண்டாளன்.
நிடேதம் - விலக்கு, தடை.
* நிணத்தல் - பிணித்தல், (சிந்) கொழுத்தல்.
நிணம் - கொழுப்பு.

நித்தன் - கடவுள்.
நித்திராலு-நித்திரைசெய்பவன்.
நித்திலம் - முத்து.
நிதம்பம்-அல்குல், மலைப்பக்கம்.
நிதர்சநம் - உதாரணம். (சப்த)
நிதாநம் - பொற்காசு, ஆதிகாரணம்.
நிதி - பொன், வைப்பு, ஆதாரம்.
நிதித்தியாசநம் - சிந்தித்தல்.
* நிதிபதி - குபேரன். (கந்)
* நிந்தகன் - நிந்திப்பவன்.
நிந்தனை - இகழ்ச்சி.
நிபம்-காரணம், உவமை. (இரா)
நிபிடம் - செறிவு. (ஞானு)
நிபாதம் - விழுதல்.
* நிபுணத்துவம்-சாமார்த்தியம்.
நிம்பம் - வேம்பு. (மணிமே)
* நிம்பன் - பாண்டியன். (பழ)
* நிம்பிரி - பொறாமை தோன்றுங் குறிப்பு. (தொல்)
* நிம்பிரித்தல்-கோபித்தல்.(சிந்)
நிமலம்-அழுக்கின்மை, காரணம்.
* நிமலி - உமை. (பிங்)
நிமித்தம் - காரணம், இலக்கு, சகுநம்.
* நிமித்திகன் - சகுநஞ்சொல்பவன்.
* நிமித்து - காரணம். (நன்)
நிமிர்தல் - பாய்தல், (சிந்) மிகைத்தல், (புற) ஓடல், உயர்தல்.
நிமிரல் - சோறு.
நியக்குரோதம் - ஆலமரம், வன்னிமரம்.
நியதம் - செய்கடன், நித்தியம்.
நியதி - செய்கடன், ஊழ். (சப்த)
நியமம் - நிச்சயம், நீதி, தேவாலயம், தெரு, கடைவீதி, நகரம்.
நியாசம் - வைத்தல், சமர்ப்பித்தல்.
நியாயம் - நீதி, யுத்தி, தகுதி.
நியுதம் - இலட்சம்.
நியோகம் - ஆஞ்ஞை, காரியம்.
நிர் - விலக்கு, இன்மை, நிச்சயம், வெளி என்னும் பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல். (சப்த)
நிர்ணயம் - நிச்சயம்.
நிர்த்தேசம் - கட்டளை, ஆஞ்ஞை.
நிர்மலம் - அழுக்கின்மை.
* நிரக்கம் - சுட்டறிவின்மை.
நிரசநம் - அழித்தல், முற்றவிடுதல். (சப்த)
நிரஞ்சநம் - அழுக்கின்மை.
நிரஞ்சநன் - கடவுள்.
* நிரதிசயம் - ஒப்புயர்வில்லாமேன்மை.
* நிரந்தம் - குரங்கு. (சேது)
நிரந்தரம் - நெருக்கம், இடைவெளியின்மை.
* நிரந்தரன் - கடவுள்.
* நிரந்தரித்தல் - நெருங்குதல்.
நிரப்பு - வறுமை, குறைவு.
நிரம்பாமொழி - மழலைவார்த்தை.
* நிரம்புதல்-தொலைதல். (கலி) வரிசையாதல். (இரா)
நிரயம் - நரகம். (புற)
* நிரர்த்தகம் - பொருளில்லாதது.
நிரல் - ஒழுங்கு.
* நிரவதி - அளவின்மை.
* நிரவல் - மூடுதல். (இரா)
நிராகரணம் - தூரப்போக்குதல், மறுத்தல்.

* நிராகாரம் - உணவின்மை.
* நிராகிருதி - நிராகரணம்.
நிராசை - விருப்பின்மை. (பார)
நிராமயம் - நோயின்மை.
நிராமயன் - கடவுள்.
நிராலம்பம் - ஆதாரமின்மை.
* நிரிகன் - தொழிற்பாடிலி. (தணி)
* நிரியாசம் - பிசின். (சிந்)
நிரியாணம் - மோட்சம், யானையின் கடைக்கண்.
நிருத்தம் - கூத்து, சொற்பிரித்துப் பொருள் கூறும் நூல்.
நிருத்தன் - சிவன்.
நிருதர் - அரக்கர்.
* நிருதி - அரக்கி. (இரா)
நிருபதி - அரசன், குபேரன்.
நிருபம் - அரசலேக்கியம்.
நிருபன் - அரசன்.
நிருமலி - உமாதேவி.
நிருமாலியம் - கடவுளுக்கு நைவேதித்த சுத்தமானபொருள்.
நிருமித்தல் - சிருட்டித்தல்.
நிருவாணம் - மோட்சம், ஓய்வு.
* நிருவாணதீக்கை - முத்தியயக்குந்தீக்கை.
நிருவிகற்பம் - விகற்பமின்மை.
நிரூபணம் - ஆராய்வு.
நிரூபித்தல்-ஆராய்தல். (சிவஞா)
நிரை - வரிசை, பசு.
நிலத்தி - நுளம்பு.
நிலமகன் - செவ்வாய்.
நிலயம் - வீடு, தங்குமிடம்.
* நிலவல் - ஒளிவிடல். (பிங்)
நிலவு - ஒளி, சந்திரன்.
நிலவுதல் - நிலைபெறல். (சிந்)
நிலாமணி - சந்திரகாந்தம்.
நிலாமுற்றம் - வீட்டின்மேல் வெளியாயிருக்கும் முற்றம்.
நிலை - பூமி, நிற்பது, ஆச்சிரமம், தன்மை.
* நிலைமை - மெய். (பிங்)
நிலைக்களம் - நிலைக்குமிடம்.
நிலைபெறுத்தல் - காத்தல். (இரா)
நிலையழிவு - தோல்வி, நிலைகேடு.
நிவத்தல் - உயர்தல், வளர்தல்.
நிவப்பு - உயர்ச்சி, வளர்ச்சி.
நிவாசம் - வீடு, சார்பு. (சப்த)
நிவாரணம் - நீக்குதல், தடுத்தல்.
நிவிர்த்தி - நீக்கம், ஓய்வு.
நிவேசநம் - வீடு, ஊர்.
நிவேதநம் - அறிவித்தல், ஒப்புவித்தல்.
* நிழத்தல் - உள்ளதினும் நுணுகுதல், (தொல்) ஓய்தல்.
நிழல் - ஒளி, சாயை, நோய், அருள்.
நிழற்றல் - ஒளிவிடல், (சிந்) நிழல்செய்தல்.
நிறம் - நினைவு, (இரா) மார்பு, பண்பு.
நிறை - கற்பு, நீர்ச்சாலென்னும் பாத்திரம், நிறுத்துதல்.
* நினைவு - கருத்து. (பார) வருத்தம். (சிந்)

## நீ

* நீ - நீங்குதல்.
நீகாரம் - பனி, (பார) பனிக்காலம்.
நீகான் - மரக்கலத்தலைவன்.
நீட்டல் - மயிர்வளர்த்தல். (சிந்)
* நீட்டுதல்-கொடுத்தல். (வெண்)
நீடம் - பறவைக்கூடு. (சப்த)

நீடாணம் - கதி.
* நீண்டவன் - விட்டுணு.
* நீடு - மிகுதி,நெடுநேரம்.(சிந்)
நீத்தம் - வெள்ளம்.
நீத்தார் - முனிவர். (பிங்)
நீத்து - பெருக்கம், (பெரு) நீந்து புனல்.
நீதி - நியாயம், முறை.
நீந்துதல் - மிதத்தல், கடத்தல்.
நீபம் - கடம்பு, உத்தரட்டாதி.
* நீமம் - ஒளி. (பிங்)
நீர் - குணம், சலம்.
* நீர்தொடல் - சுத்திசெய்தல்.
நீர்நாள் - பூராடம்.
நீர்நிலை - குளம், கேணி.
நீர்மை - ஒளி, (நெடு) குணம்.
* நீர்வரைப்பு - பூமி. (பிங்)
* நீரகம் - பூமி. (கந்)
நீரம் - நீர், இரசம். (சப்த)
* நீராசநம் - தீபம் முதலியன கொண்டுசெய்யப்படும் ஒரு வித சாந்திக்கிரியை.(பார)
நீராட்டு - நீர்விளையாட்டு.
நீராவி - நீர்க்கேணி.
* நீலகண்டம் - மயில். (சப்த)
நீலகண்டன் - சிவன். (இரா)
நீலம் - கருமை, கருநிறப்பொருள், கருங்குவளை, இருள்.
நீலமேனியன் - விட்டுணு.
நீலலோகிதன் - சிவன். (சேது)
* நீலவண்ணன் - விட்டுணு.
நீலன் - சனி, நீல நிறமுடையவன்.
நீலாம்பரன் - பலதேவன்.
நீலி - கருநிறப்பெண், அவுரி, துர்க்கை.
நீவரம் - நாடு. (பிங்)
நீவாரம் - குளநெல்லு. (இரகு)
நீவி - சீலை, கொய்சகம், மூலதநம். (சப்த)
நீவியம் - சீலை.
நீவுதல் - கோதுதல், (சிந்) கைவிடல், தடவுதல், பூசுதல், துடைத்தல்.
* நீளம் - பறவைக்கூடு. (இரா)
நீளிடை - தூரம்.
* நீற்றல் - நீறுக்கல். (விநா)
* நீறுடல் - நீறுபூசுதல்.

## நு

* நுகம் - கணையமரம், (பெரு) பாரம், (சிறுபா) வலி.
நுகர்ச்சி - உணவு, அநுபவம்.
* நுகும்பு - பனையினிளங்காய்.
நுங்கு - பனையினிளங்காய்.
நுங்குதல் - விழுங்குதல்.
நுசுப்பு - மருங்குல்.
நுடக்கம் - அசைவு, (பெரு) கூத்து, (கலி) தள்ளாட்டம்.
நுடங்குதல்-துவளல்,அசைதல்.
* நுண்ணுக்கை-சூக்குமசரீரம்.
நுண்மை - கூர்மை, நுட்பம்.
நுணங்கு - நுண்மை.
நுணலை - தவளை.
* நுணுக்குதல் - கூராக்குதல்.
* நுணுகுதல் - சிறுத்தல், மெலிதல்.
நுதல் - நெற்றி, புருவம். (பிங்)
நுதலுதல் - கருதுதல்.
* நுதி - முன்,(திருக்)வணக்கம், நுனி.
நுதுத்தல் - தணித்தல். (கந்)
நுதுப்பு - தணிப்பு. (கந்)
நுந்துதல் - தள்ளுதல். (இரா)

* நும்மோர் - நும்மவர்.
நுவணை - நுண்மை, அரிசிமா.
நுவலுதல் - சொல்லுதல்.
* நுவறல் - அராவுதல். (மலை)
நுழை - நுண்மை, பலகணி.
நுளையர் - நெய்தனிலமாக்கள்.
நுறுக்கல் - துகளாக்கல். (இரா)
நுனித்தல் - கூர்த்தல். (சிந்)
* நுனிப்பு - கருதியறிதல்.
நுனை - முனை.

## நூ

நூ - எள்ளிளங்காய். (சூ)
நூக்குதல் - தள்ளுதல், (இரா) செலுத்தல்.
நூல் - ஆலோசித்தல், சாத்திரம்.
நூலோர் - அறிஞர், அமைச்சர்.
நூழில்-கொடிப்பிணக்கு, (குறி) கொடிக்கொத்தான், கொன்று குவித்தல்.
நூழிலாட்டு-கொன்றுகுவித்தல்.
நூழை - துவாரம், நுண்மை.
* நூற்கல் - நூல் செய்தல்.
நூற்பா - சூத்திரச்செய்யுள்.
* நூற்றல் - நூல்செய்தல்.
நூறு - சுண்ணம்பு. (சிந்)
நூறுகோடி - வச்சிராயுதம்.
நூறுதல் - அழித்தல், வெட்டல்.
நூறை - மலங்குமீன்.
நூன்மடந்தை - சரசுவதி. (பிங்)
நூன்முகம் - பாயிரம்.
நூனம் - குறைவு, நிச்சயம். (சப்)
நூனுழிகை - நாடா. (சிந்)

## நெ

நெகிழ்தல் - குழைதல், மலர்தல்.
நெகுதல் - இளகுதல், உருகுதல்.
நெஞ்சம் - மனம், மார்பு.
நெட்டி - கிடைச்சி, நெட்டை.
நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு.
நெடி-சிள்வீடு. "நெடிபடுகான்"
நெடியிவட்டம் - பரிசை.
நெடியோன் - விட்டுணு.
நெடில் - மூங்கில், (பிங்) நீளம்.
நெடுங்கழுத்தல் - ஒட்டகம்.
* நெடுநீர் - தாமதம். (வள்)
நெடுந்தகை - பெரியோன்.
* நெடுமை - பெருமை. (சிந்)
நெடுமொழி - வஞ்சினம், (புற) தன்மேம்பாட்டுரை.
* நெத்தம் - சூதுவிளையாடும் பலகை. (கலி)
* நெதி - திரவியம்.
நெதியம் - திரவியம்.
* நெய் - தேன், புழுகு. (சிந்)
* நெய்கை - நெய்தல். (சிந்)
நெய்த்தல் - கொழுப்படைதல்.
நெய்த்தோர் - இரத்தம்.
நெய்தல் - சாப்பறை, ஆம்பல்.
நெய்யரி - பன்னாடை.
* நெரியல் - மிளகு. (பெரும்பா)
நெருநல் - நேற்று.
* நெருநற்று - நேற்று.
* நெருநை - நேற்று. (கலி)
நெற்றி - படையுறுப்பு, உச்சி.
* நெற்று - நெறிப்பு. (இரா)
நெறி - நீதி, வழி, ஒழுக்கம்.
* நெறிவு - நெறிப்பு. (இரா)
நென்னல் - நேற்று. (கந்)

## நே

நே - நேயம். (புற)
நேடுதல் - தேடுதல்.
நேத்திரம் - கண், பட்டாடை.
* நேத்திராம்பு - கண்ணீர். (சப்) அம்பு - நீர்.

* நேதா - நாயகன், நடத்துவோன்.
* நேபத்தியம் - ஆபரணம், வேடம், வேடம்பூணுமிடம்.
நேமம் - காலம், எல்லை, பாதி.
நேமி - சக்கரம், தேர்ச்சில்லு, வட்டம், பூமி, கடல், சக்கரவாகம்.
நேயம்-நெய், அன்பு, எண்ணெய்.
நேர் - உடன்படல், உவமை, நுட்பம், சமம், பாதி, மிகுதி, கூடுதல், தனிமை, (திவா) நீதி, ஒப்புரவு.
நேர்தல்-தீண்டல், (பெரு) உடன்படல், சம்பவித்தல்.
* நேர்படல் - எதிர்தல். (திருவி)
நேர்பு - நீளம்.
நேரலர் - பகைவர்.
நேரார் - பகைவர்.
* நேரி - விந்தமலை. (கல்லா)
நேரியன் - சோழன்.
நேரேடு - நாவன்மரம்.

## நை

நைகரம் - துன்பம், வருத்தம்.
நைச்சியம் - தாழ்வு.
* நைட்டிகன் - மரணம் வரைக்கும் பிரமசரிய விரதத்திலே நிற்பவன்.
நைத்தல் - அழித்தல், (புற) தின்னல்.
நைதல் - வருந்தல், கெடுதல்.
* நைபத்தியம் - வேஷம். (சப்)
நைபுண்ணியம் - சாமர்த்தியம்.
நைமித்திகம் - யாதேனும் ஒரு நிமித்தம் பற்றிச் செய்யுங் கிரியை.
நையாயிகன் - நியாயசாத்திர பண்டிதன்.
நைவளம் - குறிஞ்சியாழிசை.
நைவேத்தியம்-கடவுளை உத்தேசித்துச்சமர்ப்பிக்கும்பொருள்.

## நொ

நொச்சி - சிற்றூர், மதில். (பிங்)
நொசிதல் - துவளல், வாடுதல், வருந்தல், நுணுகல், வளைதல்.
நொசிவு - துவள்வு, நுண்மை, வருத்தம்.
நொடி - காலநுட்பம், சொல்.
நொடித்தல் - சொல்லல், அழித்தல்.
* நொடுத்தல் - விற்றல்.
நொடை - விலை. (பெரு)
நொண்டல் - முகத்தல்.
நொதி - அருவருத்தசேறு.
நொதுத்தல் - தணித்தல்.
நொதுமல் - விருப்பு வெறுப்பின்மை.
நொதுமலர் - அயலோர்.
நொய் - குறுணி.
நொய்து - விரைவு, மெல்லியது.
நொவ்வு - தளர்வு, வருத்தம்.
நொள்ளல் - முகத்தல். (தணி)
நொறில் - அடக்கம், விரைவு.
* நொறுங்கல் - பொடியாதல்.

## நோ

நோ - வருத்தம். (இரா)
நோக்கம்-பார்வை, கண், அழகு, காவல், கருத்து.
* நோக்கனோக்கம்-கருதல், குறிப்பறிதல்.
நோக்காடு - நோதல்.

நோக்கு - கண், அழகு, கருத்து, பார்வை.
நோக்குதல்-பார்த்தல், காத்தல், கருதல்.
நோய்முகன் - சனி.
நோலார்-தவமிலார், பொறுமை யிலார்.
* நோலை-எள்ளுண்டை. (சில)
நோற்றல் - தவஞ்செய்தல், பொறுத்தல்.
நோன்பு - தவம், விரதம்.
நோன்மை-வலிமை, பொறுமை, தவம்.
நோன்றல்-பொறுத்தல்,தள்ளல்.
நோனுமை - பொறுமை.

ப

பஃறி-மரக்கலம், ஓடம். (பட்)
பக்கணம் - ஊர், வேடர்வீதி.
பக்கபாதம் - நடுநிலைதவறல்.
பக்கம் - அருகு, இறகு, சகாயம், நட்பு.
பக்கரை - குதிரைக்கலனை. (சிந்)
பக்கி - பறவை.
* பக்கிசைத்தல் - பிரிந்திசைத்தல்.
பக்குவம் - தகுதி, பருவம்.
பக்குவாசயம் - இரைப்பை.
* பகடி - பிரகிருதி. (திருநூ)
பகடு - பெருமை, மரக்கலம், எருது, ஆணெருமை,விசாலம்.
பகம் - ஐசுவரியம், செல்வம், புகழ், ஞானம், வீரியம், விருப்பின்மை, அழகு, விருப்பு, முத்தி. (சப்த)
பகர்தல் - சொல்லல், விற்றல்.
* பகர்வநர் - விற்பவர். (சில)
பகல் - பிரிவு, நடு, சூரியன், நாள், முகூர்த்தம், நுகத்தின் மத்தியாணி, படுத்தல், ஒளி.
* பகல்வன் - சூரியன். (இரா)
பகவதி - உமாதேவி, துர்க்கை.
பகவதிநாள் - பூரநாள்.
பகவன் - கடவுள். குரு, சூரியன். (பிங்)
பகவு - பங்கு, பிரிவு, பிளவு.
பகழி - அம்பு, அம்புக்குதை.
பகிர் - பங்கு.
பகிரண்டம் - அண்டரண்டம்.
பகிரதி - கங்கை.
பகுத்தல்-கொடுத்தல், பிரித்தல்.
பகுதி - இயற்கை, பிரிவு, பிரகிருதி.
பகுவாய் - பிளவுபட்டவாய்.
பகை - பகைவன், விரோதம்.
* பகைஞன் - விரோதி. (இரா)
பங்கசாதம் - தாமரை. (பார)
பங்கம்-சேறு, பாவம், தோல்வி, வளைவு,பயம்,துண்டம்,கொலை.
பங்கயம் - தாமரை, நாரை.
பங்கயன் - பிரமா.
பங்கி - ஆண்மயிர். பிறமயிர்.
பங்கிடு - பகுத்தல்.
பங்கு-பாதி, சனி, முடம், கூறு.
பங்குனி - உத்தரநாள்.
பங்கேருகம் - தாமரை, நாரை.
பச்சாத்தாபம் - தான் செய்தது குற்றம் என்று பின் இரங்குதல், துயருறல்.
பச்சிமம் - முதுகு, (இரா) மேற்கு.
பச்சை-மரகதம், புதன் தோல்.
* பச்செனல் - பசலையாதல்.
பசலை-வருத்தம், (முரு) தேமல்.

பசாசம் - பேய்.
பசிதம் - விபூதி, சாம்பல்.
பசு - பிராணி, எருது, மிருகம்.
பசுகரணம்-உயிர்க்குரிய செயல்.
பசுங்கதிர் - சந்திரன்.
* பசுஞானம்-நான்பிரமம் என்னும் ஞானம். (சித்)
* பசுத்துவம் - ஆணவமலம்.
பசுநா - பராய்மரம்.
* பசுநிலை - பசுக்கோட்டம்.
* பசுநீகாரம் - ஆணவமலம்,
பசுபதி - ஆன்மநாயகன், சிவன்.
* பசுபாலன்-இடையன். (பார)
பசும்பிடி - பச்சிலைமரம். (குறி)
பசை - அன்பு, பற்று, இலாபம்.
பசைந்தார் - நண்பர்.
பஞ்சகம் - ஐந்தன்கூட்டம்.
* பஞ்சத்துவம் - மரணம்.
* பஞ்சதுட்டன்-பஞ்சபாதகன்.
* பஞ்சநகாயுதம்-சிங்கம். (பிங்)
பஞ்சமம் - ஐந்தாவது.
பஞ்சமர் - ஐந்தாம்வருணத்தார்.
பஞ்சரம்-பறவைக்கூடு,செருந்தி.
* பஞ்சவடி - மயிரினாலாய பூணூல்.
பஞ்சவர் - பாண்டுவின்மக்கள்.
* பஞ்சவன் - பாண்டியன்.
பஞ்சாக்கரம் - ஐந்தெழுத்து.
* பஞ்சாசத்து-ஐம்பது. (சிவத)
பஞ்சாநநம் - சிங்கம்.
* பஞ்சாய் - கோரை. (வாண)
பஞ்சி-பஞ்சு, வெண்டுகில். (சிந்)
பஞ்சுரம்-பாலைப்பண். (வாண)
* பஞ்சேந்தியம் - ஐம்பொறி.
பட்டம் - சிங்காசநம், அரசனாற் கொடுக்கப்படும் பட்டப்பத்திரம், (சப்த) வழி, விலங்குதுயிலிடம்,கவரிமா,பெருங்கொடி, உத்தரீயம், குளம். (பிங்)
பட்டாங்கு - உண்மை. (வெண்)
பட்டாரகன் - தேவன், குரு.
பட்டி - இடம், நாய், பசுத்தொழுவம், களவு. (பிங்)
பட்டிகர் - கள்வர். (சேது)
* பட்டிகை - செவ்வந்தி. (பிங்)
* பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம், (சில) பாடல்பயிலிடம். (பிங்)
பட்டிமை - களவு, வஞ்சகம்.
பட்டோலை - அரசலேக்கியம்.
* படங்கு-சீலைவீடு, மேற்கட்டி, பெருங்கொடி.
* படநம் - படித்தல். (சப்த)
* படப்பு - கொல்லை. (பெரி)
படப்பை - தோட்டம், பக்கம்.
படம் - வஸ்திரம். (கந்)
படர்-துயர், ஏவலாளர், நினைவு.
படர்தல் - நினைத்தல், போதல்.
படலிகை - பூந்தட்டு, வட்டம்.
படல் - ஆகுதல், அழிதல்.
படலை - மாலை, பரந்தவடிவு.
படவு - தோணி.
படாகை - விருதுக்கொடி.
படாம் - சீலை, பெருங்கொடி.
* படார் - சிறுதூறு. (மு)
படி-பூமி, பண்பு, கற்படி, வாயிற்படி, நாழி, ஒப்பு, விதம், உருவம்.
* படிக்கால் - ஏணி. (சிந்)
படிகம் - பளிங்கு.
* படிகாரர்-வாயிலாளர். (இரா)
* படிச்சந்தம் - வேறொன்றாய்த் தோன்றினும் அதுவே என்று கொள்ளப்படும் இயல்பு

டைய பிரதிருபம். இது பிரதிச்சந்தம் என்னும் வடமொழித்திரிபு. (திருக்)
* படித்திரம் - சூட்டிறைச்சி.
படிதல் - கலத்தல். (பிங்)
படிமக்கலம் - கண்ணாடி.
படிமத்தான் - வெறியாட்டாளன்
படிமம் - பாவை, (சிந்) விரதம்.
படிமா - ஒப்பு. (கோயி)
படியகம் - படிக்கம். (சிந்)
* படியச்சு - கட்டளைக்கருவி.
* படியளந்தோன் - விட்டுணு.
* படியெடுத்தல் - யாதாயினும் ஒன்றன் சொரூபத்தை அது கிடந்தவாறே எடுத்தமைத்தல். (இரா)
படிவம் - தான்வழிபடுதெய்வம், (பெரு) வடிவம்,உடம்பு.(சிந்)
* படிவு - வடிவு. (சேது)
படிறு-பொய்,சூது,களவு. (பிங்)
படீரம் - சந்தனம், கருங்காலி.
படு - மரத்தின்குலை, பேரறிவு, கள், (பிங்) கொடுமை, நிபுணன், கூர்மை, குளம். (சப்த)
படுகர்-இழிந்தேறும்வழி, நீர்நிலை
படுகளம் - போர்க்களம். (சிந்)
படுகாடு - சுடுகாடு.
படுத்தல் - செய்தல், கொல்லல்.
படுத்துவம் - வல்லமை.
படுதல் - உண்டாதல், அழிதல், ஒலித்தல், முட்டுதல்.
படுநிலம் - பாலைநிலம், சுடுகாடு.
படுபழி - கொடும்பழி. (சிந்)
* படுபாக்கு - படுதல். (வள்)
படுவர் - கள்ளுவிற்பவர்.
* படுவி - குட்டினி. (சிந்)
படை-கல்லணை, (சிந்) படுக்கை.
* படைப்பு - செல்வம். (புற)
பண் - கல்லணை, இசை, தகுதி, பாட்டு.
* பண்டகன் - அலி. (சேது)
பண்டம்-பொருள்,மெய்யுணர்வு.
பண்டாரம் - திரவியசாலை.
* பண்டி - வண்டி, (சிந்) வயிறு.
பண்டிதன் - புதன், புலவன், வைத்தியன்.
பண்டு - பழமை.
பண்ணவன்-கடவுள், குரு, முனிவன். (பிங்)
பண்ணியம் - பலபண்டம்.
பண்ணுவார் - குதிரைப்பாகர்.
பண்ணை - நீர்நிலை, வயல், விலங்கின்படுக்கை,சவை, மகளிர் கூட்டம்.
* பண்ணையாடல்-விளையாடல்.
பண்பு - குணம், தகுதி, செயல், நன்மை.
* பண்புரைப்போர் - தூதர்.
பணதரம் - பாம்பு.
பணம்-பொன், விலை, பாம்பின் படம்.
பணவை - பரண். (பிங்)
பணாமணி - நாகரத்திநம்.
பணி - தொழில், பாம்பு, ஆபரணம்.
* பணிக்கன் - உபாத்தியாயன்.
* பணிதம் - பந்தயப்பொருள்.
பணியார் - பகைவர்.
பணிலம் - சங்கு.
* பணிவிடை - ஏவல். (விநா)
பணை - வயல், பருமை, மூங்கில், அரசமரம், மரக்கொம்பு, முரசு. (பிங்)

பணைத்தல் - பிழைத்தல், (சிந்) பருத்தல்.
* பணைப்பு - பெருத்தல். (நைட)
பத்தா - கணவன், தலைவன்.
பத்தினி - மனைவி, கண்ணகி.
* பத்திமை - அன்பு. (தணி)
பத்தியம் - பாட்டு, இனியது.
பத்திரம் - நன்மை, இலை, இறகு, உடைவாள், அழகு, பொன்.
* பத்திரலிங்கம் - பலிபீடம்.
பத்திராசநம் - சிங்காசனம்.
பத்திரி - அம்பு, பறவை, குதிரை, இலை.
பத்திரை - காளி, நற்பசு.
* பதக்கிணம் - பிரதக்கிணம்.
பதக்கு - இருமரக்கால் கொண்டது.
பதகன் - பாதகன். (திருவி)
பதகி - பாதகி. (இரா)
பதங்கம் - பறவை, விட்டில்.
பதங்கன் - சூரியன்.
பதடி - பதர். (இரா)
* பதப்பாடு - மதில். (பிங்)
பதம் - சொல், சோறு, வழி, கால், பக்குவம், பொழுது, அவிழ், (பிங்) அறுகு, அடையாளம், இடம், பொருள், முயற்சி, கபடம், விடயம்.
பதர் - உள்ளீடற்றது.
பதலை-ஒருகட்பறை, மலை, சாடி.
பதவி - கதி.
பதவை - வழி.
* பதவு - அறுகு. (வெண்)
* பதாகன்-பதாகையுடையவன்.
* பதாகினி - சேனை. (சேது)
பதாகை - பெருங்கொடி. (பட்)
* பதாதர் - காலாள், (பார)
* பதார்த்தம் - பொருள்.
பதி - அரசன், தலைவன், காப்பவன், ஊர், குரு, கடவுள்.
பதிகம் - பாசி, பாயிரம்.
பதிகன் - வழிப்போக்கன்.
* பதிஞ்ஞை - பிரதிஞ்ஞை.
* பதிட்டித்தல் - நிலைப்படுத்தல்.
* பதிட்டிதம் - நிலைபேறு.
* பதிட்டை - பிரதிட்டை.
பதித்தல் - தாழ்த்துதல்.
பதிதன் - ஒழுக்கம் வழுவினவன்.
* பதிப்பு - பதித்தல். (விநா)
பதிவிரதம் - மகளிர்கற்பு.
பதிவிரதை - கற்புடையவள்.
பதுக்கை - சிறுதூறு, கற்குவை.
பதுமநாபன் - விட்டுணு.(சப்த)
* பதுமம்-தாமரை, ஈயம். (சப்)
* பதுமயோனி - பிரமன்.
* பதுமாக்கன் - விட்டுணு.
* பதுமினி - தாமரைப்பூமணம் அழகிய மேனி நல்லொழுக்கம் முதலிய சிறந்த இலக்கணமுடை பெண். (பார)
பதுமை - இலக்குமி. (இரா)
பந்தநம் - கட்டுதல், கயிறு.
பந்தம்-தொடர்பு, (பெரி) கட்டு, கைவிளக்கு, திரட்சி, உறவு, சரீரம், நூல், மயிர்முடி,
* பந்தனை - கட்டு. (இரா)
* பந்தாடல் - உருட்டல்.(விநா)
பந்தி - வரிசை, யானைமுதலியன கட்டுஞ்சாலை.
பந்தித்தல் - கட்டுதல்.
பந்து - மட்டத்துருத்தி, (சிந்) உறவு.
பம் - நட்சத்திரம்.

பம்புதல் - எழுதல், (திற) நெருங்குதல், (உரி) படர்தல், பொலிதல். (திவா)
பம்பை - முல்லைப்பறை. (பிங்)
பமரம் - வண்டு.
பயத்தல் - கொடுத்தல், பிறப்பித்தல்.
பயந்தாள் - தாய்.
பயம்-அச்சம், நீர், பால், பயன்.
பயம்பு-பள்ளம், படுகுழி. (சிந்)
பயல் - பாதி, சிறுவன்.
பயாநகம் - அச்சச்சுவை.
பயிக்கன் - பிச்சைபுகுவோன்.
பயிர் - பசுமை, (இரா) அழைத்தல், மிருகங்கள் ஒன்றை ஒன்றழைக்கும் ஒலி. (புற)
* பயிர்த்தல்-அழைத்தல். (இரா)
பயிர்ப்பு - மகளிர் குணங்களுளொன்று; அது முன்காணுதவைகளைக் கண்டுழி மனங்கொள்ளாமை, அருவருப்பு.
பயிலல் - நெருங்கல், (புற) பழகுதல்.
பயின் - குருத்து, பிசின், (சிந்) அரக்கு.
* பயின்மொழி-குறிப்புமொழி.
பயிணி - கூடல். (பிங்)
பயோததி - பாற்கடல். (இரா)
பயோதரம் - மேகம், முலை.
பர்க்கன் - சிவன்.
* பரக்கழிவு - பழிவிளைக்கை.
* பரகதி - மோக்கம்.
* பரகீயம் - பிறனுக்குரியது.
பரகாயம் - பிறனுடம்பு, பரன் - பிறன்.
பரசமயம் - பிறசமயம்.
பரசு - மழு, மூங்கில். (பிங்)
பரசுதல் - துதித்தல்.
பரசுபாணி-சிவன், பரசிராமன்.
பரஞ்சுடர் - கடவுள்.
பரணம் - தரித்தல், வளர்த்தல்.
பரணி - பரிமளச்சாந்திடுஞ்செப்பு, (இரா) ஆயிரம் யானையைக் கொன்ற வீரனைத் தலைவனுகக் கொண்டு பாடும் ஒரு பிரபந்தம். (பார)
பரத்தர் - தூர்த்தர்.
பரதம்-கூத்து,நாட்டியசாத்திரம்
பரதர் - வணிகர், நெய்தனிலமாக்கள்.
* பரதாரம் - பிறன்மனைவி.
* பரதாரி - பிறன்மனைவியைப்புணர்பவன்.
* பரந்தாமம் - பரமபதம்.
பரந்தாமன் - விட்டுணு. (பிங்)
பரப்பிரமம் - மேலான கடவுள்.
பரபுட்டம் - குயில். (பிங்)
* பரபோகம் - பேரின்பம்.
பரம் - பாரம், கல்லணை, முன், சட்டை, மோக்கம், பிரமம், உத்தமம்.
பரம்படித்தல்-பரம்பினுலே நிலஞ் சமமாக்கதல்.
பரம்பரன் - கடவுள். (திருவி)
பரம்பரை - வமிசம், வரிசை.
பரம்பு-வயல் திருத்தும்பலகை, பரம்பினுற்றிருத்திய நிலம்.
பரமசுந்தரி - தருமதேவதை.
பரமம் - முதன்மை, மேன்மை, பிரதானம்.
* பரமவிரதி - நைட்டிகப்பிரமசாரி.
பரமன்-பெரியவன், (இரா) கடவுள், சிவன்.

பரமாணு - மிகநுண்ணிய அணு.
பரமாத்துமா - கடவுள்.
பரமேட்டி - பிரமா.
பரல் - வித்து, பருக்கைக்கல்.
பரலோகம் - மேலான உலகம்.
பரவல் - வணங்கல். (பிங்)
பரவுதல் - துதித்தல், பரம்பல்.
பரவை - பரத்தல், கடல்.
பரவைவழக்கு - உலகவழக்கு.
பரன் - கடவுள், பிறன்.
* பரா - விருப்பின்மை, எதிர், மாறு, பிரதானம், திரும்புதல், விடுதல்முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல்.
பராக்கிரமம்-சரீரசாமர்த்தியம்.
* பராக்கு - திரும்பியநோக்கம். பரா+அக்கு.
பராகண்டம் - பராமுகம்.
பராகம் - தூளி, மகரந்தம்.
பராசத்தி - உமாதேவி.
பராசயம் - தோல்வி.
* பராசலம்-திருப்பரங்குன்று.
பராதீநம் - பிறனைத்தலைவனாகவுடையது.
பராபரன் - மேலானபரன்.
பராமர்சம் - ஆராய்ச்சி.
பராமுகம் - முகங்கொடாமை.
பராயணம் - பெருவிருப்பு, நன்னிலை, குறிப்பு. (சப்த)
பராயணன்-குறிப்பறிவோன்.
பரார்த்தம் - பிறன்பொருட்டு.
பராரை - பருமையான அரை.
* பராவு - வாழ்த்து. (சிந்)
பரி - அதிசயம், விடுதல், சூழ, சிறப்பு, மகிழ்ச்சி, சோகம்முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல், செலவு, குதிரை, பெருமை, சுமை, விரைவு, மிகுதி. (சப்த)
பரிக்கிரகம் - மனைவி, சபதம்.
* பரிக்கிரமம்-சூழவரல். (சப்த)
பரிகம் - அகழி, வளைதடி.
பரிகரம் - பரிவாரம், (சிந்) கட்டில்.
பரிகரித்தல் - குற்றங்களைதல்.
பரிகலம் - சேனை, பரிவாரம்.
பரிகாசம் - அவமானம். (சேது)
பரிகாரம் - விடுதல், குற்றக்களைதல்.
பரிசயம் - பழக்கம், உறவு.
பரிசனம் - தீண்டுதல், உறவு.
* பரிசனன் - வாயு. (பாரத)
பரிசாரகன் - ஏவல்செய்பவன்.
பரிசில் - கொடை, சம்மானக்கொடை.
* பரிசிலன் - பரிசில் பெறுவோன். (இரா)
பரிசு - கொடை, பண்பு, பிரகாரம்.
பரிணதன் - பரிபக்குவமுடையவன், அறிஞன்.
பரிணமித்தல் - வேறுபடுதல்.
பரிணயம் - விவாகம்.
பரிணாமம்-வேறுபாடு, விகாரம்.
பரித்தல் - சுமத்தல், தாங்குதல்.
பரித்தியாகம்-முற்றக்கைவிடல்.
பரிதல்-அறுதல், இரங்கல், விரைதல்.
* பரிதவித்தல் - துயருறல்.
* பரிதாகம்-வெம்மை. (பாரத)
பரிதாநம்-ஒன்று கொடுத்து மற்றொன்று வாங்குதல். (சப்த)

பரிதாபம் - துக்கம், வெம்மை, சோகம்.
பரிதி-சூரியன், பரிவேடம், வட்டம்.
* பரிதியங்குடிங்கு - சக்கரவாகம். (இரகு)
* பரிப்பு - இயக்கம். (புற)
பரிபவம் - இகழ்ச்சி, தோல்வி.
* பரிபவித்தல் - அவமதித்தல்.
பரிபாகம் - சாமர்த்தியம்; பக்குவம். (தணி)
பரிபாடை-சமுதாயப் பொருளை விசேடித்துக்கூறுங் குறிப்பு, உத்தி.
பரிபாலநம் - பாதுகாத்தல்.
பரிபுரம் - சிலம்பு.
பரிபூரணம் - முழுநிறைவு.
பரிமளம் - மிகுமணம். (பிங்)
பரிமாணம் - அங்குலம் முதலிய அளவு.
பரியகம் - கிங்கிணி, காற்சவடி.
பரியங்கம் - கட்டில். (பார)
பரியந்தம் - எல்லை.
பரியாயம்-முறை,கிரமம்.(சப்த)
பரியாளம் - பரிவாரம்.
பரிவட்டம் - சீலை. (பிங்)
* பரிவருத்தனம் - பொருண்மாறுதல்.
பரிவருத்தனை-பொருண்மாறுதல்
பரிவாதம் - அபவாதம். (பிங்)
பரிவாரம்-சூழ்ந்துநிற்குஞ்சனம்.
பரிவு - அன்பு, துயர்.
* பரிவேடிப்பு - பரிவேடம்.
* பரீக்கை-ஆராய்வு,சோதித்தல்.
* பருக்கென்றல் - பருத்துக்காட்டல். (சிந்)
பருப்பதம் - மலை.
பருப்பு - பருமை. (சிந்)
பருப்பொருள் - நுண்மையில்லாப்பொருள்.
பருமம்-கலணை, பதினெண்கோவைமணி, கவசம். (பிங்)
பருமித்தல்-அலங்கரித்தல், (சிந்) சிரமஞ்செய்தல். (பிங்)
பருவம் - பக்குவம், பொழுது.
பருவரல் - துன்பமுறல்.
பரூஉ - பருமை.
* பரேர் - பேரழகு. (பட்)
பரோட்சம் - காணப்படாதது.
* பல்காற்பறவை - வண்டு.
பல்குதல் - பெருகுதல்.
பல்லம் - அம்பு, கரடி. (சேது)
பல்லவம் - தளிர், விஸ்தாரம்.
பல்லவர் - ஒருசாதியார், தூர்த்தர், கீழ்மக்கள்.
பல்லாண்டு - சோபநம். (பிங்)
பல்வலம் - சிறுகுளம், வாவி.
பலகணி - காற்றுப்புகும்வாயில். கண் - துவாரம். இ
பலகறை - சோகி.
பலகாரம் - யானைமேற்றவிசு.
பலகை - யானைமேற்றவிசு.
பலம் - பழம், சேனை, பயன், கிழங்கு.
* பலரறிசொல் - பெருஞ்சொல்.
பலன்-பலதேவன், (பார)பயன்.
* பலாக்கன்-குறும்பார்வையன்.
பலாசம் - இலை, புனமுருக்கு.
* பலாஞ்சிலாம் - பலவுஞ்சிலவும். (திருவா)
பலாலம் - வைக்கோல். (சேது)
பலி - பூசை, (சேது) பிச்சை, அவி, மாமிசம்.
பலித்தல் - பலனுடைத்தாதல்.

பலிதம் - நரைமயிர்.
பலிநம் - காயுடையமரம்.
பலிபுட்டம் - காகம்.
* பவ்வம் - பருவம். (உண்மை)
பவ்வீ - மலம். (தணி)
பவம் - பாவம், பிறப்பு, உளதாதல், மரம்.
பவமானன் - காற்று.
* பவர் - கொடி. (வெண்)
பவர்க்கம் - நரகம். (சேது)
பவர்தல்-பரத்தல். (இரா)
* பவன் - சிவன். (திருவி)
பவனம் - இராசி, பூமி, வீடு.
* பவனன் - காற்று. (சேது)
* பவனகதி - வாயுகதி. (பார)
பவனசனம்-பாம்பு. (மறைசை)
பவனி-உலாப்போதல். (திருவி)
பவாநி - உமாதேவி. (பிங்)
பழங்கண் - துன்பம், மெலிவு.
* பழஞ்சொல் - முதுசொல்.
பழமலை - விருத்தாசலம்.
பழவினை - ஊழ்வினை.
பழனம் - நீர்நிலம், (சிங்) மருதநிலம், வயல்.
பழி - குற்றம், பொல்லாங்கு.
பழிச்சுதல் - துதித்தல்.
பழிசை-இகழ்ச்சி. (கலி)
* பழு - விலாவெலும்பு. (சிங்)
* பழுத்தல் - அடிப்படல். (சிங்)
பழுது - பயனின்மை. (தொல்) பொய்.
* பழுதை - கயிறு. (பிங்)
பழுப்பு - நென்பு, (கங்) அரிதாரம். (சிங்)
பழுமரம் - பழுத்தமரம், ஆலமரம். (சிங்)
பழுவம் - காடு. (சிங்)
பழையர் - கள்ளுவிற்பவர்.
பள்ளி-இடைச்சேரி, (சிங்) முனிவர்வாசம், படுக்கை, நித்திரை, கோவில், சிற்றூர். (பிங்)
பள்ளை - ஆடு.
* பளகு - குற்றம். (காஞ்சி)
பளிக்கறை - பளிங்குமண்டபம்.
பளிங்கு - கருப்பூரம், (சிங்) கண்ணாடி, சுக்கிரன்.
பளிதம் - கருப்பூரம். (சிங்)
பற்பம் - நீறு, விபூதி.
பற்றம் - கற்றை. (சிங்)
பற்றல் - பற்றுதல்.
பற்றலர் - பகைவர்.
பற்றற்றூர் - முனிவர்.
பற்றுக்கை - அம்புகட்டுங்கயிறு.
பற்றுசு - உலோகம்பொருத்தும் அற்பதுண்டம்.
பற்றார் - பகைவர். (வெண்)
பற்று - பெற்றதன் மேலுள்ள விருப்பு, (சிங்) அன்பு.
பற்றுக்கோடு - ஊன்றுகோல், ஆதாரம்.
பற்றை-சிறுதூறு, செங்காந்தள்.
பறந்தலை - போர்க்களம், சுடுகாடு.
பறப்பன் - தேள். (சேது)
பறப்பை - பறவை. (தணி)
* பறம்பர் - தோல்வேலைசெய்பவர்.
பறம்பு - மலை, முலை. (பிங்)
பறல் - பறவை. (திருக்)
* பறிவை - பட்டிகை. (பிங்)
பறை - பறத்தல், (சிங்) இறகு, சொல்.
* பறைதல்-அழிதல், (சிங்) பேசுதல்.

* பறையலகு - பலகறை. (சிந்)
* பன் - அரிவாட்பல். (நன்)
பன்னகம் - பாம்பு.
பன்னகவைரி - கருடன்.
பன்னசாலை - முனிவர்வாசம்.
* பன்னம் - இலை. (பிங்)
பன்னல்-ஆராய்தல், (சிந்)நெருங்குதல்,(சூ)சொல்லல், பருத்தி.
பன்னி-மனைவி, பனிநீர், சீப்பு. [தெலுங்கு] (இரகு)
பனசம் - பலாமரம். (சேது)
பனத்தி-பார்ப்பனத்தி.
பனவன்-பிராமணன். (பெரி)
பனி - சொல், "பாகடர்ந்தபனி" (இரா) துன்பம், நோய், குளிர், பயம், நடுக்கம். (பிங்)
பனிச்சை-பின்னிமுடிக்கும்மயிர்ச்சுருள்.
பனித்தல் - துளித்தல், நடுங்கல்.
பனிப்பகை - சூரியன். (இரகு)
* பனிப்பு - சொல்லல். (இரா)
பனுவல்-பாட்டு, இசைப்பாட்டு, கேள்வி, (புற) சாத்திரம், நூல்.

## பா

பா-பரந்து செல்வதோரோசை, (தொல்) காத்தல், (காஞ்) பரப்பு,(புற)பஞ்சுநூல், பாட்டு, சுத்தம்.
பாக்கம் - ஊர், கடற்கரையூர்.
பாக்கன் - பூனை.
* பாக்கியம் - நல்வினை. (சிந்)
பாகசாதநன்-இந்திரன். (இரா)
பாகசாதநி - இந்திரன்மகன்.
பாகசாலை - அடுக்களை.
பாகதம் - பிராகிருதம்.
பாகம் - பங்கு, பாதி, பிச்சை, பக்குவம்.
பாகல் - பலா.
பாகலம் - யானையின் நோய்.
பாகவதர்-விட்டுணுசமயத்தார்.
பாகிநேயன் - சகோதரிமகன்.
பாகீரதி - கங்கை. (பார)
பாகு-சருக்கரை, குழம்பு, பால், பாக்கு, பாகன்.
பாகுடம் - கையுறை, (சிந்) அரசிறை.
பாகுபாடு - பிரிவு.
பாங்கர் - ஓமைமரம், (குறி) பக்கம்.
பாங்கு-தோழன், (பார) அழகு, உரிமை, பக்கம்.
பாசகன் - பாகஞ்செய்பவன், அக்கினி.
பாசடை - பச்சிலை.
பாசண்டம் - வேதவொழுக்கத்திற்குவேறான சமயம்.
பாசதரன் - இயமன், வருணன்.
பாசம்-அன்பு,கயிறு,வலை,பேய்.
* பாசவர் - கயிறுவிற்பவர்.
பாசறை-பகைமேற் சென்றோர் உறையுமிடம். (பிங்)
பாசனம் - சுற்றம், உண்கலம்.
பாசி - நாய், கிழக்கு. (புறநா)
*பாசிநீக்கம்-சொற்றோறும் அடிதோறும் பொருளேற்று நிற்கும் பொருள்கோள். (இறை)
பாசுபதன் - சிவன்.
பாசுரம் - வாசகம்.
பாஞ்சசன்னியம் - விட்டுணுவின் சங்கு.
பாஞ்சராத்திரம் - விட்டுணுசமயவகையுள் ஒன்று.

பாஞ்சராத்திரி - விட்டுணுசமயி.
பாஞ்சாலி - திரௌபதி.
* பாட்டம்-தோட்டம். (கலி)
* பாட்டி - பாண்மகள். (பிங்)
பாட்பம் - கண்ணீர்.
பாடகம் - பாதகடகம், தெரு.
பாடகன் - உபாத்தியாயன்.
பாடணம் - பேசுதல்.
பாடம் - ஒளி, (சிங்) படித்தல், படிக்கப்படுவது.
பாடலம்-குதிரை, சிவப்பு, பாதிரிமரம். (பிங்)
பாடவம் - வன்மை. களிப்பு, ஆரோக்கியம். (சப்த)
* பாடாணம் - கல்லு. (திருவி)
பாடி - பாசறை, சேனை, ஊர், முல்லைநிலத்தூர், நாடு.
பாடிகாவல் - களைகணுவான் ஒருவனைக்கொண்டு வேந்தன் செய்விக்கும் ஒரு தண்டத்தொழில். (சிவஞா)
* பாடித்தல்-பேசுதல். (சிவத)
பாடியம் - உரை, சொல்லற்பாலது.
பாடினி - பாடன்மகள். (புற)
பாடு - பக்கம், ஓசை, பெருமை, கேடு, (பிங்) துயில். (சிங்)
* பாடுவி - பாடுவிச்சி. (கலி)
பாடை - சொல். (பார)
* பாண் - தாழ்ச்சி (சிங்) இசைப்பாட்டு.
பாண்டம் - பாத்திரம்.
பாண்டரங்கம் - சிவபிரானாடிய கூத்து.
பாண்டரங்கன் - சிவன்.
பாண்டவர் - பாண்டுபுத்திரர்.
பாண்டித்தியம் - புலமை.
பாண்டில் - வட்டம், தகழி, கட்டில், தாளம், எருது, வாகைமரம், குதிரைவண்டி. (பிங்)
பாண்டு - வெண்மை. (சப்த)
பாண்டுரம் - வெண்மை. (சப்த)
பாணம் - அம்பு, மழைவண்ணக்குறிஞ்சி.
பாணி - தாமதம், (சிங்) காலம், தாளம், பாட்டு, ஓசை, அழகு, அன்பு, நாடு, நீர், கை.
பாணிக்கிரகணம் - விவாகம்.
பாணித்தல் - தாமதித்தல்.(இரா)
* பாணு - பாட்டு. (சிங்)
* பாத்தல்-பகுத்தல். (சிறுபஞ்)
பாத்தியம் - கால்கழுவக்கொடுக்கும் நீர், பாதசம்பந்தமுடையது.
* பாத்திரம்-தக்கோன். (விநா)
பாத்து - கஞ்சி, சோறு, பகுத்திடல்.
பாதகம் - துரோகம்.
பாதசாலம்-காலணிமணிவடம்.
பாதபம் - மரம், பாதபீடம்.
பாதம் - நீர், "பாதத்தில்வீழ்வதோ" (பாரத) கால், வேர்.
* பாதலக்கம் - காலிலக்கம்.
* பாதவம் - தோட்டம், (பிங்) மரம்.
பாதீடு - பங்கிடுதல், காத்தல்.
* பாதுகம் - மிதியடி. (இரா)
* பாதேயம்-வழிக்குரிய உணவு.
பாதை-மரக்கலம், (இரா) வழி.
பாந்தல் - பதுங்கல்.
பாந்தள்-பாம்பு, பெரும்பாம்பு.
பாந்தன் - வழிப்போக்கன்.
பானீயம் - நீர், குடிக்கத்தக்கது.
பாம்பு-வரம்பு,(பிங்)ஆயிலியம்.

பாம்புரி - அகழி. (சூடா)
* பாமகள் - சரசுவதி. (திருவி)
பாமடந்தை - சரசுவதி.
பாமம் - ஒளி, பரப்பு. (இரா)
பாமரன் - நீசன், கீழ்மகன்.
* பாமினி - பெண்.
பாய்ச்சல் - எழுச்சி, (சூடா) பெருக்கல். (இரா)
பாய்த்துதல் - பரப்புதல். (சிந்)
பாய்தல் - பரம்புதல்.
பாய்மா - குதிரை, புலி.
பாயசம் - பாற்சோறு, பாற்சொற்றி.
பாயம் - மனம் விரும்பியது.
பாயல் - படுக்கை.
பாயிரம் - புறவுரை.
பாயு - அபானவாயுஸ்தானம். (சப்)
பார் - பூமி, தேர்ப்பலகைப்பா, தடை, பாறை.
பார்க்கவன் - சுக்கிரன், பரசிராமன்.
பார்சுவம் - பக்கம்.
பார்த்தன் - அருச்சுனன்.
பார்த்திவன் - அரசன்.
* பார்ப்பனி - பிராமணப்பெண்.
பார்ப்பு - பறவைக்குஞ்சு, பார்த்தல்.
பார்வல் - பறவைக்குஞ்சு. (கந்)
பார்வை - கண், (சூடா) பார்த்தல்.
பாரகம் - திரைச்சீலை, பூமி.
பாரகன் - தாங்குபவன், கரைகண்டவன்.
பாரசிகை - பருந்து. (பிங்)
பாரணம் - விரதமுடிவிற் செய்யும் உணவு; உண்ணுதல். (சப்)
பாரதர் - பரதவமிசத்தார்.
* பாரதவருடம் - பரதகண்டம்.
பாரதாரிகன் - பிறன்மனைவியைப் புணர்பவன்,
பாரதி - சரசுவதி, மரக்கலம்.
பாரம் - பரிக்கப்படுஞ்சுற்றம், (புற) பருத்தி, (குறி) கரை, பொறை, தோணி, கவசம், கனமுள்ளபொருள். (சப்த)
பாரம்பரியம் - வழிவழியாய் வந்தது.
* பாரமிதை - பரிபக்குவர்கள் புத்தபதவியைப்பெறுதற்கு வேண்டுவனவாகப் பௌத்தநூல்களிற் சொல்லப்பட்ட தானம், சீலம் பொறை முதலியன. பாரம் - கரை. இதை - அடைந்தது.
பாராசரி - வியாசமுனிவன்.
பாராட்டுதல் - மெச்சுதல்.
பாராயணம் - நியமமாகப்படித்தல்.
பாராவதம் - புறு.
பாராவளை - சுழல்படை. (பிங்)
பாராவாரம் - கடல், கடற்கரை.
பாரி - மனைவி, நற்புடைவை, (சேது) பூமி, ஊர், கட்டில்.
பாரிசம் - பக்கம்.
பாரிசேடம் - எஞ்சியது.
பாரிடம் - பூதம், பூமி.
பாரித்தல் - பிறப்பித்தல், பரத்தல், பரப்புதல், பருத்தல்.
* பாரித்துரைத்தல் - விரித்துச்சொல்லல்.
பாரிப்பு - பாரித்தல்.
பால் - பாதி, இடம், குணம், பக்கம், திக்கு, இயல்பு, பகுதி, ஊழ், பங்கு, வெண்மை.

பாலகன் - சிறுவன், காப்பவன்.
* பாலடி - பாற்சோறு. (விநா)
பாலம்-நெற்றி, மழு, பூமி.(பிங்)
* பாலமை-அறியாமை. (இரா)
பாலலோசநன் - சிவன்.
* பாலலோசநி - உமாதேவி.
பாலனம்-காத்தல், பாற்சோறு.
பாலி - பாலியாறு.
பாலிகை - அதரம், வட்டம்.
பாலித்தல் - கொடுத்தல்.
பாலை - மிருகசீரிடம்.
பாலைக்கிழத்தி-துர்க்கை. (சேது)
பாவகம் - எண்ணுதல், சுத்தம், அபிநயம், நினைவு. (சப்)
பாவகன் - நெருப்பு, சுத்திசெய்பவன்.
பாவகாரி - பாவஞ்செய்பவன்.
பாவகி-முருகக்கடவுள். (திவா)
பாவம்-தீயசெயல், கருத்து, அபிநயம், விளையாட்டு, மெய்ப்பாடு.
பாவமூர்த்திகள் - வேடர்.
* பாவர் - பாவிகள். (தணி)
பாவல் - பரம்புதல், மிதியடி.
பாவனம்-தியானித்தல், சுத்தம்.
* பாவனன் - வீமன். (பாரத)
பாவனை - எண்ணம், தியானம்.
பாவாணர் - புலவர்.
* பாவி - வரற்பாலது. (பாரத)
பாவித்தல் - எண்ணுதல். (இரா)
பாவிப்பு - எண்ணம். (இரா)
* பாவிடல் - பரத்தல். (இரா)
பாவுதல் - பரம்புதல்.
பாவை - பெண், இலக்குமியாடியகூத்து.
பாழ் - வெறுமை, சூனியம்.
பாழ்த்தல் - பாழாதல்.
* பாழ்படல் - அழிதல். (இரா)
பாழி - முனிவர்வாசம், விலங்குதுயிலிடம், அகலம், வலி, நகரம், குகை, சிறுகுளம், பெருமை, வீடு, பாழ்.
பாளம்-தகட்டுவடிவம். (இரகு)
பாளிதம் - கண்டசருக்கரை, சோறு, கருப்பூரம், பட்டுச்சீலை, குழம்பு.
பாளையம் - பாசறை. (பிங்)
பாற்கரன் - சூரியன், ஒளியுள்ளவன்.
* பாற்றுதல் - நீக்குதல், ஓட்டுதல். (தணி)
பாறல் - ஓடுதல், எருது.
பாறு - பருந்து, மரக்கலம்.
பாறை - சிறுதிட்டை. (பிங்)
பான்மை - தன்மை, தகுதி.
பானல் - கருங்குவளை, வயல்.
பானாள் - பாதிநாள். (திவா)
பானு - சூரியன், பிரபு.

## பி

பிகம் - குயில்.
பிங்கலம்-பொன், வடக்கு, (பிங்) பொன்னிறம், குரங்கு. (சப்த)
* பிங்குசம் - தலைக்கோலம்.
பிச்சம் - பீலிக்குடை, வெண்குடை, ஆண்மயிர், (சூடா) மயிலின் தோகை, வால். (சப்த)
* பிச்சாடனம் - பிச்சைக்குத்திரிதல்.
* பிச்சி - மயக்கமுள்ளவள், (இரா) முல்லை. (பிங்)
பிசி - அரும்பொருள், பொய், சோறு. (பிங்)
பிசிதம் - ஊன், வேம்பு.

பிசிதாசனன் - அரக்கன்.
பிசுமந்தம் - வேம்பு.
பிசுநம் - காகம்.
* பிசுநனன் - நாரதன், கொடியவன். (சப்)
பிஞ்சகம் - } தலைக்கோலம்.
பிஞ்ஞகம் - }
பிஞ்சம் - இறகு.
பிட்டம் - இடித்தமா, ஈயம்.
பிடகம் - ஓலைப்பெட்டி.
பிடகர் - வைத்தியர். (சேது)
* பிடகை-பூந்தட்டு, (நெடு) பூங்கூடை. (பெரி)
பிடரம்-கலவோடு, மத்து. (சப்)
* பிடா - பிடாமரம். (இரா)
* பிடியல் - சிறுதுகில். (பிங்)
பிண்டம் - திரளை, பிதிர்களுக்குக் கொடுக்கும் அன்னத்திரளை, கவளம், சரீரம், சோறு.
பிண்டி - அசோகு, புநர்பூசம், நென்மா.
* பிண்டித்தல் - திரளல். (சிந்)
பிண்டிபாலம் - கையாலெறியும் ஒருவகைத்தண்டு.
* பிண்டியான்-அருகன். (திரு)
* பிண்ணக்கு - பாம்பு. பின் + நாக்கு. (கல்வளை)
பிணக்கு-மாறுபாடு, நெருக்கம்.
பிணங்குதல்-தெற்றல், (பெரிய) வெறுத்தல், நெருங்கல்.
பிணர் - சமமில்லாவடிவம், கோங்கு.
பிணி - கட்டு, நோய். (புற)
பிணிமுகம்-முருகற்குரிய யானை, (புற) பறவை, மயில், அன்னம். (பிங்)
பிணை - மான், விருப்பம்.
* பிணைச்சு - புணர்ச்சி. (பிங்)
பிணையல் - பின்னியமாலை. (பிங்)
* பிணைவு - புணர்ச்சி. (கந்தபு)
பித்தம் - மயக்கம்.
* பித்தி - சிறுசெண்பகம்.
பித்திகை-சிறுசெண்பகம், சுவர்.
* பிதற்றுதல்-ஒன்றினைப்பற்றிக் கொண்டுவிடாதுபேசுதல்.
பிதா - பிரமன்.
பிதாமகன் - பாட்டன், பிரமன்.
பிதிர் - பொடி, திவலை. (பிங்)
* பிதிர்போசநம் - சிராத்தம்.
பிதிர்வனம் - சுடுகாடு. (சேது)
பிந்துதல் - பிற்படல். (இரா)
பிநாகம் - சிவன்வில்லு.
பிப்பலம் - நீர், அரசு. (சப்த)
பிர - ஆரம்பம், போதல், மிகுதி, கீர்த்தி, உற்பத்திமுதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழி யிடைச்சொல். (சப்)
* பிரகடநம் - வெளிப்படுத்தல்.
பிரகடம் - வெளிப்படை.
பிரகரணம் - ஆயுதம், நூற்பொருட்பிரிவு.
பிரகாரம் - வகை, ஒப்பு.
பிரகிருதி - பஞ்சபூதம், மூலகாரணம், பிரதாநம், (யாதவநி) இயற்கை, வலி, மறைவு.
* பிரகேலிகை-கருதியபொருளை மறைந்து கிடக்க வைத்து வெளிப்படையிலே வேறொன்று தோன்றும்படி செய்யும் செய்யுள்.
பிரசண்டம் - கடுவேகம், கடுவெப்பம், தாங்கற்கரியது.
பிரசம் - தேன், தேனீ, வண்டு.
பிரசரம் - வெளியாதல், வேகம்

பிரசவம் - பிறத்தல்.
பிரசன்னம் - அழுக்கின்மை, மகிழ்வு.
பிரசாதம் - தேவனைவேத்தியம், அழுக்கின்மை, அநுக்கிரகம்.
பிரசாபதி - அரசன், பிரமன்.
பிரசாரணம் - விரித்தல்.
பிரசுரம் - மிகுதி. (சப்த)
பிரசுரன் - சுக்கிரன்.
பிரசை - சந்ததி, சனம். (சப்த)
பிரஞ்ஞை - சரச்சுவதி, அறிவு.
* பிரட்டர் - பதிதர், வழுவினவர். (இரா)
பிரணயம் - வணக்கம், அன்பு.
பிரணிதி - ஒற்றன், யாசித்தல்.
பிரத்தியக்கு - மேற்கு.
* பிரத்தியயம் - அறிவு, விகுதி.
பிரத்தியாக்கியாநம்-நிராகரணம்
* பிரத்தியாலீடம் - வலக்கான் முந்துற்றிடக்கான் மண்டலித்துநிற்றல். (பிங்)
பிரதமம் - பிரதாநம், முதலது.
பிரதாபம் - கீர்த்தி, ஒளி, வெம்மை.
பிரதி - அற்பம் எதிர் இயற்கை நிச்சயம் நிறைவு முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழியிடைச்சொல்.
பிரதிகூலம்-கைகூடாமை, மாறுபாடு. (சப்த)
* பிரதிச்சந்தம் - கருத்துக்கேற்றது, ஒத்தவடிவம். (சப்த)
* பிரதிஞ்ஞை - மேற்கோள்,
பிரதிட்டை - கிரியைமுடித்தல், தாபித்தல். (சப்த)
பிரதிநிதி-ஒத்தவடிவம், சமமாக வைக்கப்பட்டது. (சப்த)
பிரதிபந்தம் - தடை. (சப்த)
* பிரதிமண்டலம் - ஒத்தமண்டலம்.
பிரதிமானம் - யானைக்கொம்பினடு.
பிரதிமை - ஒத்தவடிவம்.
பிரதியோகி - மறுதலை. (சப்த)
பிரதிரூபம் - சமவடிவம். (சப்த)
பிரதிலோமன் - இழிந்த ஆணும் உயர்ந்த பெண்ணுங் கூடிப் பெற்றபிள்ளை.
பிரதிவாதி - மாற்றுரை கூறுவோன்.
பிரதீகம் - அவயவம். (சப்த)
* பிரதோடம் - மாலைக்காலம்.
பிரப்பு-கொள்கலத்திலேகுறுணி ஒவ்வொன்றாக வைத்த பல்லுணு, (சூடா) பேருண்டி.
பிரபஞ்சநன் - காற்று.
பிரபஞ்சம் - உலகம், வித்தாரம்.
பிரபந்தம் - பாமாலை.
பிரபலம் - முக்கியம், மிகுவலி.
பிரபலியம் - முக்கியமானது.
பிரபாவம் - ஒளி, வன்மை.
பிரபு - அதிபதி, உடையவன்.
* பிரபுத்துவம் - மகத்துவம்.
* பிரபை - ஒளி.
பிரபோதம் - நற்புத்தி, துயிலின்மை.
* பிரம்பு - தேர்முட்டி. (பிங்)
பிரமகத்தி - பிராமணக்கொலை.
* பிரமசரி - பிரமசாரி. (சைவ)
பிரமஞாநம் - கடவுளை அறியும் அறிவு.
* பிரமணம் - சுழற்சி.
* பிரமதகணம் - சிவனுக்குத் தொண்டுசெய்யுங் கூட்டம்.

* பிரமம் - கடவுள், வேதம், யாகம், மந்திரம், முத்தி, (சப்த) கலக்கம். (பிங்)
பிரமயாகம் - வேதமோதுதல்.
பிரமரந்திரம் - பிரமத்தையடைதற்குக் காரணமான உச்சித் துவாரம். (சப்)
பிரமரம் - வண்டு. (தணி)
பிரமரி-ஒருவகைக்கூத்து,சுழற்சி.
பிரமாணம் - அளவைக்கருவி, காரணம், மெய்யுணர்வு.
பிரமாதம் - அவதானமின்மை.
பிரமாதா - அளப்பவன்.
பிரமிதி - பிரமாணத்தாற் பெற்ற அறிவு. (சப்த)
* பிரமிருதம் - உழுதொழில்.
பிரமுகம் - மேன்மை, பிரதானம்.
பிரமேயம் - அளக்கப்படுவது.
பிரமை-மெய்யுணர்வு, மயக்கம்.
பிரயத்தினம் - மிகுமுயற்சி, பிரயாசம்,
பிரயாகை - கங்கை யமுனை சரசுவதி என்னும் மூன்றுங்கூடிய சங்கமம்.
பிரயோகம்-அநுட்டித்தல், வழங்கும்முறை.
பிரவாகம் - நீர்ப்பெருக்கு.
பிரவாளம் - பவளம், தளிர்.
பிரவிருத்தி - தொழிற்படுதல், முயற்சி.
* பிரவுடை-ஐம்பத்தைந்து வயசுடைய பெண். (கந்தபு)
பிரவேசம் - உட்புகுதல்.
பிரளயம் - உகாந்தம், அழிவு, வெள்ளம்.
* பிராகபாவம் - முன்னின்மை. பிராக்-முன்.
பிராகாரம் - மதில்.
* பிராகிருதம் - இழிசனர் மொழி.
பிராசநம் - உண்பித்தல்.
* பிராசி - கிழக்கு.
பிராசீநம் - பழையது.
* பிராட்டி - தலைவி.
பிராணாயாமம் - பிராணவாயுவைத்தடுத்தல்.
பிராத்தி - அடைதல்.
* பிராதா - சகோதரன். (சேது)
* பிராந்தன் - மயக்கமுடையோன்.
பிராந்தி - மயக்கம். (சேது)
பிராமணி - பிராமணப்பெண்.
பிராமி - சரசுவதி.
பிராமணவசிட்டநியாயம் - பிராமணர்வந்தார் என்ற போதே வசிட்டரும் அடங்குவாராயினும் விசிட்டம் பற்றி வசிட்டரைக் கிளந்து கூறல்போல, ஓரினப்பொருள்களோடு ஒன்றனைக் கிளந்துங் கூறும் நெறி.
பிராயச்சித்தம் - சுத்திக்கிரியை.
பிரார்த்தனை - இரந்து கேட்டல்.
பிராரத்தம் - முற்செனனவினை.
பிராழு - நிறைபுனல்.
பிரான் - கடவுள், தலைவன்.
பிரியம் - விருப்பம்.
பிருகதி - கத்தரி. (திவா)
பிருங்கம் - வண்டு.
பிருட்டம் - சகனம். (பிங்)
பிரேரணம் - ஏவுதல்.
பிரேரித்தல் - ஏவுதல்.
பில்குதல் - சிறுதிவலையாய்விடுதல், (சிந்) கொப்புளித்தல்.
பிலஞ்சுலோபம் - எறும்பு.

பிலம் - கீழறை, குகை.
பிலவங்கம் - குரங்கு, மான்.
* பிலாவநம்-ஒழுகுதல். (இலிங்)
பிலிற்றல் - கொப்புளித்தல்.
பிழம்பு - வடிவம், திரட்சி.
பிழார் - இறைகூடை.
பிழி - கள்ளு.
பிழியர் - கள்ளுவிற்பவர்.
* பிழியல் - தேன். (சிந்)
பிழைத்தல் - உய்தல், தவறல்.
* பிழைப்பு - தவறு. (இரா)
* பிள்ளல் - பிளத்தல். (இரா)
பிள்ளை - காகம், (கந்த) கரிக்குருவி, வைரவன்.
* பிள்ளைமதி - இளஞ்சந்திரன்.
* பிள்ளைமை-அறியாமை, (இரா) பிள்ளைத்தன்மை.
பிளவு - துண்டம், பிளப்பு.
* பிளிற்றல் - கொப்புளித்தல்.
பிளிறல்-ஆரவாரித்தல், கிண்டல்.
பிற்கொழுங்கால்-உத்தரட்டாதி.
பிற்றை - பின்வரும் நாள்.
பிறக்கம் - மலை, (இரா) மரக்கொம்பு, அச்சம். (திவா)
பிறக்கிடல் - பின்னிடல்.
* பிறக்கிடுகை - பின்னிடுகை.
பிறக்கு - வேறு, (சில) பின், வழு.
* பிறக்கை - பிறத்தல். (இரா)
பிறங்கடை - மகன், வழித்தோன்றல். (இரா)
பிறங்கல் - மிகுதி, உயர்வு, பெருக்கம், (பிங்) மலை, ஒளிர்தல்.
பிறந்தை - பிறப்பு. (சேது)
பிறப்பிலி - சிவன். (பிங்)
* பிறவு - பிறப்பு. (திருவா)
பிறழ்தல் - ஒளிவிடல், நடுக்கம், வேறுபடல், பெயர்தல். (சூ)

* பிறை - ஓராபரணம். (கல்லா)
பிறைசூடி - சிவன்.
* பிறையிரும்பு - அரிவாள். (சிந்)
* பிறைவடம் - சந்திரகாரம் என்னும் ஆபரணம்.
பின்றல் - பிறகிடல. (பிங்)
பின்றை - பின்னைநாள்.
பின்றோன்றல் - தம்பி.
பின்னகம் - மயிர்முடி, பின்னிய மயிர். (அக)
பின்னம் - பொடி, வேறு, மாறுபாடு, பிளவு.
பின்னல் - சடை. (சேது)
பின்னவர் - வேளாளர்.
பின்னனை - கைத்தாய். (பிங்)
* பின்னி - தங்கை. (கோயி)
பின்னிடல் - தோல்வி. (பிங்)
* பின்னிலை - குற்றேவல்.
பின்னிளவல் - தம்பி. (திவா)
பின்னை - இலக்குமி, தங்கை, பின்னாள், பின்.
பின்னைகேள்வன் - விட்டுணு.
பின்னோர் - வேளாளர்.

## பீ

பீட்டை - இளங்கதிர்.
பீடம் - ஆசநம்.
பீடனம் - துயருறுவித்தல், அச்சம். (சப்த)
பீடிகை - ஆசநம், பூந்தட்டு, கடைவீதி, அணிகலச்செப்பு.
பீடு - பெருமை, வலி.
பீடை - துயர்.
பீதகம் - பொன், வெட்டிவேர், மஞ்சள்.
பீதசாலம் - வேங்கைமரம்.
பீதம் - பொன், பொன்னிறம்.
பீதாம்பரம் - பொற்புடைவை.

பீதி - வேதனைசெய்யும் நோய், அச்சம்.
பீதை - பொன்வண்ணக்குறிஞ்சி.
பீநம் - பருமை.
பீர் - அச்சம், முலைப்பால், பசலை, பீர்க்கு.
பீரம் - பீர்க்கு, வாகை.
பீரை - பீர்க்கு. (புற)
பீரு - அச்சமுள்ளவன், புருவம்.
பீலி - ஆலவட்டம், மயிற்றோகை, பெருஞ்சவளம், சிறுசின்னம், சிற்றாலவட்டம்.
பீலித்தண்டு - தலையிலே பீலிகட்டப்பட்டு எறிவதோர் படை.
பீலு - அணு, அச்சமுள்ளோன்.
* பீழித்தல் - வருத்தல். (வள்)
பீழை - துன்பம். (சிங்)
பீள் - கருப்பம், இளங்கதிர். (சூ)

## பு

புக்கசர் - சண்டாளர், கீழோர்.
புக்கில் - புகலிடம், (புறநா) வீடு.
புக்கு - பராய்மரம்.
புகட்டல் - உட்புகுத்தல். (பிரபு)
* புகடல் - உட்புகுதல். (இரா)
புகர் - யானைமத்தகப்புள்ளி, (புற) நிறம், (பெரு) அழகு, (சிலப்) கபிலநிறம், சுக்கிரன், குற்றம்.
புகர்முகம் - யானை. (பிங்)
புகல் - அடைக்கலம், (கந்) விருப்பம், (மது) சரீரம், சொல், வெற்றி, தானியம்வைக்குங் கூடு.
* புகல்வு - மனச்செருக்கு. (குறி)
புகலல் - மகிழ்தல், (சிங்) விரும்புதல், (புற) சொல்லல்.
புகலி - சீர்காழி. (சீகா)
புகலிடம் - ஊர், (பிங்) புகுமிடம்.
* புகவு - சோறு, உணவு, (புற) இது "புகா" என்புழியுள்ள குறியதன்கீழாக் குறுகி உகரமேற்ற சொல்.
புகழ்பொருள் - உவமேயம்.
* புகற்சி - அன்பு, (அகம்) விரும்புவித்தல். (சிந்தா)
* புகற்றுதல் - விரும்புவித்தல்.
புகறல் - சொல்லல், விரும்புதல்.
* புகா - சோறு, உணவு. (வெண்)
* புகாக்காலை - போசனவேளை.
புகார் - யாற்றுமுகம், (புற) காவிரிப் பூம்பட்டினம்.
புகுடி - புருவம்.
புகுதி - புகுந்தகாரியம், (கந்) வாயில். (பிங்)
* புகுமுகம்புரிதல் - ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழி ஒருவரை ஒருவர் விரும்புந் தன்மை. (தணி)
புகை - யோசனைதூரம்.
புகைதல் - புழுங்கல். (இரா)
புங்கம் - அம்பு, அம்பினடி, உயர்ச்சி, சீலை. (பிங்)
புங்கவம் - எருது, சிரேட்டம்.
புங்கவர் - தேவர், உயர்ந்தவர்.
புச்சம் - வால், வால்வெள்ளி.
புஞ்சம் - திரட்சி. (இரா)
* புஞ்சவநம் - ஆண்மகவு பிறக்கும் பொருட்டு ஓமஞ் செய்து ஆலந்தளிர், உழுந்து முதலியவைகளைப் பாகஞ் செய்து கருப்பவதியின் நாசியிற் பிழிந்து விடுங் கிரியை.
புட்கரம் - யானைக்கைந்நுனி, தாமரை, நீர், ஆகாயம், தீர்த்தம், நிறைவு, பருந்து, வாள்.

புட்கரிணி - தாமரைப்பொய்கை.
புட்கலைமணாளன் - ஐயனார்.
புட்டம் - புடைவை, காதம்.(பி)
புட்டி - கொழுப்பு, வளர்ச்சி.
புட்டில் - குதிரைக்கு உணவு இடுங் கருவி, விரற்சரடு, செச்சை, (சிந்) தக்கோலக் காய், (திருமு) கூடு. (இரா)
* புட்பகம் - குபேரன்விமாநம்.
* புட்பரசம் - மகரந்தம்.(சப்த)
புடம் - ஒன்றற் கொன்றுள்ள சம்பந்தம், மறைப்பு, மூடி.
புடவி - பூமி. (சேது)
* புடி - ஒன்றற்கொன்று சம் பந்தமுள்ளது.
புடை - ஒலி, (சிந்) பகை,பக்கம், (தொல்)யுத்தம்,இடம்,வீக்கம்.
புடைத்தல் - அலைத்தல், (வெண்) அடித்தல், குத்தல், வீங்குதல்.
புடைபெயர்தல் - கீழ்மேலாதல், (வெண்) பக்கத்திற் போதல், அசைதல்.
* புடையல் - மாலை. (புறநா)
புண்டரம் - கழுகு, (இரா) நெற் றிக்குறி, குருக்கத்தி.
புண்டரீகம் - வெண்டாமரை, (கந்த) புலி, வண்டு, தாம ரை, கமண்டலம், திக்கியானை.
* புண்டரீகை-இலக்குமி. (இரா)
* புண்ணியசாந்தம் - சாணி.
* புண்ணியம்-தருமம்,நற்செயல்
* புண்ணியாகம் - சுத்தியைப் பிறப்பிக்குந்திநம். (சப்த)
புண்ணீர் - இரத்தம். (இரா)
புணர்ச்சி - ஒருதேயத்தராதல், (வள்)அளவளாவுகை,இயைவு, கலவி.
புணர்ப்பு - உடம்பு, உபாயம், புணர்த்தல்.
புணரி - கடல், கடற்றிரை.(பிங்)
புணை - மரக்கலம்.
புத்தகம் - சித்திரப்படம். (பிங்)
* புத்தலர் - புதியபூ. (கந்த)
புத்தி - அறிவு,போசநம்,போகம்.
* புத்துரை - புதியவுரை.
புத்தேள் - தெய்வம், புதுமை.
புதல் - புல்லு, (திவா) பற்றை.
புதவு - அறுகம்புல்லு, (மலை) வாயில், (பிங்) கதவு. (புற)
புதன் - பண்டிதன், புலவன்.
* புதா - கதவு. "புதாத்திறக்குந் தாழுடைய" (சிந்) நாரை.
புதிர் - புதியது.
புதை - புதுமை, (திவா) சரீரம், அம்புக்கட்டு, மறைவு.
புதைத்தல் - போர்த்தல், (சிலை) மறைத்தல்.
புந்தி - புதன், அறிவு, சிந்தை.
புந்தியர் - பண்டிதர். (பிங்)
புநர் - இரண்டாம் முறை, பின்.
புநர்ப்பாகம் - இரண்டாமுறை செய்த பாகம்.
புநருத்தம் - கூறியது கூறல்.
பும் - ஆண்.
புமான் - ஆடவன். (இரா)
புய்த்தல் - பிடுங்குதல். (புறநா)
* புயக்குதல்-பிடுங்கல். (வண்டு)
புயங்கம் - பாம்பு, ஒருகூத்து.
புயல் - மேகம், பெருங்காற்று.
* புரகரன் - சிவன். (சேது)
புரசை - யானைக்கழுத்திடுகயிறு.
புரட்டை - பூரட்டாதி.
புரணி - ஊன். (பிங்)
புரத்தல் - காத்தல், கொடுத்தல்.

புரதகநன் - சிவன்.
புரந்தரன் - இந்திரன்.
புரம் - இராசதானி, ஊர், வீடு, மேல் வீடு, முன். (சப்த)
புரவலன் - அரசன், கொடையாளன்.
புரவி - குதிரை.
* புரவிசயன் - சிவன். (பார)
புரவிவட்டம் - குதிரைசெலுத்தும் வீதி. (சிந்)
புரவு - காத்தல், கொடை.
* புரா - முற்காலம், முன், சென்றது.
புராணம் - பழமை, பழங்கதை.
புராதநம் - முன்னடந்தது.
புராரி - சிவன்.
* புராவிருத்தம் - இதிகாசம்.
புரி-இராசதாணி, முறுக்கு, கயிறு, கட்டு, விருப்பம், செயல், ஊர்.
புரிசை - மதில்.
* புரித்தல் - விரும்புவித்தல்.
புரிதல் - செய்தல், விரும்பல்.
புரீடம் - மலம். (இரா)
புருகூதன் - இந்திரன்.
புருடவாகநன் - குபேரன்.
* புருடாகிருதி - புருடவடிவம்.
புருவை - இளமை, ஆடு. (பிங்)
புரூணகத்தி - கருவழித்தல்.
புரை - பன்னசாலை, (இரா) உவமை, குற்றம், பெருமை, வீடு, உட்டுளை.
புரைகிளைத்தல் - தேடல். (விநா)
* புரைத்தல் - துளைத்தல்.
புரையுள் - பன்னசாலை, (இரா) வீடு.
புரையோர் - கள்வர். (பிங்)
* புரோக்கணம் - தெளித்தல்.
புரோகதி - நாய்.
* புரோகம் - முன்செல்லல்.
புரோகிதன் - குரு, இந்திரன்.
புரோசர் - குறுநிலமன்னர்.
* புரோதம் - குதிரை மூக்கு.
* புரோவாதம் - முன்னர்ச்சொன்னது.
புல் - புலி, பனை, அநுடநாள், புறவைரமுடையமரம், புணர்ச்சி, (பிங்)
புல்குதல் - புல்லுதல். (இரா)
புல்லகண்டம் - கண்டசருக்கரை.
புல்லகம் - நுதலணி. (பிங்)
புல்லம் - அபிநயம், (கல்லா) எருது, (விநா) மலர்ந்தபூ.
புல்லர் - கீழோர், வேடர்.
* புல்லார் - பகைவர். (வெண்)
புல்லி - புறவிதழ். (சேது)
* புல்லிகை - குதிரையின் காதிலே தூங்கும் ஓராபரணம்.
புல்லிது - இழிவு. (கந்த)
புல்லியர் - கீழோர்.
புல்லுதல் - கூடுதல், புணர்தல், சார்தல்.
* புல்லூரி - குருவிச்சை.
புல்லெனல் - பொலிவழிதல்.
புல்வாய் - கருமான், கலைமான்.
புலத்தல் - ஆற்றுதல், முனிதல், (வெண்) பிணங்குதல். (இரா)
புலப்படுதல் - விளங்குதல்.
புலப்பாடு - விளங்குதல்.
புலம் - அறிவு, திசை, (புற) இடம், வயல், விடயம்.
புலம்பு - குற்றம், வெறுப்பு, (சிந்) நடுக்கம், (திவா) வருத்தம், (மலை) தனிமை, அச்சம், ஒலி. (பிங்)

புலம்புதல்-ஒலித்தல்,பிதற்றுதல்.
* புலமகள் - சரசுவதி. (சிந்)
* புலமை - அறிவு. (இரா)
புலர்தல் - காய்தல், விடிதல்.
புலவர் - அறிஞர், கவிஞர், தேவர், கம்மாளர். (பிங்)
* புலவல் - பிணங்குதல். (கலி)
புலவன் - இந்திரன், (கந்த) அறிஞன், புதன், முருகக்கடவுள்.
புலவி - ஊடலின்முதிர்வு, வெறுப்பு.
புலவு - புலானுற்றம். (புற)
புலன் - அறிவு, விடயம்.
புலானீர் - இரத்தம்.
புலி - நால்வகைச்சாந்துளொன்று.
* புலியடிக்குலை - வாழைக்குலை.
புலிங்கம் - ஊர்க்குருவி, தீப்பொறி.
* புலித்தொடர் - புலிச்சங்கிலி.
புலியூர் - தில்லைநகர்.
புலுதம் - அளபெடை.
புலை - புலால், இழிவு.
புலைஞர் - சண்டாளர், நீசர்.
* புலோமகன்னி - இந்திராணி.
புலோமசை - இந்திராணி.
* புவித்தேவன் - பிராமணன்.
புழல் - துளை, (புற)மதகு, மீன்
புழுக்கல் - புழுக்கியது, சோறு.
* புழுக்கு - இறைச்சி. (புற)
புழுகு - அம்புக்குப்பி. (அக)
புழை - துவாரம், (தி) சிறியவாயில்.
* புழைக்கடை - நுழைவாயில்.
* புழைத்தல் - துளைத்தல்.
புள் - வளையல், (சிந்) வண்டு, பறவை, அவிட்டம். (பிங்)
* புள்வாய்கீன்றோன்-விட்டுணு.
புள்ளம் - அரிவாள், வாள்.(பிங்)
புள்ளி - நண்டு, பொறி, பல்லி, மதிப்பு.
* புள்ளிமலை - இமயமலை.(இரா)
புள்ளுவம் - வஞ்சகம்.
புள்ளுவர் - கீழோர், வஞ்சகர், வேடர்.
புளகம் - குமிழ்ப்பு, கண்ணாடி, மயிர்சிலிர்த்தல்.
* புளகு - புளகம். (இரா)
* புளிஞர் - வேடர். (இரா)
* புளித்தல் - தன்மைதிரிதல், (சிந்) வெறுத்தல். (இரா)
புளிதம் - ஊன்.
புளிந்தர் - சண்டாளர், வேடர்.
புளினம் - மணற்குன்று, புட்கூட்டம். (சேது)
* புற்கம் - புன்மை.(நான்மணி)
புற்கலம் - உடம்பு.
புற்கலன் - ஆன்மா.
புற்று - கபிலநிறம்.
புற்கை - சோறு. (பிங்)
புற்பதி - பனை. (சூடா)
புற்புதம் - நீர்க்குமிழி.
* புறக்கிடல் - தோல்வி. (பார)
புறங்கடை - வெளிவாயில்.
புறங்காடு - சுடுகாடு.
புறணி - குறிஞ்சிநிலம், முல்லைநிலம், புறம், தோல், மரப்பட்டை. (பிங்)
புறத்தவன் - மாசாத்தன்.
புறந்தரல்-பாதுகாத்தல்,விடுதல்.
* புறம் - வரியில்லாநிலம், (சிந்) முதுகு, பின்,இடம், வெளி.
புறம்பணை - குறிஞ்சிநிலம், முல்லைநிலம்.

* புறவணி - முல்லைநிலம். (பிங்)
புறவம் - முல்லைநிலம், காடு.
புறவு - காடு. (வெண்)
புறவுரை - பாயிரம்.
புறனடை - புறனாக அடுத்துக் கூறுவது.
புன்கம் - சோறு. (புற)
புன்கண் - வறுமை, துன்பம், நோய்.
புன்காலி - பாதிரிமரம், காயா.
புன்செய் - கொல்லை. (வெண்)
புன்சொல் - வழூச்சொல், இழிந்தசொல்.
புன்மை - குற்றம்,சிறுமை.(பிங்)
புன்னாகம் - புன்னைமரம், வெள்ளாம்பல்.
புனம் - கொல்லை, அலங்காரம்.
புனல் - நீர்.
புனவர் - குறிஞ்சிநிலமாக்கள்.
புனனாடன் - சோழன்.
புனிதன் - இந்திரன், (ஆசிரிய) சுத்தன்.
புனிறு - ஈன்றணிமை.
புனை - பொலிவு, அழகு, (பிங்) தளை, சீலை. (கந்த)
புனைதல் - அலங்கரித்தல், செய்தல், அழகுசெய்தல்.
புனைவர் - கம்மியர்.

## பூ

பூ - பூமி, புட்பம்,அழகு,கூர்மை, பொலிவு, பிறப்பு. (பிங்)
பூக்கம் - ஊர், கமுகு. (சூடா)
* பூகதம் - கமுகு. (விநா)
பூகதன் - புகழ்வோன், (பி) பூமியை அடைந்தவன். (பாரத)
பூகம் - கமுகு, திரட்சி, கமுகு.
பூகம்பம் - பூமிநடுங்குதல்.
பூச்சியம் - நன்குமதிக்கத்தக்கது.
பூசகன் - பூசைசெய்பவன்.
பூசல் - பூசுதல், யுத்தம், பேரொலி.
* பூசறுத்தல் - பூசுந்தொழிலை முடித்தல், (சிந்த) பூசு - கழுவல்.
பூசித்தல் - பூசைசெய்தல்.
* பூசுதல் - கழுவுதல்,"பூசுதலுமின்றி" (சிந்) அப்புதல்.
* பூசுதன் - செவ்வாயென்னுங் கிரகம்.
* பூசுதை - சீதை. பூ-பூமி.சுதை-மகள்.
பூசுரன் - அந்தணன். (சேது)
பூசை - வழிபாடு, பூனை, வெண்கிடை. (பிங்)
பூட்கை - வலி, (திருமு) போர்வை. (மணி)
பூட்சி - ஆபரணம், (கல்லா) உடம்பு.
பூட்டு - விற்நாண், திறவுகோல்.
பூட்டை - நீரிறைக்குங்காராம்பி.
பூண் - கவசம், (சிந்) ஆபரணம்.
பூண்டி - ஊர், கடலுட்டிடர்.
பூணி - பூணிப்பறவை, (சிந்) எருது.
* பூணித்தல் - அகப்படுத்தல், (கந்த) பூணல்.
* பூணிப்பு - கொள்கை.
பூத்தல் - பொலிவுபெறுதல், (திரு) தோன்றுதல், மலர்தல்.
பூதசாரசரீரம் - தேவசரீரம்.
* பூதநாசரீரம் - பூதமயமானசரீரம். (சிந்)
பூதநாதன் - சிவன்.

பூதபரிணாமசரீரம் - மாநுடசரீரம், பரிணாமம் - உருவேறுபடல்.
பூதம் - சென்றகாலம், (பார) ஆலமரம், சுத்தம்,பரணிநாள், உயிர், பஞ்சபூதம், பூதகணம், சங்கு, சத்தியம். (சப்த)
* பூதயாகம் - பலிகொடுத்தல்.
பூதரம் - மேருமலை, (திவா) மலை.
பூதவம் - ஆலமரம். (பிங்)
பூதனை - கண்ணபிரானாற் கொல்லப்பட்ட ஒரு தேவதை.
பூதவம் - மருதமரம்.
* பூதாதி - தமோகுணவகங்காரம்.
பூதாரம் - பன்றி. (சப்த)
பூதி - சிங்காரம், (விசுவ) திருநீறு, செல்வம், நரகம், பிறப்பு, புலால், புழுதி.
பூதிகம் - உடம்பு, பூமி.
பூதியம் - உடம்பு.
* பூதுரந்தரர் - அரசர். (பார)
பூ - பூமி. துரம் - பாரம்.
* பூதேசன் - சிவன். (பிங்)
பூதேவர் - பார்ப்பார்.
* பூந்தராய் - சீர்காழி.
பூந்தாது - பூவின்சுண்ணம்.
பூபதி - அரசன். (பார)
பூபன் - அரசன்.
* பூபாலன் - அரசன். (பார)
* பூம்பிடகை - பூங்கூடை.
* பூமி - இடம், நாக்கு. (சப்த)
பூமின் - இலக்குமி.
பூர்ணம் - நிறைவு.
பூர்வம் - பூருவம்.
பூர்விகம் - முன்னையது.
பூரணி - இலவமரம். (சப்த)
* பூரணை - நிறைவு. (திருநா)
பூரணைகேள்வன் - மாசாத்தன்.
பூரம் - தேள், நிறைவு.
பூரவாகநி - சரசுவதி.
பூரி - பொன், வின்னாண்.
பூரித்தல் - மிகுத்தல், (பி) நிறைத்தல். (விநா)
* பூரிமம் - தெருப்பக்கம்,(மது) திண்ணை.
பூரிமாயன் - நரி.
பூரியம் - அரசர்வீதி, ஊர்.
பூரியர் - கீழ்மக்கள். (தணி)
பூருகம் - மரம்.
பூருண்டி - மல்லிகை. (பிங்)
* பூருவபக்கம்-சித்தாந்த விரோதமாக விடயாதிகளை நாட்டிப் பிறராற் கூறப்பட்ட வாக்கியம், முற்பக்கம். (சப்த)
பூருவம் - முதல், கிழக்கு, பழமை, முன்.
* பூரேணு - பூதூளி. (சப்த)
* பூல் - புல்லாந்தி. (சைவ)
* பூவல் - செம்மண், (சில) சிவப்பு.
* பூவாவஞ்சி - கருவூர். (புற)
பூவாளி - புட்பபாணம், மன்மதன்.
பூவை - காயா, நாகணவாய்.
* பூவைவண்ணன் - விட்டுணு.
பூழ் - காடை, துவாரம்.
பூழ்க்கை - யானை, யாளி.
பூழ் - துளை.
* பூழ்தி - புழுதி. (விநா)
பூழி - காடை, (இரா) புழுதி.
பூழியன் - பாண்டியன். (திருவி)
பூழில் - அகில்.
* பூழிவேந்தன் - பாண்டியன்.

பூழை - துவாரம். (இரா)
பூளை - இலவம்பஞ்சு, சிறுபூளை.

## பெ

* பெகுலம் - அநேகம்.
பெட்டல் - விரும்புதல்.
பெட்டார் - நண்பர்.
பெட்டு - பொய். (பிங்)
பெட்பு - விருப்பம், பேணுதல்.
பெடை - பறவைப்பெண்.
பெண்டகன் - அலி.
பெண்டு - பெண்.
பெண்ணை - பனை, அறுடம்.
* பெண்மயம் - பெண்டன்மை.
* பெண்மை - அமைதித்தன்மை.
பெத்ததசை - உயிர் மலத்திற் பிணிப்புண்டிருக்கும் நிலை.
பெத்தம் - கட்டுண்டது.
* பெதும்பை - பெண். (பிங்)
பெம்மான் - பெருமான்.
* பெய்தல் - செறித்தல், இடுதல்.
* பெய்துரை - பாயிரம். (பிங்)
பெயர் - புகழ், "பெரும்பெயர்ப் பிரமன்" (சிந்) பொருள்.
பெயர்த்தல் - திருப்புதல், வேறுபடுத்தல்.
* பெயர்த்தரல் - மீட்டல். (கலி)
* பெயர்த்தும் - பின்னும்.
பெயர்தல் - கூத்தாடல், (சூடா) மீளுதல், நிலைநீங்கல், போதல்.
பெயல் - மழை, மழைத்துளி.
பெருக்கம் - செல்வம், பெருகுதல், மிகுதி.
* பெருக்காளர் - வேளாளர்.
பெருக்கு - வெள்ளம், மிகுதி.
* பெருகல் - மிகுதி. (பிங்)
பெருகு - தயிர். (சூடா)
* பெருங்கலம் - பேரியாழ்.
பெருங்காப்பியம் - வாழ்த்து வணக்கம் தலைமைப் பொருளுரைத்தல் என்னும் மூன்றனுள் ஒன்றினை முதலிற்பெற்று, ஒரு நாயகன் மேற்றாய், அறம்முதலிய பொருள்களைப் பயந்து நாடு, நகரம் முதலிய பலவற்றையும் வருணித்துப் பிறவுறுப்பும் பெற்றுமுடியும் பிரபந்தம். (பார)
பெருஞ்சொல் - பலராலும் அறியப்பட்டசொல்.
* பெருந்தகவு - பெருமை.
* பெருந்தகை - எப்பொருட்குந் தலைவன். (ஆசிரிய)
பெருந்தன்மை - மானம். (திவா)
* பெருந்தேவி - அரசன்மனைவி.
* பெருநம்பி - மங்கலபாடகன்.
பெருநயப்பு - பெருவிருப்பு.
பெருநீர் - கடல். (பிங்)
* பெரும்பிறிது - மரணம். (புற)
* பெரும்பிறிதாதல் - மரணமாதல். (ஞான)
பெரும்புள் - கூகை.
பெரும்பூண் - பதக்கம்.
* பெரும்பெயர் - பெரும்பொருள். (மது)
* பெரும்பேது - இறந்துபாடு.
* பெரும்பொருள் - முத்தி.
பெருமக்கள் - பெரியோர்.
பெருமகன் - எப்பொருட்குந் தலைவன், அரசன். (இரா)
* பெருமஞ்சிகன் - நாவிதன்.
பெருமலை - மேருமலை. (பிங்)
பெருமாட்டி - தலைவி. (வாண)

பெருமான் - அரசன், தலைவன்.
பெருமிதம் - வீரம், (தொல்) உள்ளச்செருக்கு. (புற)
பெருமை - அருமை,(சிந்)மிகுதி.
* பெருவார்த்தை - பலராலும் அறியப்பட்ட சொல்.
பெலம் - வலி.
பெற்றம் - வாயு, (பார) பசு, எருது.
பெற்றி - தன்மை, பேறு. (பார)
* பெறலருங்குரைத்து - பெறற் கரியது.
குரை - ஒருசாரியை.
* பெறுதி - இலாபம். (மணி)
பெறுவகொள்வாள் - வேசை.

## பே

பே - அச்சம், (வெண்) நுரை.
பேகம் - தவளை, மேகம்.
பேடகம் - பிரப்பங்கூடை.
பேடணம் - அரைத்துப்பொடி செய்தல்.
பேடு - அலி, ஊர், காமனாடிய கூத்து.
பேணார் - பகைவர்.
பேணுதல் - பாதுகாத்தல், (புற) நன்குமதித்தல், (பிங்) வழி படல், விரும்புதல். (இரா)
பேதம் - வேறுக்கல்,வேற்றுமை.
பேதித்தல்-வேறுதல்,வேறுக்கல்
* பேது - மயக்கம், வருத்தம்.
பேதுறல் - மயங்கல், வருந்தல்.
பேதை - அறிவிலான்,வறியவன்.
பேதைமை - அறிவின்மை.
பேதையர் - தரித்திரர். (பிங்)
பேநம் - நுரை.
பேம் - அச்சம். (இரகு)
* பேய் - மயக்கம். (திருநூ)
பேய்த்தனம் - அறிவின்மை.
* பேயிரதம் - கானல். (பார)
பேர்தல் - பெயர்தல்.
* பேரபிமானம் - நன்குமதிப்பு.
* பேரருள் - கழிகண்ணோட்டம்.
* பேராண்மை - அருஞ்செயல்.
* பேராளன் - எப்பொருட்குந் தலைவன், (ஆசிரி)மிருகசீரிடம்.
பேரின்பம் - மோக்கம்.
* பேருதல் - நீங்குதல், (திருநூ) அருகிற்போதல்.
* பேரூர் - மருதநிலத்தூர்.
பேழ் - பெருமை. (திருமு)
பேழ்வாய் - பெருவாய்.
பேழை - பெட்டி.
* பேளிகை - எச்சில். (பிங்)
பேறு - பெற்றபொருள்,(புறநா) இலாபம், பெறுதல், செல்வம்.

## பை

பை - பாம்பின்படம், பச்சை, அழகு, (பிங்)
* பைக்கம் - பிச்சை.
பைங்கூழ் - பயிர்.
பைசந்தி - நால்வகை வாக்குக ளுள் ஒன்று; அஃது ஆன்மா வின்கண் நினைவுமாத்திரமாய் இருப்பது.
பைசாசம் - ஒருகாலை ஊன்றி ஒருகாலை முடக்கிநிற்கும் யுத்த நிலை, மூத்தவளையாவது களித் தவளையாவது நித்திரையுள்ள வளையாவது சென்று கூடும் விவாகம், இரும்பு, பிசாசசம் பந்தம்.
* பைசுந்நியம் - குறளை.

பைஞ்ஞீல் - மக்கட்பரப்பு.
பைத்தல் - படம்விரித்தல், பசுமையாதல்.
பைதல் - குழந்தை, (இரா) துன்பம். (புற)
பைதிரம் - நாடு.
* பைதிருகம் - பிதாவழியிற்பொருள்.
* பைது - பசுமை, (கலி) ஈரம்.
* பைப்பய - மெல்ல மெல்ல.
* பையாப்பு - துன்பம். (புற)
பையுள் - துன்பம், நோய்.
பையெனல் - மென்மையாதல்.
பைரவம் - அச்சம்.
* பைவரல் - துயருறல். "பைவராவரும்" (பார)

## பொ

பொக்கம் - பொலிவு, (பி) பொய். (உரி) குற்றம். (விநா)
பொக்கு - பொந்து. (பிங்)
பொகுட்டு - தாமரைக்கொட்டை, மலை, சேற்றிற்குமிழி.
* பொங்கடி - யானை. (பிங்)
பொங்கர் - பழம்பூ, (சில) மலை, மரக்கொம்பு, இளமரக்கா, இலவமரம்.
பொங்கல் - உயர்ச்சி, மிகுதி, கள்ளு, கோபித்தல், கிளர்தல்.
பொங்கழி - தூற்றுதநெற்பொலி.
பொங்குதல் - மிகுத்துக் காட்டல், (சிந்) கோபித்தல், (வெண்) கிளர்தல்.
* பொச்சம் - பொய். (தணி)
பொச்சாப்பு - இடையறவுபடுதல், (தொல்) குற்றம், (பி) மறவி.
பொச்சை - காடு, கரிகாடு, மலை.
* பொச்சையர் - அறிவிலார்.
பொடி - விபூதி, புழுதி.
பொடித்தல் - முளைத்தல், மயிர் சிலிர்த்தல். (இரா)
பொடிதல் - வெறுத்தல், (புற) தூளாதல்.
பொடிப்பு - மயிர்ச்சிலிர்ப்பு.
பொத்தல் - மூடுதல், துளைத்தல்.
பொத்து - துளை, (புற) தவறு, பொய்.
பொத்துதல்-புதைத்தல்,"இவனை மண்ணிடைக்கடிது பொத்துதல்," (இரா) மூடுதல்.
பொதி - பொதியமலை. (சிவ த) குலை, (மலை) கட்டு, கரிகாடு.
பொதியில் - சபை, பொதியமலை.
* பொதிர்த்தல் - புடைப்புக் கொள்ளுவித்தல்.
பொதிர்ப்பு - நடுக்கம், அச்சம்.
பொது - சபை. (புற)
* பொதுக்கல் - மறைத்தல்.
பொதுத்தல் - துளைத்தல்.
* பொதுநோக்கு - உள்ளே ஒன்று கொள்ளாதபார்வை.
* பொதும்பர் - இளமரச்சோலை. (பெரு) மரப்பொந்து.
* பொதும்பு - குறுங்காடு. (சிந்)
பொதுமகள் - வேசை.
* பொதுமொழி - உறுதியில்லாமொழி.
பொதுவர் - இடையர். (பார)
பொதுளல் - தழைத்தல், (திரு) நெருங்கல். (சூடா)
* பொந்து - வெளி. (பிங்)
பொம்மல் - பொலிவு, சோறு, பொருமல், மிகுதி. (பிங்)

பொம்மெனல் - விரைதல்.
* பொம்மை - பாவை, "பொம்மோய் வேள்வி புரிதற்கு."
* பொய் - மரப்பொந்து. (பி)
பொய்கை - மாநுடராக்கா நீர்நிலே, (சிந்) சிறுகுளம். (விநா)
* பொய்தல் - பொள்ளலாக்கல், "கைகளினூருப் பொய்து" (இரா) மகளிர்கூட்டம், மகளிர்விளேயாட்டு. (பிங்)
* பொருக்கெனல் - விரைதல்.
பொருட்டு - காரணம்.
பொருட்பெண்டு - வேசை.
பொருண்மை - பொருளின்தன்மை.
பொருத்தம் - தகுதி, (திருக்) இணக்கம்.
* பொருதமஞ்ஞை - எதிர்முகமஞ்ஞை. (கந்த)
பொருந்தம் - தாம்பிரபர்ணிநதி.
* பொருந்தர் - நெய்வார்.
பொருந்தலர் - பகைவர்.
பொருநன் - அரசன், கூத்தாடி, படைத்தலைவன், உவமிக்கப்படுவோன், வீரன், பொருபவன்.
* பொருநைத்துறைவன் - சேரன்.
பொருப்பு - பக்கமலை, (திருக்) மலே. (சேது)
பொருமுதல் - அழுதல், (சூடா) வீங்குதல்.
பொருவுதல் - ஒத்தல்.
பொருள் - உபமேயம். (கந்த) காரியம், தேமல், தருமம், தன்மை, பிள்ளே, (சிந்) பொன், பயன், வஸ்து, அறிவு,
பொல்லம் - துண்டம், தைத்தல்.
பொல்லர் - தையற்காரர்.
பொல்லாங்கு - குற்றம், (பிங்) மறவி, (சூடா) தீங்கு)
* பொல்லாது - குற்றம். (இரா)
* பொல்லார் - தீயவர்.
பொலம் - அணிகலம், (திவா) பொன், அழகு.
* பொலிசை - இலாபம். (சிந்)
பொலிவு - அழகு, நிறைவு.
பொழிதல் - கொடுத்தல், சொரிதல்.
பொழிப்பு - சிறப்புடையது.
பொழில் - சோலே, பூமி, பெருமை.
பொழுது - சூரியன், (சிந்) காலம்.
பொள்ளல் - உள்வயிரமில்லது, (சிந்) மரப்பொந்து, துளேத்தல், பொளிதல்.
* பொற்பண்டாரம் - பொற்கலனிருக்கை.
பொற்பு - பொலிவு, அழகு, அணி.
பொற்றை - மலே, சிறுமலே, சிறுபற்றை.
பொறி - அறிவு, ஒளி, நல்வினே, பட்டம், முத்திரை, யந்திரம், வரி, (சிந்) இலக்கணம், (புற) திரட்சி, (நெடு) எழுத்து, செல்வம், இலக்குமி, மரக்கலம், இந்திரியம், தீப்பொறி. (பிங்)
* பொறிசெறித்தல் - இலச்சினே வைத்தல்.
பொறித்தல் - தெறித்தல், (சிந்) அடையாளமாகவைத்தல் (பட்) எழுதுதல்.
பொறையாளன் - தருமன். (பிங்)
பொறியறை - திருவிலி. (திரிக)
பொறியிலார் - கீழ்மக்கள்.
பொறுத்தல் - சுமத்தல். (இரா)
பொறை - பிறர்தீமைக்கு மாறு

செய்யாது சகித்தல், பூமி, ஆறு கல், மலை, பாரம், பொறுமை.
பொறையன் - சேரன்.
பொறையாட்டி - பொறுமையுடையவள்.
பொறையாளன் - தருமன்.
பொறையுயிர்த்தல் - ஈனுதல்.
பொறை - பாரம். உயிர்த்தல் - விடுதல்.
பொன் - அழகு, இலக்குமி,வியாழன், சூரியன், பொலிவு, ஆபரணம், இரும்பு. (பிங்)
பொன்மை - பொன்னிறம்.
பொன்வாய்ப்புள் - சிச்சிலி.
பொன்றுதல் - அழிதல், குறைதல்.
பொன்னரிமாலை - கழுத்திலணியும் பொன்மாலை. (இரா)
பொன்னவன் - வியாழன்.
பொன்னி - காவேரி. (இரா)
பொன்னிலம் - தேவுலகம்.
பொன்னுலகு - தேவுலகம்.

## போ

போக்கியம் - அநுபவிக்கப்படும் பொருள், திரவியம், தானியம்.
போக்கு-குற்றம்,போதல்,நெறி.
போக்குதல் - உணர்த்தல், (சிங்) அழித்தல், அனுப்புதல்.
* போகடல் - போகவிடுதல்.
போகபூமி - பரதகண்டமல்லாத கண்டங்கள், (சப்த) விளைநிலம்.
போகம் - சுகம், அநுபவம்,பாம்பின்படம், திரவியம், உணவு, சரீரம். (சப்த)
போகல் - நீளம், செல்லல்.
போகி - இந்திரன், பாம்பு, அரசன்.
போகில் - கொப்பூழ், பூவரும்பு, பறவை. (சூடா)
* போகு - நெடுமை. (சில)
போகுதல் - போதல், நீளல்.
* போசயித்திரு-புசிப்பிப்பவன்.
* போடம் - தகர்த்தல். (சேது)
போடகன் - ஆதரிப்பவன்.
* போத்தரல்-போக்கல். (இரா)
* போத்தா - அநுபவிப்பவன்.
போத்திரி - பன்றி. (பிங்)
போத்து - மரக்கன்று, விலங்கின்படுக்கை.
* போத - திருப்தியாக. (பெரி)
போதகம் - யானை,யானைக்கன்று. மரக்கன்று, இளமை, உபதேசம்.
* போதகன் - உபதேசஞ் செய்து நெறிகளைக் கற்பிக்கும், ஆசாரியன், குரு.
* போதகரன் - அறிவிப்பவன், துயிலெடைபாடுவோன்.
* போதநம் - அறிவிப்பு, துயிலெழுப்பல். (சப்த)
போதம் - அறிவு, மரக்கலம், (சப்த) வஸ்திரம், இல்லிடம்.
* போதரல் - கொண்டுபோதல், "உலர்ந்த வாப்பியும் பூசலோடுழவர்கள்போதர்வார்" (தணிகை) போதல்.
போதன் - அறிஞன், பிரமன், புத்தன்.
போதா - பெருநாரை. (இரா)
போதி - அரசமரம், அறிஞன்.
* போதிவேந்தன் - புத்தன்.

போது - அலரும் பருவத்தரும்பு, (சிந்)சூரியன், (இரா) காலம், புட்பம்.
*போந்தின்கண்ணியன் - சேரன்.
போந்து - பனை. (பிங்)
போந்தை - இளம்பனை. (பிங்)
போர் - யுத்தம், சதயநாள்.
போர்த்தல் - மூடுதல்.
போர்மடந்தை - வீரலக்குமி.
* போர்வு - நெற்போர். (சிந்)
போர்வை - உறை, தோல், மூடுதல். (பிங்)
போலி - ஒன்று போல்வது, பொய்.
போழ் - வார், பிளவு. (தணி)
போழ்தல் - பிளத்தல்.
போழ்முகம் - பன்றி. (பிங்)
போழ்வு - பிளப்பு. (மலை)
போற்றி - (பெயரில்) துதி, வணக்கம், (கந்த) (வினையில்) பாது காத்தருள்க, (இப்பொருளில் வியங்கோள் விகுதியாகிய யகரங் கெட்டது) போற்றப்படுவது, (இப்பொருளில் இகரம் செயப்படு பொருள் விகுதி.)
போற்றுதல் - வணங்குதல், (பி) பாதுகாத்தல், புதழ்தல், (திவா) விரும்புதல், (சிந்) பேணுதல், ஈட்டுதல்.
போனகம் - சோறு.

## பௌ

பௌடிகம் - இருக்குவேதம்.
பௌத்தம் - புத்தமதம்.
பௌதிகம் - பூதசம்பந்தமுள்ளது.
பௌத்திரன் - புத்திரன்மகன்.
பௌத்திரி - புத்திரன்மகள்.
* பௌநர்ப்பவன் - இரண்டாம் விவாகமுடைய விதவைப்பெண்ணிடம் பிறந்தவன்.
பௌரவர் - பூருவின்மரபினர்.
பௌராணிகன் - புராணவித்துவான்.
பௌலோமி - இந்திராணி. (சப்)
பௌவம் - கடல், பூரணை.

## ம

* ம - சந்திரன், சிவன், இயமன்.
மகடூஉ - பெண்.
* மகண்மா - சிறுபெண்வடிவம் போலத்தோன்றும் ஒரு மிருகம். (தணிகை)
மகத்து - விருத்தன், நாடு, விசாலம், பெரியது. (சப்த)
* மகதன் - வமிசபரம்பரை கூறிப் புகழ்வோன். (சப்த)
மகதி - நாரதனுடைய வீணை, மிக்கநரம்புடையது.
மகபதி - இந்திரன்.
மகம் - யாகம், மகநாள், விழவு.
மகரகேதநன் - மன்மதன்.
மகரதோரணம் - மகரமீன் வடிவம்போன்ற தோரணம்.
மகரந்தம் - பூந்தாது, பூந்தேன்.
* மகரநீர் - கடல். (இரா)
* மகரப்பகுவாய் - சுறுவினது வாய்போலச் செய்யப்பட்ட ஒரு தலைக்கோலம்.
மகரம் - மகரப்பகுவாய், (கந்த) குறங்குசெறி என்னும் ஆபரணம். (சிந்) சுறுமீன்.
* மகரவாய் - மகரக்குழை.

* மகரவீணை - பதினேழு நரம்புடைய யாழ். (இரா)
மகராலயம் - கடல்.
* மகரிகை - மகரமீன்வடிவாகச் செய்யப்பட்ட குறங்குசெறி என்னும் ஆபரணம், (கந்த) மகரதோரணம், தந்தப்பூண்.
மகவான் - இந்திரன்.
மகவு - பிள்ளை.
* மகற்பலம் - பெரும்பயன்.
மகத் - பெரிது.
* மகன்றில் - நீர்வாழ்பறவைகளுள் ஒன்று. (சிந்)
* மகாகபித்தம் - வில்வமரம்.
மகாகாயம் - யானை, பெருவெளி.
* மகாபகை-பெருநதி. ஆபகை-நதி.
* மகி - பூமி.
* மகிடசங்காரி - துர்க்கை.
மகிடம் - எருமை. (சேது)
மகிதலம் - பூமி.
மகியன் - அரசன்.
மகிமா-அட்டசித்திகளுள் ஒன்று; அது பெருவடிவமாதல்.
* மகிழ்தூங்கல் - மகிழ்ச்சிசெறிதல். (சிந்)
மகிழ்நன் - நாயகன், மருதத்தலைவன்.
மகீருகம்-மரம்;(பார)கிரை.மகி-பூமி.
மகுடம் - முடி.
மகுடவர்த்தனர் - முடியுடையரசர்.
மகேசன் - பரமசிவன்.
மகைசுவரியம் - பெருஞ்செல்வம்.
மகோததி - பெருங்கடல்.
மகோதரம் - பூதம், (பிங்) பெருவயிறு.
மங்கலகாரியம் - நற்செயல்.
மங்கலபாடகர் - மங்கலவாழ்த்துக் கூறுவோர்.
மங்கலம் - ஆக்கம், (வெண்) இட்டசித்தி, பொலிவு, சோபனம், சந்தனம்.
* மங்கலவணி - வெள்ளணி.
* மங்கலவெள்ளை - சந்தகம்.
மங்கலன் - செவ்வாய்.
மங்கலை - கற்புடையாள்.
மங்குதல் - கெடுதல், (திவா) மழுங்குதல்.
மங்குல் - இருள், (சிந்) திசை, (பெரு) ஆகாயம், மேகம்.
மங்கை - பெண், கலியாழ்வாருர்.
* மச்சரம் - பொறாமை.
* மச்சிகை - மோர். (பிங்)
மச்சை - எலும்பின்சாரம்.
மசகம் - கொசுகு.
* மசகவரி - கொசுகுவலை.
* மசரதம் - கானல். (இரா)
மச - கபடம். ரதம் - தேர்.
* மசானம் - சுடுகாடு.
* மசி - பத்திரத்திலெழுதும் மைக்குழம்பு. (சூளா)
மஞ்சநம் - முழுகுதல்.
மஞ்சம் - கட்டில்.
மஞ்சரி - பூங்கொத்து, தளிர், மாலை, துளசி. (சப்த)
மஞ்சிகம் - தாளிக்கொடி.
மஞ்சிகன் - நாவிதன்.
மஞ்சிகை - குண்டலம், (பிங்) பேழை.
மஞ்சு - அழகு, மேகம், யானைமுதுகு, இளமை, பனி, வலி.

மஞ்சுளம் - அழகு. (இரா)
மஞ்ஞை - மயில்.
மட்கல் - ஒளிமழுங்கல். (இரா)
* மட்டநம் - அப்புதல். (திருவி)
மட்டம் - அளவு.
மட்டித்தல் - பூசுதல், (சிந்) அழித்தல். (இரா. அதி)
மட்டு - எல்லே, கள். (பிங்)
* மட்பகை - மண்ணரிநார்.
மட்பகைஞன் - குயவன்.
* மட்பகைவினைஞன் - குயவன்.
மடக்கு - மடங்குதலுடையது.
மடங்கல் - இடி, இயமன், சிங்கம், நோய், ஊழி, ஊழித்தீ, முடிவு, மடங்குதல். (பிங்)
மடங்குதல் - அடங்குதல், (திவா) மீண்டுவருதல்.
மடந்தை - பெண்.
மடநடை - மென்னடை. (சிந்)
மடம் - அழகு, (சில) துறவிகள் வசிக்குமிடம், அறியாமை, மென்மை.
மடவரல் - பெண். (பார)
மடவார் - மூடர், (வள்) பெண்கள்.
* மடவை - கவரிறுக்கி. (சேது)
மடன் - அறிவிலான், அறியாமை.
மடி - சீலே, சோம்பல், பொய், நோய், புலம்பு, அடக்கம், தாழை, வயிறு, கேடு. (பிங்)
* மடித்தல் - உழக்குதல், (திவா) கெடுத்தல்.
* மடியில் - கூடாரம். (சேது)
மடிவு - சோம்புதல், கெடுதல்.
மடு - இறங்கியேறும்வழி, (திவா) நீர்நிலை.
மடுத்தல் - உட்புகுத்தல்.
மடை - ஆணி, மூட்டுவாய், (புற) துவாரம், (திவா) பலி, (பெரு) இடைப்படுத்தல் (சில) சோறு, மதகு.
மடைத்தொழில் - பாகவேலை.
மடைநூல் - பாகசாத்திரம்.
மடையன் - பாகஞ்செய்பவன்.
மண் - அலங்காரம், மார்ச்சனை.
மண்கனைமுழவம் - குடமுழா. மண் - மார்ச்சனை. கனை - நெருங்கிய.
* மண்டநம் - அலங்காரம்.
மண்டபம் - இளைப்பாறும்வீடு, தேவாலயம். (சப்த)
* மண்டமர் - மிக்குச்செல்லும் போர்.
மண்டலம் - பூமி, நாடு, வட்டம், சக்கரம்போன்றவளைப்பு, கூட்டம், இருகாலும் வளைத்துநிற்கும் யுத்தநிலை, உண்டை, சக்கரம், பிரதிவிம்பம். (சப்த)
* மண்டலமாக்கள் - அரசர்.
* மண்டலமிடல் - வட்டமிடல்.
மண்டலி - பாம்பு, பூனை. (சப்)
* மண்டலிகன் - தேசாதிபதி.
மண்டலித்தல் - வட்டமிடல்.
மண்டுதல் - மிக்குச்செல்லல், (சிந்) நெருங்குதல்.
மண்டூகம் - தவளை. (சேது)
மண்டூரம் - இருப்புக்கறள்.
மண்டை - ஒருவகைப்பாத்திரம்.
மண்ணரிநார் - மட்கலம் வனைந்தரியுங் கயிறு.
மண்ணீட்டாளர் - சிற்பாசாரியர்.
மண்ணீடு - திண்ணை, வேயாமாடம்.

மண்ணுதல் - செய்தல், (சிந்) முழுகுதல், ஒப்பமிடல், (புற) அலங்கரித்தல், கழுவுதல்.
* மண்ணுறுத்தல் - நீராட்டல்.
மண்ணை - பசாசு, அறிவிலி.
மண்மகள்புதல்வர் - வேளாளர்.
மணத்தல் - கூடுதல், கமழ்தல்.
மணம்-விவாகம்,கூடுதல், வாசம்.
மணாளன் - நாயகன். (சேது)
மணி - அழகு, நீலமணி, முத்து, கருமை, நன்மை, இரத்தினம்.
* மணிநீர் - சந்திரகாந்தநீர்.
மணிபூரகம் - நாபித்தாநம்.
மணை - பலகை, (சிந்) வதுவைத் திண்ணை.
மத்தகம் - தலை, நெற்றி.
மத்தம் - களிப்பு, (திவா) மயக்கம், மதமுடையது, மத்து, ஊமத்தை.
* மத்தவாரணம் - மதயானை.
மத்திகை - குதிரைச்சம்மட்டி.
* மத்திரிப்பு - செற்றம். (சிந்)
மத்தை - ஊமத்தை. (இரா)
மதங்கம் - மத்தளம், முகில்.
மதங்கர் - பாணர்.
மதங்கி - பாடன்மகடூஉ. (இரா)
மதநம் - விருப்பம். (கந்த)
மதம் - செருக்கு, மகிழ்ச்சி, (சப்த) கொள்கை, உடன்பாடு, வலி, மிகுதி.
* மதமலை - யானை. (இரா)
மதர்த்தல் - களித்தல்.
மதர்வு - மகிழ்வு, மிகுதி. (திவா)
* மதர்வை - மயக்கம். (சிந்)
மதலிகை - ஆபரணத்தூக்கம்.
மதலை - பிள்ளை, தூண், கொன்றை, மரக்கலம், கொடுங்கை.
மதன் - செருக்கு, மிகுதி, வலி, (புற) அழகு, (சிறு) அறியாமை, (திருமு) மன்மதன்.
மதாணி - பதக்கம். (சேது)
* மதாம்பு-மதசலம். அம்பு-நீர்.
மதாவளம் - யானை.
மதி - குபேரன், (பார) சந்திரன், புத்தி, மாதம்.
* மதிச்சிலை - சந்திரகாந்தம்.
மதித்தல் - கடைதல், வரையறுத்தல்.
மதிதம் - மோர்.
மதிநாள் - மிருகசீரிடம்.
மதிமகன் - புதன்.
* மதிரை - கள்ளு.
மது - கள்ளு, தேன், வசந்தகாலம், மகரந்தம், நீர், மயக்கமுள்ளது.
மதுகம் - இருப்பை, துத்தநாகம்.
மதுகரம் - வண்டு.
மதுகை - அறிவு, (சிந்) வலி.
மதுகைடவர் - விட்டுணுவின் காதிற்பிறந்த மதுவும், கைடவனும் எனப்படும் அசுரர்.
மதுசூதநன் - விட்டுணு.
* மதுத்தண்டு - மதுப்பெய்த குழாய். தண்டு - குழாய்.
மதுபம்-வண்டு. பம்-குடிப்பது.
* மதுபருக்கம் - தயிர் நெய் பால் முதலியவற்றோடு கூடிய உணவு.
மதுரசம் - முந்திரிகை, கரும்பு.
மதுரம் - அழகு, இனிமை, பிரியம்.
* மதுரித்தல் - இனித்தல். (கந்த)
மதூகம் - இருப்பை, எட்டி.
* மந்தணம் - இரகசியம்.

மந்ததரம் - அதிகமந்தம்.
மந்தம் - மென்மை, அற்பம், அறிவின்மை, கூர்மையின்மை.
மந்தமா - யானை.
மந்தரம் - மந்தவிசை.
மந்தன் - சனி, கூர்மையிலி.
மந்தாகினி - கங்கை.
மந்தாரம் - செவ்வரத்தை.
மந்தி - பெண்குரங்கு, வண்டு.
மந்திரம் - ஆலோசனை, (இரா) கோயில், குதிரைப்பந்தி, வேதம், இராசியமாகப் பேசுதல், வீடு.
* மந்திரி - குபேரன், சுக்கிரன்.
மந்துரை - குதிரைப்பந்தி.
* மந்தேகர் - மாலைப்போதிலே சூரியனைச் சற்றுத் தடுத்து அர்க்கியநீராற்கொல்லப்படும் அசுரர். (பார)
மனோகரம் - அழகு. (திருவி)
மனோபவன் - மன்மதன்.
மனோரதம் - விருப்பம்.
மம்மர் - மயக்கம், துன்பம்.
மமதை - எனதென்கை.
மயக்கல் - கலத்தல்.
மயம் - அழகு, வடிவம், சொரூபம்.
மயல் - ஆசை, பேய், மயக்கம்.
* மயற்கை - செத்தை. (சிந்)
மயிரெறிகருவி - கர்த்தரிகை.
மயிலை - மீன், இருவாட்சி. (சிந்)
மயூரம் - மயில், நாயுருவி.
* மயூரேசன் - முருகக்கடவுள்.
மர்க்கடம் - குரங்கு.
* மர்த்தநம் - பொடியாக்கல்.
மரக்கால் - துர்க்கையாடிய கூத்து.
* மரக்கோவை - மரக்கலம்.
* மரநார் - மரவுரி. (இரா)
மரபு - தன்மை, முறைமை, மேம்பாடு, (புற) வழிபாடு, (சிந்) பழமை, வமிசம்.
மரவட்டணை - நெடும்பரிசை.
மரவம் - குங்குமமரம். (தணி)
மரவினையாளன் - தச்சன்.
* மரனூர் - மன்மதனூர். (பார)
மரா - கடம்பு, ஆச்சாமரம்.
மராட்டம் - பெண்மயிர், பிறமயிர்.
* மராம் - வெண்கடம்பு.
மராளம் - அன்னப்புள், இருள்.
மரிசி - புதுவரம்பின்வழி.
மரியாதை - நீதிவழிநிற்றல், நீதி, எல்லை. (சப்த)
மரீசம் - மிளகு.
மரீசி - கிரணம்.
மரீசிகை - கானல்.
மரு - வாசம், மலை, நீரில்லா இடம், பாலைநிலம். (சப்த)
மருகி - மருமகள்.
மருகு - மகரவாழை, (இரகு) மருகன்.
மருங்கு - செல்வம், வடிவு, (சிந்) பக்கம், இடை.
* மருச்சகன் - அக்கினி. மருத் - காற்று.
மருச்சுதன் - வீமன். (பார)
* மருட்கை - வியப்பு. (புற)
மருட்சி - மயக்கம்.
மருண்மா - யானை.
மருத்து - காற்று, தேவன்.
மருத்துவன் - இந்திரன், வைத்தியன்.
மருதம் - வயல்.

* மருத்துவி - மருந்துகொடுப்பவள். (மணி)
* மருந்தம் - நஞ்சு.
மருந்து - அமுதம், ஔடதி. (கந்)
* மருநிலம் - நீரில்லாநிலம்.
மருப்பு-கொம்பு, யாழின்கோடு.
* மருபூருகம் - அலரி. (சப்த)
மருமம் - இரகசியம், (பார) மார்பு.
* மருமரம்-சிலைமுதலியவற்றால் எழுமொலி. (சப்த)
* மருமாட்டி - வழித்தோன்றிய பெண்.
மருமான் - மகன், வழித்தோன்றல்.
மருவலர் - பகைவர்.
மருவார் - பகைவர்.
மருவுதல் - அணுகுதல். (திவா)
மருள் - மயக்கம், பிசாசம்.
மருளல் - மயங்கல்.
மரூஉ - இடையிலே பெரும்பாலும் கெட முன்பின்னுள்ள எழுத்துக்கள் அணுகிவழங்கும் மொழி. (நன்)
மல் - மலை, (இரா) வளம், வலி, திருமாலாடியகூத்து.
மல்கல் - நிறைதல்.
மல்லகதி - மல்லரைப் போலச் செல்லுங் குதிரைக்கதி.
மல்லம் - மற்போர், கதுப்பு.
* மலக்கம் - அலைவு. (இரா)
மலம் - அழுக்கு, பாவம்.
மலயக்கால் - தென்றற்காற்று.
மலயசம் - சந்தநம். சம் - பிறப்பு.
மலயம் - பொதியமலை.
மலயாநிலம் - தென்றற்காற்று.

மலர்ச்சி - பொலிவு, விரிதல்.
மலர்தல் - தோன்றல், (திவா) விரிதல்.
மலரோன் - பிரமன்.
* மலவாசனை - மலப்பயிற்சி.
மலாவகம் - பிண்ணாக்கு.
மலிநம்-அழுக்குள்ளது, குற்றம்.
மலிநீகரணம் - பிறவுயிர்க்குத் துயர்செய்தல்.
* மலிர்தல் - நிறைதல். (சிங்)
மலிவு-மகிழ்வு, (வெண்) நிறைவு.
மலீமசம் - அழுக்கு. (சப்த)
மலைத்தல் - மாறுபடல், (புற) தடுமாறல்.
மலைதல் - மாறுபடல், (சிங்) போராடல், சூடுதல்.
மலைப்பு - மாறுபாடு, (வெண்) மயக்கம், கூத்தின்விகற்பம்.
* மலைமண்டலம் - சேரநாடு.
மலையன் - } சேரன்.
மலைமான் - }
மலைவு - மாறுபாடு, யுத்தம்.
* மழம் - இளமை. (கந்த)
மழலை - நிரம்பாமொழி. (இரா)
மழவன் - இளைஞன், (ஆசி) வீரன்.
மழவு - இளமை, குழந்தை.
மழித்தல் - முண்டிதமாக்கல்.
மழுங்கல் - தேய்தல். (புற)
* மழுவாளி - சிவன். (இரா)
மழை - குளிர், நீர், மேகம். (பிங்)
மழைக்கோள் - சுக்கிரன்.
மழைத்தல் - மழைபெய்தல்.
* மள்கல் - மழுங்கல் (இரா)
மள்ளம் - வலி. (திவா)
மள்ளர் - படைவீரர், உழவர், வீரர்.
* மளினம் - அழுக்கு (சிவ)

* மற்குணம் - மூட்டுப்பூச்சி.
* மற்சரம் - பிறராக்கம் பொருமை.
மற்சியம் - மீன். (சப்த)
* மற்று - இனி. (உரிச்சொல்)
* மறக்கை - மறத்தல். (இரா)
மறத்தி - பாலைநிலப்பெண்.
மறப்புலி - சிங்கம்.
மறம் - கோபம், பாவம், மாறுபாடு, வலி, வீரம், யுத்தம், (பிங்) களவு, கொடுமை, பொருமை, (வெண்) கொலை, மயக்கம். (பிங்)
மறல் - மயக்கம், (பிங்) இயமன்.
மறலி - இயமன். (கந்த)
* மறலுதல் - மாறுபடுதல், (சிந்) போர்செய்தல். (வெண்)
மறவர் - பகைவர், (ஆசி) கொடியவர்.
மறவி - கள்ளு, மறப்பு.
மறி - மான், ஆடு.
மறித்தல் - தடுத்தல், திருப்பல்.
* மறித்தரல் - மீட்டல். (கலி)
* மறித்தும் - பின்னும். (இரா)
மறிதல் - மீளல், கீழ்மேலாதல், (வெண்) வீழ்தல்.
மறு - குற்றம், வேறு, எதிர்.
மறுக்கம் - சுழற்சி, (இரா) மயக்கம்.
* மறுக்கு - சுழற்சி, மயக்கம்.
மறுகு - தெரு, நெடுந்தெரு.
மறுகுதல் - சுழலல்.
* மறுகுறல் - சுழலல். (இரா)
* மறுதலித்தல் - மறுத்தல்.
மறுதலை - எதிர், மாறு.
* மறுதலைத்தல் - மாறுபடல்.
* மறுபுலம் - பாலைநிலம்.
மறுமை - வருபிறப்பு.
* மறுவரல் - சுழற்சி. (அக)
* மறுவலும் - இரண்டாமுறையும், பின்னும். (தணிகை)
மறுவி - கத்தூரிமிருகம்.
மறை - மறு, "செவிமறை நேர்மின்னு" (கலி) இரகசியம், வேதம், மறுத்தல். மந்திரம்.
மறைக்கொடியினன் - துரோணாசாரி.
* மறைச்சிரம் - வேதாந்தம்.
மறைசை - வேதாரணியம்.
* மறைத்தலைவி - இலக்குமி.
மறைபுகல் - சரண்புகல்.
* மறைமுதல் - சிவன். (கந்த)
மறைமொழி - மந்திரம்.
மறையவர் - பிராமணர்.
* மறையவன் - பிரமன். (இரா)
மன் - நிலைபேறு, மிகுதி, (புற) அரசன், ஆக்கம். (பிங்)
மன்பதை - உயிர்ப்பன்மை. (புற)
* மன்பா - ஆசிரியப்பா.
மன்விருத்தம் - ஆசிரியவிருத்தம்.
மன்ற - நிச்சயமாக. (மலைப)
மன்றம் - ஊர்நடுவே பலருங்கூடியிருக்கும் மரத்தடி, (திருமு) சபை, வெள்ளிடை, நெடுந்தெரு, பொதுவிடம்.
மன்றல் - வாசனை, விவாகம்.
மன்றுடல் - சபையிற்பேசல்.
* மன்றுடி - சிவன்.
மன்று - சபை, நீதித்தலம், வெளி.
மன்னர்பின்னர் - வைசியர்.
* மன்னல் - பெருமை, வலி.
* மன்னவர் - அதிகாரிகள், (கந்த) அரசர்.
மன்னார் - பகைவர்.

* மன்னுவுலகம் - சுவர்க்கம்.
* மன்னுதல்-நிலைத்தல்,மிகுதல்.
* மன்னும் - மிகவும். (சிந்)
* மன்னுயிர் - பல்லுயிர். (புற)
மன் - மிகுதி.
மன்னுலகம் - தேவுலகம். (பிங்)
* மனச்சழக்கு - பொறுமை.
மனத்தாபம் - மனக்கவலை.
மனவு - பலகறை, மணி, அக்கு மணி, சங்கு.
மனு - அரைப்பட்டிகை.
மனுமக்கள் - மனிதர். (இரா)
மனுவர் - கொல்லர்.
மனை - மனைவி, வீடு.
* மனைக்குயில் - தலையிலாக் குருவி. (பிங்)
* மனைவேள்வி - விருந்தோம் பல்.
* மனோன்மனி - உமை. (பிங்)
மனோசவம் - அதிவேகம்.
மனோசன் - மன்மதன்.
மனோபு - மன்மதன்.

## மா

மா - இலக்குமி, பெருமை, மிருகம், கறுப்பு, குதிரை, அழகு, நிலம், வண்டு, செல்வம், வலிமை, அழைத்தல், (பிங்) மாமை.
மாகதர் - வமிசபரம்பரைகூறிப் புகழ்வோர், பாடகர். இவரை நச்சினார்க்கினியர் "இருந்தேத்துவார்" என்பர்.
மாகதி - முல்லை, பிப்பலி.
* மாகந்தம் - மாமரம். (சப்த)
மாகம் - ஆகாயம், தேவுலகம், திக்கு, மாசிமாதம், மேகம்.
* மாகர் - தேவர்.
* மாகாத்மியம் - பெருமை.
* மாகு - வலை. (பார)
மாகுலவர் - வேடர்.
மாகேசுவரி - உமாதேவி.
* மாகேயன் - நரகாசுரன்.
* மாங்கலியம் - மங்களசாதநம்.
மாசிகம் - மாசசம்பந்தமாகித் தோன்றுவது, மாசந்தோறுஞ் செய்யுஞ் சிராத்தம். (சப்த)
மாசு - அற்பம், மேகம், குற்றம், அழுக்கு.
* மாசுண்ணல் - அழுக்காதல்.
மாசுணம் - பாம்பு, பெரும் பாம்பு. (இரா)
மாசேனன் - அருகன், முருகக் கடவுள்.
மாசை - பொன். (சிந்)
மாட்சி - நன்மை, (புற) பெருமை.
மாட்டல் - அழித்தல். (திருமு)
மாட்டார் - வன்மையில்லாதவர்.
மாட்டுதல் - செலுத்துதல், (சிந்) மூட்டுதல், (பிங்) இயலுதல்.
* மாட்டெறிதல் - ஒன்றற்குரிய இலக்கணத்தை அதனைப்பெற ற்குரியமற்றொன்றற்கும் பொத்திவிடல்.
மாட்டேற்றுதல் - "அதுபோலச் செய்க" எனமாட்டெறிதல்.
மாடகம் - யாழின்முறுக்காணி.
மாடம் - வீடு, உழுந்து. (பிங்)
* மாடிகை - கவசம். (பிங்)
* மாடியம் - கவசம். (சிந்)
மாடு - செல்வம், இடம், பக்கம், பொன்.
* மாடை - பொன். (சூடா)

மாண் - பெருமை.
மாண்டல் - இறத்தல், (பிங்) சிறத்தல்.
மாண்டவர் - இறந்தவர், சிறந்தவர்.
மாண்பு - அழகு, பெருமை.
மாணல் - சிறத்தல், பெருமை.
* மாணவ்வியம் - மாணவர்குழு.
* மாணவகன் - கற்போன், பிரமசாரி.
* மாணவன் - இளைஞன்,(சப்த) பிரமசாரி. (இரா)
மாணுக்கன் - கற்பவன்.
மாணர் - பகைவர். (இரா)
மாணி - பிரமசாரி. (இரா)
* மாணை - மாணைக்கொடி.
மாத்தகை - பெருந்தகை.
* மாத்தியாநிகம் - மத்தியான வந்தனம். (சேது)
மாத்திரம் - பரிமாணம், அற்பம்.
* மாத்திரி - மத்திரதேசராசன் புதல்வி. (பார)
மாத்திரை - பரிமாணம், அற்பம்.
* மாத்திரைக்கோல் - அளவைக் கோல். (நல்)
* மாத்து - வரிசை, (திருக்கோ) மகத்து.
மாதங்கம் - யானை.
மாதங்கர் - சண்டாளர்.
மாதங்கி - காளி, துர்க்கை.
மாதர் - அழகு, இச்சை, மகளிர்.
மாதரி - காளி.
மாதலி - இந்திரன்சாரதி. (சப்)
மாதவம் - வசந்தகாலம், கள்ளு.
மாதவன் - விட்டுணு, முனிவன்.
மாதவி - சுபத்திரை, (பார) குருக்கத்திக்கொடி.
மாதவிகொழுநன் - அருச்சுனன்.
மாதா - அளப்பவன், தாய், உமை.
* மாதாமகன் - மாதாவுடைய பிதா.
மாதி - வட்டமாயோடல்.(இரா)
மாதிகம் - குதிரைபோம்வழி.
மாதிரம் - மலை, திக்கு, யானை.
* மாதிரு - தாய். (சேது)
* மாதிருகமநம் - தாயைப்புணர் தல். (சேது)
மாது - காதல், பெருமை, (சிந்) பெண்.
* மாதுப்பிதாமகன் - மாதாவுடையபாட்டன்.
* மாதுமை - பெண்டன்மை.
மாதுரியம் - இனிமை.
மாதுலன் - தாயுடன்பிறந்தவன், மாமன்.
* மாதுலை - மாமி, மாதுலன் மனைவி.
மாதுளுங்கம் - மாதுளைமரம்.
மாதேவன் - சிவன்.
மாந்தர் - மனிதர்.
* மாந்தாதா - சூரியவமிசத்துள்ள ஒருபிரசித்தி பெற்ற அரசன். (இரா)
மாந்தி - மாமரம்.
* மாந்திரிகன் - மந்திரவாதி.
மாந்துதல் - உண்ணல், குடித்தல்.
* மாநதண்டம்-அளவைக்கோல்.
மாநதமடு - பிரமாவின் மனத்தாற்றோன்றிய ஒருவாவி.
* மாநுடன் - மனிதன்.
மாபலன் - காற்று. (பிங்)
மாமகன் - மன்மதன்.

மாமணி - மாணிக்கம்.
மாமாத்திரர் - வைத்தியர்.
* மாமாத்து - மிகப்பெரியது.
மாமுனி - அருகன்.
மாமை - கருநிறம், (மலை) அழகு, நிறம். (வெண்)
மாய்த்தல் - மறைத்தல், அழித்தல்.
மாய்தல் - மறைதல், (சிந்) அழிதல்.
மாய்வு - அழிவு, மறைவு.
மாயம் - தீது, பொய்,(பிங்)வஞ்சகம், கறுப்பு.
மாயவன் - விட்டுணு.
மாயன் - கரியவன், திருமால்.
மாயாதேவிசுதன் - புத்தன்.
மாயாபுரி - அரித்துவாரம், பித்தளை.
* மாயாவாதம் - முதற்காரணமாகியமாயை சத்துமசத்துமாகாது சொல்லொணாததாய் இருக்கும் என்னும் புறச்சமயம். (திருவா)
* மாயாவி - மாயைசெய்பவன்.
* மாயூரம் - மயிற்கூட்டம்.(சப்)
* மாயேயம் - மாயையாலாய உடம்பு முதலியன.
மாயை - கபடம், காளி, பொய்யுணர்வு, அரித்துவாரம்.
மாயையுற்றுள் - காளி.
* மாயோர் - பெண்கள். (கந்த)
* மார்க்கடம்-குரங்குக்கூட்டம்.
* மார்க்கண்டி - மார்க்கண்டன்.
மார்க்கம் - வழி, சமயம், தெரு, ஆராய்வு.
மார்ச்சநம் - சுத்திசெய்தல்.
மார்ச்சநி - துடைப்பம்.
மார்ச்சனை - முரசொலி, மண்.
மார்ச்சாரம் - பூனை. (சேது)
* மார்த்தம் - மிருதிவழி.
மார்த்தாண்டன் - சூரியன்.
* மாரகம் - அழித்தல். (சப்த)
மாரகன் - அழிப்பவன். (சிவத)
மாரகாகளம் - குயில். (பாரத)
* மாரணம் - அழித்தல். (சேது)
* மாரதர் - தம்மையுந் தஞ்சேனைகளையுங் காத்துக்கொண்டு தேர்வீரர் பலரொடு பொருபவர். (பார)
மாரன் - மன்மதன்.
மாராயம் - உவகை.
மாரி - மழை, மேகம், காடுகிழாள், மாரணம், கள்ளு, (பிங்) நீர்.
* மாரிடை - தக்கன்றாய். (கூர்)
மாருதம் - காற்று.
மாருதி - அநுமன், வீமன்.
* மாருதேயன் - அநுமான்.
மால் - இந்திரன்,(பார)கருமை, (பெரு) மயக்கம், காற்று, மேகம், திருமால், அருகன், புதன், வேட்கை.
மால்பு - மூங்கிலேணி. (மலை)
மாலதி - சந்திரிகை, (சப்த) சிறுசெண்பகம், முல்லை.
* மாலயற்கரியோன் - சிவன்.
மாலிகை - கழுத்தணி, மாலை.
* மாலிங்யம் - அழுக்கு.
மாலிநி - காளி, உமை.
மாலுதல் - மயங்குதல்.
மாலுதாநன் -கண்குத்திப்பாம்பு.
மாலுந்திவந்தோன் - பிரமன்.
மாலுமி - மரக்கலஞ்செலுத்துவோன்.

மாலூரம் - வில்வம், விளா.
மாலை - இரா, சாயங்காலம், குணம், ஒழுங்கு, வரிசை.
மாலைமாற்று - இறுதியினின்று படிக்கும்போதும் முதனின்று படிப்பது போல முடியும்படி அமைத்த சித்திரகவி.
* மாலையன் - மாலைதொடுப்பவன். (சப்த)
மாவலர் - குதிரைப்பாகர்.
* மாவிரதர் - மாரதர். (பார)
மாழ்கு- மயக்கம், மிருகசீரிடம்.
மாழ்குதல் - மயங்குதல்.
மாழாத்தல் - மயங்குதல்.
மாழை - அழகு, திரட்சி, பொன், மாமரம், புளிமா, ஓலை, அறிவின்மை, (பிங்) இளமை.
மாளிகை - அரசர்வீடு, (பிங்) வீடு.
மாளுதல் - இறத்தல்.
மாற்சரியம் - பொறாமை.
மாற்றம் - மறைத்தல். "மாற்றமுஞ் செய்கையும்" (கந்த) சொல், எதிர்மொழி. (இரா)
மாற்றலர் - பகைவர். (கந்த)
மாற்றவள் - மற்றையமனைவி.
மாற்றுட்டி - மாற்றவள். (இரா)
மாற்றார் - பகைவர்.
மாற்று - உவமை, (ஞானா) எதிர்.
மாற்றுதல் - அழித்தல், (இரா) கொடாதுமறுத்தல், (சூடா) ஒன்றை மற்றொன்றாக்கல்.
* மாற்றுமை - மாறுபாடு.(கலி)
* மாறல் - கூத்தாடல். (பிங்)
மாறன் - பாண்டியன்.
* மாறுடல் - பகைத்தல். (இரா)
* மாதிருமார்பினள் - இலக்குமி.
மாறு - முரண், (சிவ) இறந்துபாடு, (புற) வேறு, (இரா) எதிர், துடைப்பம்.
மாறுதல் - விற்றல், (புற) வேறுதல், தவிர்தல், மயங்கல்.
மான் - மகான், (கந்த) மலை, குதிரை, மகரவிராசி, மகதத்துவம்.
மான்மகன் - பிரமன்.
மான்மதம் - கத்தூரி.
மான்மியம் - பெருமை.
மான்றல் - மயங்குதல்.
* மானசிகம் - மனத்தாற்செயுந்தவம். (திரு)
மானதண்டம் - அளவுகோல்.
மானம் - நிலைதவறாது நிற்கும் பேராண்மை, (வள்) வலி, நாணம், (திவா) அளவு, பெருமை, விமானம், நன்குமதிப்பு.
மானமா - கவரிமா. (தணிகை)
மானவர் - படைவீரர், மனிதர்.
மானியம் - நன்குமதிப்பு.(சப்த)
மானினி - பெண். (கந்த)
மானுதல் - மயங்குதல், ஒத்தல்.

## மி

மிக்கோர் - அறிஞர்.
மிகை - கல்லாமையும் செல்வமுங் காரணமாக வரும் உள்ளக்கிளர்ச்சி, (தொல்) மிகுதி, குற்றம், அளவின் மிக்கது.
மிச்சம் - மிகுதி, (பார) ஒழிபு.
மிச்சிரம் - கலப்பு.
மிச்சில் - ஒழிபொருள்; (புறநா) எச்சில். மிஞ்சு + இல்.
மிச்சை - பொய், வறுமை, அறிவின்மை.

மிசை - மேடு, மேல்.
மிசைதல் - உண்ணல்.
மிஞிறு - வண்டு.
மிடல் - வலி.
மிடறு - கழுத்து.
மிடித்தல் - வறுமையுறல். (சிந்)
* மிடியன் - வறியவன்.
மிடுக்கு - வலி. (இரா)
* மிடை - பரண், (கலி) தூறு.
மிடைதல் - நெருங்கல்.
மிண்டன் - திண்ணியன்.
மிண்டுதல் - நெருங்குதல்.
* மித்தியாநிரசநம் - சபதம்.
* மித்திபாமதி - பொய்யுணர்வு.
மித்திரநாள் - அநுடம்.
மித்திரன் - நண்பன், சூரியன்.
மித்தை - பொய். (கந்த)
மிதப்பு - உயர்ச்சி, மேடு.
மிதம் - அளவு, வரையறை, ஒன்றற்கொன்று. (சப்த)
* மிதம்பசன் - கிருபணன்.
மிதவை - மிதப்பது, (இரா) சோறு, தெப்பம்.
மிதி - கவளம், (கல்லா) அறிவு, அளவு. (சப்த)
மிதிலை-மிதி என்னும் அரசனாலே தாபிக்கப்பட்ட நகரம்.(இரா)
மிதுனம்-ஆண்பெண், இரட்டை.
மிரியல் - மிளகு.
மிருகதரன் - சந்திரன்.
* மிருகநாவி - கஸ்தூரி.
* மிருகபதி - சிங்கம். (சப்த)
மிருகம் - மான், தேடல், இரத்தல். (சப்த)
மிருகமதம் - கத்தூரி.
மிருகராசன் - சிங்கம்.(சப்த)
மிருகாங்கன் - சந்திரன்.
மிருகாரி - சிங்கம், புலி.
மிருகேந்திரன் - சிங்கம்.
மிருத்திகை - மண். (சேது)
மிருத்து - மரணம். (சேது)
மிருதசஞ்சீவினி - உயிர்தருமருந்து.
* மிருதம் - யாசித்துவாங்கிய பொருள். (காஞ்)
மிருது - மென்மை.
மிலேச்சன் - அறிவிலான், கீழ்மகன். (சப்த)
* மிலைத்தல் - மேய்தல்.(திருவா)
மிலைதல் - அலங்கரித்தல்,(திவா) சூடுதல்.
மிழலை-எழுத்துநிரம்பாதசொல்.
* மிழற்றல் - மெல்லப்பேசல், (சிந்) பேசுதல்.
மிளிர்தல் - பிறழ்தல், புரளுதல், குதித்தல்,(சிந்) கீழ்மேலாதல், (பெரும்) மறிதல், (புற) விளங்குதல்.
* மிளை - காவல், (மலை) காவற்காடு. (மணி)
மிறை - வளைவு, (வெண்) திறை, (சூடா) குற்றம்,உலைவு, வருத்தம்.
மிறைக்கவி - சித்திரகவி.
மிறைத்தல் - உலைதல், வருந்துதல்.
மின் - ஒளி, மின்னல்.
* மின்னார் - பெண்கள்.(கந்த)
மின்னுதல் - பிரகாசித்தல்.

## மீ

மீ - ஆகாயம், உயர்ச்சி, மேல்.
மீக்கூர்தல் - மேற்படல்.
மீக்கூற்றம் - புகழ்.

மீக்கோள் - ஏறுதல், (சூடா) போர்வை.
மீகாமன் - மரக்கலஞ்செலுத்து வோன்.
* மீகாரம் - மேலிடம். (இரா) காரம் - எடுத்தல்.
* மீச்செலவு - இறுமாப்பு, (நீதிநெ) மேற்போதல்.
* மீசை - மேலிடம். (சிந்)
மீட்சி - கைம்மாறு, (இரா) மீளு தல், மீட்டல்.
மீட்டும் - பின்னும்.
* மீதிடல் - கிளர்தல். (இரா)
மீது - மேல்.
மீதுரை - பல்காற் சொல்லல்.
மீதூரல் - நெருங்குதல், மேற் படல். (நைட)
* மீப்பு - மேம்பாடு.
* மீமாஞ்சகன் - மீமாஞ்சையில் வல்லவன்.
மீமிசை - மேன்மேல். (இரா)
மீள - பின்னும். (சேது)
மீளாதகதி - மோக்கம்.
மீளி - பெருமை, வலிமை, வீரன், பாலைநிலத்தலைவன். (பிங்)
* மீளிமை - வன்மை. (சிந்)
மீளுதல் - திரும்புதல்.
மீன் - நட்சத்திரம், சித்திரை நாள். (பிங்)
மீன்கோட்பறை - நெய்தற்பறை.
மீனகேதநன் - மன்மதன், (பார) பாண்டியன். (சேது)
மீனம் - மீன்.
மீனவன் - வசுராசன்மகன், (பார) பாண்டியன்.
மீனேறு - மகரமீன்.

## மு

முக்கணன் - சிவன், விநாயகன், வீரபத்திரன்.
முக்கண்ணி - காளி, உமை.
* முக்கு - இருமல். (சிவத)
முக்குடைச்செல்வன் - அருகன்.
முக்கியம் - தலைமை. (சப்த)
* முக்குதல் - உண்ணல். (புற)
முக்கூட்டு - பரணிநாள்.
* முக்கோணக்குன்று - திரி கோணமலை. (பார)
முக்கோல் - திரிதண்டம், திரு வோணம்.
முக்கோற்பகவர் - திரிதண்டசந் நியாசிகள்.
* முகக்கொள்ளி - கொள்ளி வாய்ப்பேய். (இரகு)
முகங்கொடுத்தல் - உடன்படல்.
* முகங்கோட்டல் - குனிதல்.
முகடி - மூதேவி.
முகடு - உச்சி.
முகத்தல் - எடுத்தல், (சிந்) அள் ளுதல்.
முகப்பு - முகத்தல், முன்னிடம்.
முகபடாம் - முகப்போர்வை.
முகம் - ஆரம்பம், உபாயம், பிர தாநம், முதலிலுள்ளது, (சப்த) வாயில், பக்குவம்.
முகரம் - கடுஞ்சொல், காகம், (சப்த) ஒலி.
* முகரிமை - பேரறிவு.
முகவாசம் - வெற்றிலை, (சிந்) ஏலம் முதலியவற்றின் வாச னைப்பொடி. (திருவி)
முகவுரை - பாயிரம்.
* முகவை - பொலிப்பாட்டு.
* முகிலூர்தி - இந்திரன்.

முகிழ்த்தல் - அரும்புதல். (சிந்)
முகுடம் - முடி.
முகுந்தன் - விட்டுணு. முகு - முத்தி. (சேது)
முகுரம் - கண்ணாடி. (பார)
* முகுரவானன் - திருதராட்டிரன். (பார)
* முகுளம் - மொட்டு.
* முகூர்த்தவிதாநி - முகூர்த்தம் நியமிப்பவன். (சிந்)
முகைத்தல் - அரும்புதல்.
* முகைவிம்மல் - மலர்தல்.
முகேரெனல் - ஓரநுகரணம்.
* முங்குதல் - உண்ணல், (இரகு) முழுகல். (மணி)
* முச்சடை - திரிசடை என்பவள். (இரா)
முச்சி - மயிர்முடி.
முச்சியர் - உறைகாரர். (ஆசிரிய)
முசர் - மோர்.
முசலம் - உலக்கை.
முசலி - பலராமன், உடும்பு.
முசு - குரங்கு. (இரா) ஒருவகைக்குரங்கு.
* முசுக்கலை - ஆண்முசு. (கந்த)
முசுடர் - கீழ்மக்கள்.
முசுண்டர் - கீழ்மக்கள்.
முசுண்டி - மட்டிப்படை. (திவா)
* முஞ்சகேசி - விட்டுணு. (சப்)
முஞ்சல் - இறத்தல். (கந்த)
முஞ்சி - முஞ்சிப்புல்லு.
முட்கோல் - இருப்புமுள்ளு.
* முட்டம் - ஊர். (சூடா)
முட்டி - கைப்பொத்து, எட்டி.
முட்டு - வழு, குறைவு, வறுமை, முட்டுதல்.
முட்டுதல் - குறைதல், (சிந்) எதிர்தல், நிறைதல், முடுகல்.
முட்டை - அண்டம், (இரா) தவிடு.
முடக்கம் - அடக்கம், மடங்குதல்.
முடங்கல் - ஓலை, (இரா) தாழை, மூங்கில், நோய், மடங்குதல்.
முடம் - குற்றம், (சில) வளைவு.
முடலை - முறுக்கு, (நெடு) பெருமை, உண்டை, திரட்சி, (பிங்) வலி.
முடவன் - சனி, அருணன்.
* முடவு - முடத்தன்மை. (அகம்)
முடிதல் - அழிதல், முற்றுதல்.
முடுக்கர் - குறுந்தெரு, (சில) மலைக்குகை, கோணத்தெரு.
முடுக்கு - முடுக்கர், மூலை.
முடுக்குதல் - கடாவுதல், (நெடு) ஓட்டுதல், (இரா) விரைவாக்கல்.
முடுகல் - அணுகுதல், விரைதல், எதிர்தல்.
முடுகியல் - வண்ணகச்செய்யுள்.
முடுவல் - நாய், பெண்ணாய்.
முடுவற்படையோன் - வைரவன்.
* முடுவன் - ஊமை. (ஆசிரிய)
முடை - புலால், தவிடு, (இரா) நாற்றம்.
முண்டகம் - கடன்முள்ளி, (புற) தாமரை, தாழை, முள்ளி, கள்ளு.
முண்டகன் - பிரமன். (கந்த)
முண்டகாசனை - இலக்குமி.
* முண்டநம் - முண்டிதமாக்கல்.
* முண்டபலம் - தேங்காய். (சப்)

முண்டம் - தலை, நெற்றி, குற்றி.
* முண்டி - நாவிதன். (சப்த)
முண்டித்தல் - மொட்டையாக்கல்.
முண்மா - முட்பன்றி.
முணங்கு - சோம்பு, (புறநா) அடக்கம்.
* முணை - மிகுதி. (சிந்)
முத்தக்காசு - கோரைக்கிழங்கு.
முத்தகம் - தனிநின்று முடியுங்கவி.
முத்தம் - அதரம், முத்து.
முத்தலை - சூலம். (திவா)
முத்தலைவேல் - சூலப்படை.
முத்தன் - விட்டவன், முத்திபெற்றவன்,இயல்பாகவேபாசங்களால் விடப்பட்டவன்.
முத்தாபலம் - இசங்கு, முத்து.
முத்தாவலி - முத்துமாலை. ஆவலி-நிரை.
முத்தி - விடுதல், மோட்சம்.
* முத்திதன் - முத்திகொடுப்பவன். (சைவ)
முத்திதசை - முத்திநிலை.
முத்திரை - அடையாளம்.(பார)
முத்தை - திரட்சி.
முத்தொழிலோர் - வைசியர்.
முதம் - மகிழ்ச்சி.
முதல் - காரணம், (கலி) ஆதி, இடம்.
முதல்வி - தலைவி.
* முதலி - முதல்வன். (பெரிய)
* முதலுதல் - முதலாதல்.
முதற்பா - குறள்வெண்பா.
* முதனிலை - காரணம். (தொல்)
முதுஞள் - அசுவதி.
* முதாரி - முதுமை. (புற)
* முதிஞர் - முதியோர். (இரா)
* முதிதை - பெரியோரில்லைக்கும்பற்று.
* முதியாள் - தேவராட்டி.
* முதிர்ந்திடல் - காய்தல்.
முதிரை - அவரை கடலை முதலியன.
* முது - பேரறிவு. (சிறு)
* முதுக்குறைவி - பேரறிவுடையாள். (அக)
முதுக்குறைவு - பேரறிவு.
முதுகாடு - சுடுகாடு.
முதுகுன்று - பழமலை.
முதுசொல் - பழஞ்சொல்.
முதுநிலம் - களர்நிலம், (பிங்) பாலை நிலம்.
முதுமகன் - சனி.
முதுமை - பழமை.
* முதுமொழி - பிரணவம்,(கலி) பழஞ்சொல்.
முதுவர் - அறிஞர், அமைச்சர், வயோதிகர்.
முதை - இலையுதிர்ந்தகாடு.
முதைப்புனம் - பழங்கொல்லை.
முதையல் - முதிர்காடு.
* முந்தன் - கடவுள். (சித்)
* முந்திளவல் - தமயன். (தணி)
முந்து - முன், பொந்து.
முந்தூழ் - மூங்கில். (கந்த)
முந்தை - பாட்டன், (வெண்) முன்னே, (புற) பழமை.
முந்நீர் - கடல்.
முப்புரிநூல் - பூணுநூல்.
முப்புரிநூலோர் - அந்தணர்.
முப்புள்ளி - ஆய்தவெழுத்து.
மும்மடி - மூன்றுபங்கு. (பார)
மும்மீன் - மிருகசீரிடம்.

* மும்மூடர் - முழுமூடர்.
* முமூட்சு - மோக்கம் பெறும் விருப்புடையவன்.
முயக்கம் - தழுவுதல்.
முயங்குதல் - தழுவுதல்.
முயல்வு - முயற்சி.
முயற்கூடு - சந்திரன். (சிந்)
முயிறு - ஒருவகையெறும்பு.
முரசகேது - தருமன். (பார)
* முரசபலம் - பலாமரம்.
முரசம் - மத்தளம். (சப்த)
முரசு - வாச்சியம், மத்தளம், துந்துபி.
* முரஞ்சுதல் - முற்றுதல்,(மலை) வலிபெறல். (ஞாஞ)
முரடு - சமமின்மை.
முரண் - பகை, மாறுபாடு, வலி, யுத்தம்.
முரணுதல் - போராடல், மாறுபடல்.
முரம்பு - பரலடுத்துயர்ந்தநிலம், (தணி) பாறை, பாலைநிலம்.
* முராரிபு - விட்டுணு. (சப்த)
முராலுதல் - கதறல், ஒலித்தல்.
* முரலை - நிருமதையாறு.
* முரவை - தவிடு. (திருவி)
* முரள் - சிப்பி. (தொல்)
* முரற்கை - தாளம், (மலை) கலிப்பா.
* முரவை - வரி. (பொரு)
* முராந்தகன் - விட்டுணு (இரா)
முராரி - விட்டுணு.
முரிதல் - வளைதல், (சிந்) முறிதல்.
முரிப்பு - எருத்துத்திமில், வளைத்தல்.
முரிவு - வருத்தம், (சிந்) முரிதல்.
முருக்குதல் - அழித்தல், கெடுத்தல். (இரா)
முருகன் - இளைஞன், முருகபிரான், வெறியாட்டாளன்.
* முருகியம் - குறிஞ்சிப்பறை.
முருகு - முருகபிரான், திருவிழா, இளமை, பரிமளம், அகில், எழுச்சி, வெறியாட்டாளன், (திவா) தெய்வத்தன்மை, வேள்வி, (மது) எலுமிச்சை.
* முருகேசன் - முருகபிரான்.
முருங்கல் - அழிதல். (வெண்)
முருடர் - வேடர்.
முருடு - மத்தளம், (இரா) வாச்சியம், விறகு, பெருங்குறடு.
* முருந்தன் - பிரசித்தன்.(இரா)
முருந்து - இறகினடிக்குருத்து.
முல்லை - வெற்றி, கற்பு, (திவா) முல்லைக்கொடி, காடுசார்ந்த நிலம்.
முல்லையர் - இடையர்.
முழக்கு - ஒலி.
முழந்து - முழங்கால்.
முழல் - சுழற்கொடி.
முழவு - தண்ணுமை, மத்தளம், (புற) தம்பட்டம், வாச்சியம்.
முழா - முழவு. (சிந்)
* முழாஅல் - தழுவுதல். (சிந்)
முழுக்க - முழுமையும். (தணி)
* முழுத்தம் - முகூர்த்தம்.
முழுத்தல் - முழுமையாதல்.
* முழுநெறி - முழுப்பூ. (புற)
முழுமகன் - அறிவில்லான்.
* முழுமணி - மாணிக்கம்.(நீதி)
முழுமதி - பூரணசந்திரன்.
முழுவலி - பூரணவலி. (சிந்)
* முழுவுதல் - முத்தமிடல்.

* முழை - மலைக்குகை. (சிந்)
முள் - நுண்மை, தாற்றுக்கோல்.
* முள்காத்தல் - மவுனமாயிருத்தல். (கந்த)
* முள்குதல் - முயங்குதல்.(சிந்)
முளரி - தாமரை, நுண்மை, காடு, நெருப்பு, விறகு, கடைக்கொள்ளி.
முளவு - முட்பன்றி. (சூடா)
* முளவுமா - முட்பன்றி. (சிந்)
* முளி - வாட்டம். (பிங்)
முளிதல் - உலர்தல். (புற)
முளை - தண்டு, (பிங்) மூங்கில், மகன், தறி, சிறிது.
முற்கம் - பயறு.
முற்கரம் - பெரியதடி. (வான்மீ)
* முற்காங்கம் - பருப்புச்சாதம்.
முற்குளம் - பூராடம்.
முற்கொளுங்கால் - பூரட்டாதி.
முற்சனி - மகநாள்.
முற்றிமை - முதுக்குறைமை.
முற்றில் - சுளகு, விசாகம்.
முற்றுகை - வளைத்தல், முடிதல்.
முற்றுதல் - தங்குதல், (மது) வளைத்தல், முடித்தல், (புற) முதிர்தல்.
முற்றும் - முழுமையும்.
முற்றூட்டு - முற்றும் உண்டாகும் நிலம். (திருக்)
முறம் - சுளகு, விசாகம்.
முறி - தளிர், துண்டம்.
முறிகுளம் - உடைகுளம், பூராடம். (பிங்)
* முறிதல் - தளிர்த்தல், (சிந்) முரிதல்.
* முறுக்கம்பாகம் - பாடற்சுவைகளுள் ஒன்று; அது தேங்காய் போல முறுகிய பாகம்.(கம்ப)
முறுக்கு - கடுமை, திரிபு, வலிப்பு.
முறுகுதல் - மீறுதல், (பிங்) மிகுதல், கடுமையாதல். (சிந்)
முறுவல் - பல்லு, சிரிப்பு.
முறுவலித்தல் - சிரித்தல்.
முறை - புத்தகம், பழமை, நீதி, கிரமம், ஊழ், தரம்.
முறைமை - ஒழுங்கு.
முறையிலார் - கீழ்மக்கள்.
முன் - பழமை, முன்பு.
முன்சொல் - பழஞ்சொல்.
* முன்பன் - வலியவன். (புற)
முன்பு - முன்னிடம், வலி, பழமை.
* முன்றல் - முந்துதல்.
முன்றுளை - கொய்சகம்.
முன்றில் - முற்றம், முன்னிடம்.
முன்றோன்றல் - தமயன்.
முன்னம் - சீக்கிரிமரம், (விநா) குறிப்பு, முற்பொழுது, மனம்.
முன்னவன் - தமயன்.
* முன்னாள் - மூத்தவள். (இரா)
முன்னிலை - காரணம், முன்னிற்பது. (தொல்)
* முன்னிலைப்புறமொழி - முன்னிலையாரைப் படர்க்கையில் வைத்துப்பேசுதல்.
* முன்னிளவல் - தமயன்.(கந்த)
முன்னுதல் - அணுகுதல், (தணி) நினைத்தல், பொருந்தல், முந்துதல்.
முன்னூல் - முதனூல்.
முன்னை - மூத்தவள், பழமை.
* முன்னையாள் - மூதேவி.
முன்னோர் - பழையோர், அமைச்சர்.

முன்னோன் - விநாயகன், தமயன், கடவுள்.
முனி - பற்றற்றுக் கடவுட்டியானத்திலே நிற்கும் யோகி, (சப்த) அகத்தி, வில்லு, யானைக்கன்று.
முனிதல் - வெறுத்தல்.
* முனிமை - முனித்தன்மை.
முனிவர் - அந்தணர், தவஞ்செய்வோர்.
முனிவு - வெறுப்பு.
முனீந்திரன் - புத்தன்.
முனை - யுத்தம், பகை, பகைப்புலம், (வெண்) தவம், (சிந்) நுனி, முகம்.
* முனைத்தல் - முற்படல்.
முனைதல்-போராடல்,வெறுத்தல்
முனைந்தோர் - பகைவர்.
முனைப்பதி - பாடிவீடு.
முனைமுகம் - போர்முகம்.
முனைவன் - கடவுள், பகைவன்.
முனைவர் - இருடிகள். (சிந்)
முனைவு - வெறுப்பு, முற்படல்.

## மூ

* மூக்கறை - மூக்கற்றது.
* மூக்கன் - பாம்பு.
மூகம் - ஊமை, மௌனம்.
மூகன் - ஊமை, வறிஞன்.
மூகை - ஊமை.
* மூங்கா - கோட்டில் வாழும் விலங்குகளுள் ஒன்று. (தணி)
மூங்கை - ஊமை.
மூசுதல் - மொய்த்தல், சாதல்.
* மூட்சி - மூளுதல். (காஞ்சி)
மூட்டு - பொருத்து.
மூடத்துவம் - அறிவின்மை.
மூடதை - அறியாமை.
மூடன் - அறிவில்லான்.
மூடிகம் - பெருச்சாளி. (தணி)
* மூடை - பொதி.
மூத்தல் - முதிர்தல்.
மூத்தோர் - அறிஞர், முதியோர்.
* மூதண்டம் - அண்டமுகடு.
மூதணங்கு - காடுகிழாள்.
* மூதலித்தல் - ஒப்புவித்தல்.
மூதறிவு - பேரறிவு. (அகப்)
மூதா - தம்பலப்பூச்சி.
மூதாட்டி - முதியவள்.
மூதாதை - பாட்டன்.
மூதாளர் - முதியோர். (கந்த)
* மூதானவன் - மூத்தோன்.
மூதிரை - திருவாதிரை.
மூதுரை - பழஞ்சொல்.
மூதை - முதுகாடு. (கந்த)
* மூப்பிமார் - முதுமகளிர். (சிந்-உரை).
* மூய் - மூடி.
மூய்தல் - மூடுதல். (யாப். கா)
மூர்க்கன் - மூடன், (காஞ்) கீழ்மகன்.
மூர்ச்சனை - நெட்டுயிர்ப்பு, (சிந்) மயக்கம்.
மூர்ச்சை - மயக்கம். (சப்த)
மூர்த்தசம் - மயிர். (சப்த)
மூர்த்தம் - உடம்பு, தலை.
மூர்த்தி - தவவேடதாரி, (சிந்) சரீரம், வடிவம். (சப்த)
* மூர்த்திமான்-சரீரமுடையவன்
மூரல் - சிரிப்பு, சோறு, பல்.
* மூரலித்தல் - சிரித்தல்.
மூரி - எருமை, எருது, பெருமை, சோம்பல், வலிமை, முரண், நெரிவு. (பிங்)

மூலகந்தம் - வெட்டிவேர்.
* மூலட்டாநம் - மூலத்தாநம்.
* மூலதநம் - முதற்பொருள்.
* மூலநோய் - ஆணவமலம்.
* மூலப்பிரகிருதி - முக்குணங்களுஞ் சமமாய் நிற்கும் நிலையாகிய பிரதாநம். (சப்த)
* மூலபலம் - மூலப்படை.
மூலம் - காரணம், கிழங்கு, (பிங்) ஆதியிலுள்ளது, மூலதநம், அடி, வேர், மூலநாள். (சப்த)
மூலமலம் - ஆணவமலம்.
மூலி - மரம், வேருள்ளது.
மூலியம் - விலைப்பொருள், வேதநம்.
* மூவாய்வேல் - சூலம். (அக)
மூவிலைவேல் - சூலப்படை.
மூவுலகுணர்ந்தோன் - அருகன்.
* மூழ்குதல்-மறைதல், (பெரும்) முழுகுதல்.
* மூழ்த்தம் - முகூர்த்தம். (சிந்)
மூழி - பெட்டி, (சிந்) குளம், அகப்பை, மத்து.
* மூழிவாய் - பூவிடுபெட்டி.
மூழை - அகப்பை, (சிந்) சோறு.
* மூள்குதல் - புகுதல். (சிந்)
மூளை - மச்சை.

## மெ

மெச்சுதல் - கொண்டாடல், புகழ்தல்.
மெத்துதல் - அப்புதல், (சிந்) மிகுதல்.
மெத்தெனவு - மிருதுவுடையது.
மெத்தை - படுக்கை, சட்டை.
மெய் - அறிவு, (புறநா) பொருள், (அகப்)உடம்பு, உண்மை.
மெய்ந்நலம் - வலி. (சூடா)
மெய்ப்பாடு - உள்ளத்தினிகழ்ச்சி புறத்தார்க்குப் புலப்படுவதோராற்றான் வெளிப்படுதல்.
மெய்ப்பை - சட்டை. (மு)
மெய்புகுகருவி - கவசம். (புற)
* மெய்ம்மறத்தல் - அறிவுமயங்கல். (புற)
மெய்ம்மை - கருத்து, (திவா) உண்மை.
* மெய்யன் - மகன், முநிவன், வேதியன், சத்தியவாதி.
மெய்யுறை - சட்டை.
* மெல்குதல் - மெல்லல்.
* மெல்கோல் - பற்கொம்பு.
* மெல்லம்புலம்பு - மெல்லிய கரை.
* மெல்லம்புலம்பன் - நெய்தனிலத்தலைவன். (திருக்)
மெல்லியர் - வறியவர், அற்பகுணமுடையவர், (புற) மென்மையுடையவர், பெண்கள்.
மெல்லியல் - இளங்கொம்பு, பெண்.
மெல்லியாள் - பெண்.
மெல்லிலை - வெற்றிலை. (சிந்)
மெல்லுதல் - சுறித்தல்.
மெழுக்கு - மெழுகுதல், (சிந்) சாணி. (பெரி)
மென்பால் - மருதநிலம்.
மென்புலம் - மருதமுநெய்தலும்.
* மென்மேல் - மேலும்மேலும்.
மென்மை - மெல்லெழுத்து.

## மே

மே - மேம்பாடு. (கந்த)
மேக்கு - மேல், மேற்கு.

* மேகசீவநம் - சாதகபட்சி.
மேகநாதம் - சிறுகீரை, முகின் முழக்கம்.
மேகநாதன் - இந்திரசித்து, வருணன். (சப்த)
* மேகப்பாடல் - மேகராகக் குறிஞ்சி. (இரா)
மேகப்புள் - வானம்பாடி. (சிந்)
* மேகபுட்பம் - சலம். (சப்த)
மேகம் - நீரழிவு. (சப்த)
* மேகலகந்நிகை-நிருமதையாறு
மேகலை - மகளிர் இடையிலணியும் நூன்மாலை, சீலை, மலைப் புடைப்பு,ஓமகுண்டவேதிகை, நிருமதையாறு. (சப்த)
மேகவண்ணன் - விட்டுணு.
மேகவாகநன் - இந்திரன்.
மேகாரம் - மயில்.
மேசகம் - இருள், குதிரைமயிர், மயிற்றோகை. (சப்த)
மேடம் - ஆடு, மேடராசி.
மேடு - மேலிடம், உயரம்.
மேத்தியம் - சுத்தம், கருங்காலி.
* மேதகவு - மேம்பாடு. (சில)
மேதம் - கொலை.
மேதாவி - அறிஞன்,கிளி.(சப்த)
மேதாவியர் - அறிஞர்.
மேதி - எருமை, நெற்களம்.
மேதினி - பூமி.
மேதை - புதவாரம், அறிஞன், நரம்பு, அறிவு,நிணம். (சப்த)
மேதையர் - அறிஞர்.
மேம்பாடு - புகழ், மேன்மை.
மேய்த்தல் - உண்பித்தல்.
மேய்தல் - உண்ணல்.
மேயம் - அளக்கப்படுவது, அறிவது.
மேரு - பொன்மலை, செபமாலையின்நாயகமணி. (சப்த)
மேருவில்லி - சிவன்.
மேல் - நிலைமை, (திவா) இனி, (உரிச்) மேற்கு, ஆகாயம், மேன்மை, (பிங்) இடம், மேலிடம்.
* மேலவர் - தேவர். (இரகு)
மேலீடு - மேற்படுதல், சார்த்தல். (இரா)
மேலோர் - அறிஞர், தேவர்.
மேவலர் - பகைவர்.
* மேவு - மேம்பாடு. (இரா)
* மேவுதல் - கலத்தல், (பிங்) விரும்பல்.
மேழகம் - ஆடு, செம்மறிக்கடா.
* மேழி - கலப்பையின்மேற் கைபிடி.
மேழியர் - வேளாளர்.
மேளநம் - கலப்பு.
* மேளித்தல் - கூட்டுதல். (சித்)
மேற்கதி - மோக்கம்.
மேற்கதுவாய்-மேலேபற்றுவது.
மேற்கோள் - ஏறுதல், சனி, போர்வை.
மேற்செல்லல் - எதிர்தல், (பெரி) போர்க்குப்போதல்.
÷ மேனுத்மசை - உமாதேவி.
மேனி - சரீரம், (திவா) அழகு, நிறம்.
* மேனிகாப்பவர் - அரக்கர்.
* மேனிலை - மேல்வீடு. (சேது)
மேனை-இமயமலையரசன்மனைவி.

## மை

மை - அஞ்சநம்,குற்றம்,கருமை, மலடு, மேகம், ஆடு. (பிங்)

* மைத்தல் - ஒளிகெடுதல். (சிந்)
* மைத்திராவருணன் - அகத்தியன். இது மித்திரன் வருணன் என்னும் இருவருக்கும் மகன் எனப்படுந் தத்தித நாமம்.
மைத்திரி - நண்பு. (சப்த)
மைதானம் - வெளி.
* மைதிலி - சீதை. இது மிதிலையரசன்மகள் எனப்பொருள் படும்.
மைதுநம் - புணர்ச்சி.
மைந்து - வீரம், (புறநா) அழகு, (சில) வலி. (வெண்)
* மைந்துறவு - வலியுறுதல்.
மைநாகம் - இமயமலையின் பிள்ளையாகிய ஒருமலை.
* மைப்பு - கறுப்பு. (காஞ்)
மைம்மா - பன்றி.
* மைம்மீன் - சனி. (புற) மை - கருமை.
மைம்முகன் - முசு.
மையம் - நடு.
மையல் - மயக்கம், செருக்கு.
* மையன்மா - யானை. (இரா)
* மையாடுதல் - மையோலை பிடித்தல், (சிந்) ஓதுதல். (திவா)
* மையாத்தல் - ஒளிகெடுதல்.
* மைவிடை - ஆட்டுக்கடா.

## மொ

மொக்கு - மரக்கணு.
மொக்குள் - கொப்புளம், (பொரு) கொப்பூழ், நீர்க்குமிழி, அரும்பு.
* மொசித்தல் - தின்னல். (புற)
மொட்டம்பு - அலகில்லா அம்பு.
மொட்டு - குமிழ்ப்புவடிவு.
மொத்துதல் - அடித்தல்.
* மொத்தை - கோட்டான்.
மொந்தை - ஒருகட்பறை.
மொய் - கூட்டம், யானை, போர்க்களம், (பிங்) பகை, (சிந்) யுத்தம், வலி.
மொய்த்தல் - நெருங்கல். (புற)
மொய்ம்பு - வலி, தோள்.
* மொய்ப்பு - நெருக்கம். (இரா)
மொழி - சொல்.
மொழிமை - பழஞ்சொல்.
மொள்ளுதல் - அள்ளுதல்.

## மோ

மோக்கம் - முத்தி, விடுதல், மரணம்.
மோகநம் - மயக்குதல்.
மோகம் - மயக்கம், அறிவின்மை, துக்கம், (சப்த) வேட்கை.
மோகர் - சித்திரகாரர்.
மோகரம் - ஒலி. (கந்த)
மோகரித்தல் - ஆரவாரித்தல்.
மோகன் - மன்மதன்.
* மோகனை-மயக்கஞ்செய்பவள்.
மோகித்தல் - மயங்குதல்.
* மோசகன் - விடுவிப்பவன்.
மோசநம் - விடுதல், முத்தி, கபடம். (சப்த)
* மோசித்தல் - கழித்துவிடல்.
மோடி-காடுகிழாஅள், துர்க்கை.
மோடு-உயரம், பெருமை, வயிறு.
மோத்தல் - மணங்கவர்தல்.
மோதகம் - பிட்டு, (சிலப்) மகிழ்ச்சி.
* மோதகர்-மகிழ்ச்சியுடையவர்.
மோதம் - மகிழ்ச்சி. (சப்த)

* மோதரன் - மகோதரன்.
* மோதவம் - வாசனை. (சூடா)
மோதுதல் - அடித்தல்.
மோநம் - மௌநம்.
மோப்பு - மணத்தல்.
* மோய் - தாய். (இரா)
மோலி - முடி, தலை.
மோழல் - பன்றி, ஆண்பன்றி.
மோழை - கஞ்சி. (இரா)
* மோனி - மௌனி. (சூடா)
மோனை - முதல்.

## மௌ

* மௌகூர்த்திகன் - முகூர்த்தங் குறிப்பவன், இது முகூர்த்தம் என்பதினின்று வந்த தத்திதம்.
* மௌஞ்சி - முஞ்சிப்புல்லாலாயநாண். (சப்த)
மௌட்டியம் - மயக்கம், அறிவின்மை.
மௌண்டிதர் - முண்டிதர்.
மௌத்திகம் - முத்து.
மௌநம் - பேசாமை.
மௌநி - பேசாமலிருப்பவன்.
* மௌரசிகன் - மத்தளகாரன்.
மௌலி - முடி, தலை. (விசுவ)
மௌவல் - முல்லை,வநமல்லிகை.
* மௌற்கல்லியன் - முற்கல முனிமகன். (பார)

## ய

* யக்கதரு - ஆலமரம். (சப்த)
யக்கன் - குபேரன், இயக்கசாதியான். (சப்த)
யக்கியம் - யாகம்.
யக்கேசன் - குபேரன்.
யசநம் - யாகம். (சப்த)
யசமாநன் - யாகத்தலைவன்.
* யசு - இரண்டாம்வேதம்.
யசோதை-நந்தகோபன் மனைவி.
* யஞ்ஞபுருடன் - விட்டுணு.
* யஞ்ஞம் - யாகம்.
* யஞ்ஞசூத்திரம் - பூணூல்.
* யஞ்ஞேசுவரன் - விட்டுணு.
யட்டி - ஊன்றுகோல், முத்துமாலை, அதிமதுரம். (சப்த)
யத்திநம் - முயற்சி.
யதார்த்தம் - சத்தியம். (சப்த)
யதி - சந்நியாசி, (பார) இளைப்பு, நீக்குமிடம், அமங்கலி.
யது - சந்திரவமிசத்துள்ள யயாதியின் மூத்தகுமாரன்; இவனேகண்ணபிரான் குலத்துக்குப் பிரதாந புருடன். (சப்த)
* யதுநாதன் - கண்ணபிரான்.
யதேச்சை - இட்டப்படி. யதா - படி.
யந்திரம் - பொறி, தேர், மந்திர சக்கரம். (சப்த)
யமகம் - முன்வந்த எழுத்துக்களே பின்னும் வரும்படி பாடும் மடக்கு.
* யமதக்கினி - பரசுராமன்பிதா.
* யமதங்கி - யமதக்கினிமுனிவன். (பார)
* யமநி - இயமபுரம். (சிவ)
* யமப்பிரியம் - ஆலமரம்.
யமம் - இந்திரிய மடக்கல்.
* யமராட்டு - யமராசன். (சப்த)
யமுனை - காளிந்திநதி.
* யவநப்பேழை - யவநர்செய்த பெட்டி. (சிந்)
யவநர் - சோனகர். (நெடு)
யவம் - வாற்கோதுமை. (சப்த)

* யவனிகை - திரைச்சீலை.(சப்த)
* யவாகு - கஞ்சி. (சூடா)

யா

யா - யாமரம், (இலக்) யாவை.
யாக்கை - முயங்குதல், (சிந்) உடம்பு, கட்டு.
* யாகபத்நி - யாகஞ்செய்ப வன் மனைவி. (பார)
யாகபதி - யாகஞ்செய்பவன், இந்திரன்.
யாகம் - வேள்வி, பலி. (சப்த)
* யாங்கனம் - எவ்வாறு. (புற)
யாங்கு - எவ்விடம்.
யாங்ஙனம் - எவ்விடம், எத் தன்மை.
யாசகன் - இரப்பவன், வறிஞன்.
யாசநம் - யாசித்தல். (சப்த)
* யாஞ்ஞசேநி - திரௌபதி.
* யாட்டிகன் - தண்டாயுததாரி. யட்டி - தண்டு. இக - விகுதி.
யாண் - அழகு. (ஞானா)
யாண்டு - எவ்விடம்.
யாணர் - கம்மாளர், புதுமை, அழகு, நன்மை, (பிங்) செல்வ வருவாய், (பொரு) புதுவரு வாய். (புற)
யாத்தல் - பிணித்தல், கட்டல்.
யாத்திரை - பிரயாணம்,போதல்.
* யாதநாசரீரம் - நரகர்சரீரம்.
யாதநை - மிக்கவேதனை.
யாதவன் - யதுகுலத்திற்பிறந்த வன், கண்ணபிரான், (பார)
யாதவி - யதுகுலத்தவள், குந்தி.
* யாதனுசரீரம் - வேதனை அநுப விக்குஞ் சரீரம். (சித்)
* யாதாயாதம் - போக்குவரவு. ஆயாதம் - வரவு. (சப்த)
* யாதார்த்தியம் - சத்தியம்.
* யாது - அரக்கன், (சேது) பிசாசம்.
* யாதுதானன் - இராக்கதன்.
* யாதும் - சிறிதும். (கம்ப)
* யாப்பியம் - பெரும்பான்மை நீக்கத்தக்கதும் சிறுபான்மை நீக்கத் தகாததுமாகியநோய், (பரிமே) அதமம், இகழ்ச்சி.
யாப்பு - செய்யுடோறும்பொருள் பெறச் செய்வதோர் செயல், (தொல்) செய்யுள், கட்டு.
* யாப்புறவு - ஆராய்வு, (திவா) பொருத்தம். (சிலப்)
* யாப்புறுத்தல் - வலியுறுத்தல்.
* யாபநம் - காலம்போக்குதல், போக்கல்.
* யாமசரி - அரக்கன். (பார)
யாமம் - இரவு, சாமம். (பிங்)
* யாமளம் - ஒருவகைத்தந்திர சாஸ்திரம். (பார)
யாமளை - காளி.
யாமியம் - தெற்கு, சந்தநமரம்.
யாமினி - இராத்திரி.
யாமை - ஆமை. (புற)
* யாய் - தாய். (புற)
* யாவகம் - செம்பஞ்சு. (செந்)
* யாவண் - எவ்விடம். (புற)
யாவதும் - சிறிதும், (பொரு) எல்லாம். (சிந்)
யாவும் - எல்லாம்.
யாவையும் - எல்லாம்.
யாழ் - வீணை, அசுவதி, திருவா திரை, மிதுநராசி.
* யாழ்ப்பாணர்-யாழ்வல்லோர்.
யாழ்வல்லோர் - கந்தருவர்.
யாழோர்கூட்டம் - ஆடூஉவும்

மகடூஉவும் தம்மிற்கூடுங் கந்தருவமணம்.
யாளி - யானைபோன்ற ஒரு விலங்கு.
யாறு - நதி.
யானம் - ஊர்தி, மரக்கலம், போதல், போர்க்குப்போதல்.
* யானைத்தீ - பெரும்பசிவிளைக்கும் ஒருநோய். (சிந்)
யானைமுகன் - விநாயகன்.

## யு

யுக்குமம் - இரட்டை. (சப்த)
யுகம் - இரட்டை, யுககாலம்.
* யுகளம் - இரட்டை. (சப்த)
யுகாதி - அருகன்.
யுத்தம் - போராடல், தகுதி.
யுத்தி - நியாயம், வழக்கம், அநுமானம், பொருத்தம், உபாயம்.
* யுதம் - கூடியது. (சப்த)
யுதிட்டிரன் - தருமராசன். யுத் - போர். ஸ்திரன் - நிற்பவன்.
* யுயுதானன் - சாத்தியகி.
யுவதி - இளம் பெண்.
யுவராசன் - இளவரசன். (சப்த)

## யூ

யூகம் - கருங்குரங்கு, ஆராய்வு, படைவகுப்பு. (சப்த)
யூகை - பேன். (கந்த)
யூதநாதன் - யானைக்கூட்டத்திற்றலையானை.
யூதம் - யானைமுதலியவற்றின் கூட்டம்.
* யூதிகை - முல்லை.
யூபம் - யாகத்தூண், (புற) உடற்குறை, வெற்றித்தம்பம். (சப்த,

## யோ

* யோக்கியதை - சாமர்த்தியம்.
யோக்கியம் - தகுதி, சாமர்த்தியம்.
யோகக்காட்சி - யோகத்தாற் காணும் அறிவு. (சித்)
யோகநித்திரை - யோகவடிவான நித்திரை.
* யோகபரன் - யோகசிந்தையுடையவன். (பார)
யோகம் - மருந்து, (சில) கூடுதல், கலத்தல், உபாயம், தியானம், யுக்தி. (சப்த)
யோகரூடி - காரணவிடுகுறி. யோகம் - அவயவவாற்றல். ரூடி - சமுதாயவாற்றல்.
யோகர் - முநிவர்.
யோகி - முனிவன், மாசாத்தன், சிவன், அருகன்.
யோகினி - காளி.
யோகு - யோகம். (சிந்)
யோசனை - நான்குகூப்பீடு, (கந்) கூடுதல்.
* யோசித்தல் - சேர்த்தல்.
* யோதநம் - யுத்தம், (பார) அம்பு முதலிய படைக்கலம்.
யோநி - காரணம், பிறப்பிடம், நீர். (சப்த)

## யௌ

யௌகிகம் - பகுபதம். (சப்த)
* யௌதகம் - சீதநம். (சப்த)
* யௌவதம் - இளம்பெண்கள் கூட்டம்.
யௌவநதசை - இளமைப்பருவம். தசை - நிலை. (சப்த)
யௌவநம் - இளமை.

## வ

* வக்கிரக்கிரீவம் - ஒட்டகம். வக்கிரம் - வளைவு. கிரீவம்- கழுத்து.
* வக்கிரகம் - மழைத்தடை.
வக்கிரம் - வளைந்துபோதல்,வளைந்துபோவது,(சப்த) மீளுதல், மடங்குதல், வட்டம், (சூடா) கூன்,(ஆசிரிய)பொய், (திவா) வளைவு, கொடுமை.
வக்கிரன் - சனி, செவ்வாய்.
வக்கிராங்கம் - அன்னப்பறவை, வளைந்தசரீரம். வக்கிரம் - வளைவு. அங்கம் - சரீரம்.
* வக்கிராங்கி - கடுரோகணிப் பூண்டு.
வக்கிரித்தல் - மீளுதல்.
* வக்கு - வதங்குதல். (இரா)
* வக்குதல் - வதக்குதல்.
வகம் - வாகநம், குதிரை.
* வகித்திரம் - தோணி. (சப்த)
வகிர் - வழி, பிளவு, வார்.
வகிர்தல் - அறுத்தல், (திவா) பிளத்தல்.
* வகுணி - ஒலி. (திவா)
வகுத்தல் - கூறுபடுத்தல்.
* வகுதி - வகுப்பு. (இரா)
* வகுந்து - வழி. (சில)
வகுளம் - மகிழமரம்.(மணிமே)
வகை - குறுந்தெரு,(சிந்)இனம், கூறுபாடு, விதம், தன்மை, திறம்.
வகையுளி - மொழிசிதைந்து பிரிந்து சீராகி நிற்பது. வகை - பிரிவு. உளி - உள்ளது.
வங்கம் - கத்தரி, வெள்ளி,ஈயம், மரக்கலம். (பிங்)
வங்கர் - சண்டாளர்,வங்கதேசத்தார்.
வங்காரம் - உலோகக்கட்டி.
வங்கிசம் - வமிசம்.
வங்கியம் - இன்னிசைக்குழல், (இரா) வங்கு - துளை. இயம்- வாத்தியம்.
வங்கு-புற்று,துளை,(பெரி) குகை.
வங்கூழ் - காற்று.
* வச்சயம் - புல்வாய். (சூடா)
வச்சிரகம்பம் - வயிரத்தூண்.
* வச்சிரத்துரு - கள்ளிமரம்.
வச்சிரதந்தி - கடினமானதந்துமுடைய ஒருவகைக் கீடம்.
வச்சிரதரன் - இந்திரன். (சப்த)
வச்சிரபாணி - இந்திரன்.
* வச்சிரபாதம் - இடியேறு.
வச்சிரம் - மரவயிரம், (சிந்) வச்சிராயுதம், சதுரக்கள்ளி,வைரத்திநம், வெள்ளைத்தருப்பை.
* வச்சிரமயம் - அதிககடினம்.
வச்சிரவல்லி - பிரண்டைக் கொடி. (திவா) வச்சிரம் - கடினம். வல்லி - கொடி.
வச்சிரன் - இந்திரன், பாலகன்.
வச்சிராங்கம் - சதுரக்கள்ளி.
* வச்சிரி - இந்திரன். (சப்த)
* வச்சை - வாஞ்சை,உலோபம்.
* வச்சையன் - உலோபி.(இரா)
வசதி - நகரம், வீடு, இடம்.
* வசந்தத்துரு - மாமரம். துரு- மரம்.
வசந்ததூதம் - பாதிரிமரம், குயில். (சப்த)
வசந்தம் - நறுமணம், (திவா) இந்திரன்மாளிகை,சல்லாபம், (பிங்) இளவேனிற்பருவம்.

வசந்தன் - தென்றற்காற்று, மன்மதன்.
வசநம் - வாக்கியம், சீலை.(சப்த)
வசநித்தல் - சொல்லுதல்.
வசம் - விருப்பம்,பிரபுத்தன்மை, ஆயத்தம். (சப்த)
வசலை - பசளைக்கொடி. (தணி)
வசவி - குட்டிநி.
வசி - ஐம்பொறியடக்கினவன், சுவாதீநன், (சப்த) மழை, வசியம், (சில) பிளப்பு, (மலை) கூர்மை, வாள், தழும்பு, குற்றம், திரட்சி.
வசிகன் - சுவாதீநன். (பழம)
* வசித்தல் - வசப்படுத்தல், தங்குதல், வசனித்தல்.
வசித்துவம் - அட்டசித்திகளுள் ஒன்று;அது தன்வயமுடைமை.
வசிதை - வசித்துவம். தை - தன்மை.
வசியம்-வசப்படுத்தல், ஆயத்தம்.
* வசியன் - ஐம்பொறியடக்கினவன், செட்டி.
வசிவு - பிளப்பு. (மலை)
* வசீகரணம் - வசமாக்கல்.
* வசீகரித்தல் - விரும்பியபடியாக்கல்.
வசு - பொன், இரத்திநம், நீர், சூரியன், அக்கினி, ஒளி, கிரணம், இனிமை. (சப்த) செல்வம்.
* வசுகம் - எருக்கஞ்செடி.
* வசுகிரி - பொன்மலை. (பார) வசு - பொன். கிரி - மலை.
வசுதேவன் - யதுகுலத்துள்ள சூரன் என்பவன் மகன்; கண்ணபிரானுக்குப் பிதா. (பார)
வசுதை - பூமி. (கந்த)
வசுந்தரை - பூமி. வசு - பொன், மணி. தரா - தரித்திருப்பது.
வசுநாள் - அவிட்டம்.
வசுமதி - பூமி. மதி - உடையது.
வசை - நிணம், (சேது) குற்றம், மலட்டுப்பசு, மூளை.
வசைதல் - வளைதல்.
வஞ்சகம் - கபடம், கீழ்மை.
வஞ்சகன் - கபடி, நரி, கீழ்மகன்.
வஞ்சநம் - கபடம்.
வஞ்சநி - காளியேவல் செய்பவள்.
வஞ்சம் - வாள், பொய், கொடுமை, (பிங்) மூங்கில், (தணிகை) கபடம், குலம், வருக்கம், மராமரம்.
* வஞ்சன் - வஞ்சன். (இரா)
வஞ்சனி - மாயவள். (கந்த)
வஞ்சனை - மாயை, பொய்.(பிங்)
வஞ்சி - வஞ்சிக்கொடி, பெண், கருவூர், பகைமேற்செல்லல், வஞ்சிப்பா, மருதயாழ்த்திறம்.
வஞ்சித்தல் - கபடஞ்செய்தல்.
* வஞ்சிப்பு - வஞ்சித்தல்.
வஞ்சியர் - பெண்கள்.
வஞ்சிவேந்தன் - சேரன்.வஞ்சி - கருவூர்.
வஞ்சினம் - சபதம். (மணிமே)
வஞ்சுளம் - அசோகமரம்.
வஞ்சுளன் - கரிக்குருவி.
* வட்கர் - குற்றம். (புற)
வட்சல் - கெடுதல், (சிந்) நாணுதல், (திவா) ஒளிமழுங்கல்.
வட்கார் - பகைவர். (புற)
* வட்கிலான் - பகைவன்.

* வட்கு - வட்கல்.
வட்டணம் - பரிசை.
வட்டணை - தாளம்போடல், வட்டம்.
* வட்டப்பாறை - சந்தனக்கல்.
வட்டம் - பரிசை, (கந்த) ஆலவட்டம், (நெ) சுழல்படை, கைம்மணி, திரிகை, வர்குவலயம், நீர்ச்சால், பரிவேடம், (பிங்) சக்கரம்.
* வட்டமிடுதல் - சுற்றிவருதல்.
* வட்டாட்டு - உண்டையுருட்டல்.
* வட்டாடுதல் - உருட்டல், (தணி) சூதாடல். (இரா)
வட்டி - பலகறை, (கந்த) கடகப்பெட்டி. (புற)
வட்டிகை - பந்தயப்பொருள், (இரா) சித்திரம், கூடை, (திவா) நால்வகைச்சார்துளொன்று.
வட்டித்தல் - சுழற்றுதல், (சிங்) சத்தியஞ்செய்தல், (திவா) தாளம் போடல். (சூடா) வளைத்தல். (திருவி)
வட்டு - சூது, (இரா) சூதுவிளையாட்டிற்குரிய உண்டை, திரட்சி, கண்டசர்க்கரை.
வட்டுடை - முழந்தாள்வரைக்கும் வீரருடுக்கும் ஒருவகையுடை, (சிங்) சீலை. (பிங்)
வட்டை - வழி. (சேது)
வடகம் - மேற்போர்வை, (சிங்) தோல்.
* வடகலை - வடமொழி. (இரா)
வடகிரி - மேருமலை.
* வடகு - தோல். (கம்ப)
* வடகுணதிசை - வடகிழக்கு.
* வடதிசைத்தலைவன் - குபேரன். (திவா)
வடந்தை - வாடைக்காற்று.
வடபால் - வடக்குப்பக்கம். (கந்)
வடம் - கயிறு, ஆலமரம்.
* வடமகீத்ரம் - மேருமலை.
வடமலை - இமயம், (புற) மேரு.
வடமீன் - அருந்ததி. (பார)
வடமொழி - சமஸ்கிருதபாஷை.
* வடவனல்-வடவாமுகாக்கினி.
வடவாமுகம் - உகாந்த காலத்து அக்கினி.
* வடவாவனல் - ஊழித்தீ.
* வடவானலம் - ஊழித்தீ.
வடவை-பெண்குதிரை, ஊழித்தீ.
வடாது - வடக்கிலுள்ளது. (கந்)
* வடாரகம் - கயிறு. (பதார்த்)
* வடாரணியம்-திருவாலங்காடு.
வடி - மாம்பிஞ்சு, (கல்லா) திருத்தம், வடித்தல், (புற) கயிறு, (அமர) குதிரைவாய்க்கயிறு, கூர்மை, தெளிவு.
* வடிசம் - தூண்டில். (சப்த)
வடித்தல் - பயிற்றுதல், (சிங்) யாழின் நரம்புகளையுருவுதல், (கந்த) தகடாக்கல், (பெரும்) வசமாக்கல், (இரா) தெளிவாக்கல், கூராக்கல், நீளமாக்கல்.
வடிதல் - நீளுதல், திருந்துதல், தெளிதல்.
வடிம்பு - விளிம்பு. (இரா) நுதி.
* வடிமணி - தெளிந்தமணி.
வடிவம் - உடம்பு, உருவம்.
வடிவு - அழகு, உருவம்.
வடு - மாணவகன், பிரமசாரி, (சப்த) தழும்பு, செம்பு, குற்

றம்,வண்டு, (பிங்) இளங்காய், வசை.
வடுகன் - வைரவன், பிரமசாரி.
வடுகு - தெலுங்கு, மருதயாழ்த்திறம்.
வடுத்தல் - இளங்காய்தோன்றல்.
வண்டர் - நாழிகை அறிவிக்கும் மங்கலபாடகர், (சிந்) மிண்டர்.
வண்டல் - விளையாட்டு, (பெரு) சேறு, (இரா) நீர் ஒதுக்கிவிட்ட மண். (வாண)
வண்டன் - திண்ணியன், குறியன்.
வண்டானம் - நாரைப்பறவை.
வண்டி - பண்டி, வயிறு.
வண்டு - அம்பு, கைவளை, சங்கு, நூல், பூசநாள். (பிங்)
வண்ணகம் - அலங்கரிப்பு, மூடியற் செய்யுள்.
வண்ணம் - பாட்டின்கண் நிகழும் ஓசைவேறுபாடு, (தொல்) அழகு, குணம், (பிங்) தொய்யிற் குழம்புமுதலியன, இசைப்பாவகையுள் ஒன்று, (சில) வடிவம், (திவா) நிறம், பூசுதல், துதி, (சப்த) செயல், விதம். (திருவி)
* வண்ணித்தல் - விரித்தல், புகழ்தல். (சிந்)
வண்மை - கொடை, உண்மை, வலிமை, செல்வம், (பிங் அழகு.
வணக்கம் - தாழ்வு, வணங்கல்.
வணக்கல் - வளைத்தல், (கந்) வசப்படுத்தல். (நாலடி)
வணங்கல் - வளைதல், தாழ்தல்.
வணங்காமுடியன் - துரியோதனன்.
* வணர் - வளைவு. (சேது)
* வணர்தல் - வளைதல். (மலை)
வணிகன் - செட்டி.
வணிசம் - எருது.
* வத்தனை - செல்வம், (சிவ) வர்த்தனை என்பதன் விகாரம்.
வத்திரம் - முகம், சீலை.
* வத்தா - பேச்சில்வல்லவன்.
வத்து - திரவியம், மெய்ப்பொருள்.
வதக்கம் - வாட்டம்.
வதக்குதல் - வாட்டுதல். (கந்)
* வதநம் - முகம், சொல்லல்.
வதம் - விரதம், (சிந்) வதைத்தல். (கந்த)
* வதரம் - இலந்தைமரம். (சப்த)
வதரி - இலந்தை, பருத்தி. (சப்த)
* வதன் - கொலையாளி, சொல்பவன்.
* வதாவதன் - அதிகம்பேசுபவன். (சப்த)
வதி - சேறு, வழி.
வதிதல் - தங்குதல். (பிங்)
வதிரன் - செவிடன்.
வது - மனைவி, மருகி. (சப்த)
வதுவர் - யானைப்பாகர், குதிரைப்பாகர்.
வதுவை - விவாகம், வாசனை.
வதை - கொலை.
வந்தநம் - } வணங்குதல், துதித்தல்.
வந்தனை - }
* வந்தாரு - வந்தனைசெய்பவன்.
வந்தி - மங்கலபாடகன், (இரகு) மலடி.
வந்திகர் - மங்கலபாடகர். (இரா)
வந்தித்தல் - வந்தனைசெய்தல்.

வந்தியாடம் - புகழ்க்கவி. (சப்த)
வந்து - காற்று. (கந்த)
வந்தை - மலடி, (சேது) மலட்டுப்பசு.
* வநசத்துவம் - காட்டுப்பிராணி. (பார) வநம் - காடு. சத்துவம் - பிராணி.
* வநசந்தநம் - அகில். (சப்த)
வநசரிதர் - காட்டிற்சஞ்சரிப்பவர்.
வநபதி - பூவாதுகாய்க்குமரம்.
வபநம் - மயிர்களைதல். (அமர)
வபு - உடம்பு. (சப்த)
* வபை - நெஞ்சின்மாமிசம்.
* வம்பமாக்கள் - புதியவர்.
வம்பலர் - வழிப்போக்கர், (புற) புதியவர், அயலவர்.
* வம்பவுரை - புதுவார்த்தை.
* வம்பன் - வஞ்சகன். (திரு)
வம்பு - கச்சு, நிலையின்மை, புதுமை, (புற) வீண், பொய், (இரா) வஞ்சனை, வாசனை, (பிங்) கயிறு. (சில)
வமநம் - வாந்திசெய்தல்.
* வமீ - வாந்தி. (சப்த)
வயக்கம் - விளக்கம்.
* வயக்கல் - விளக்கல். (வாண)
வயங்குதல் - ஒளிர்தல்.
வயணம் - வகை.
* வயத்தம்பம் - வயசைநிறுத்தல். (திருவி)
வயந்தன் - மன்மதன். (கந்த)
வயந்தம் - வசந்த காலம்.
வயப்புலி - சிங்கம். (பிங்)
* வயப்புள் - கருடன். (காஞ்)
வயம் - வலி.
வயப்போத்து - சிங்கம்.
வயம் - வலிமை, நீர், பறவை.
வயமா - சிங்கம், புலி, யானை, பரி. (பிங்)
வயமான் - வயமா.
வயல் - வெளி, (பிங்) நெல்விளை நிலம்.
* வயலை - வசளைக்கொடி, (தணி)
வயவரி - புலி. (திவா)
வயவன் - வீரன், கணவன், வலியோன். (பிங்)
வயவை - வழி.
வயா - கருக்கொண்ட மகளிர்க்குப் பொருள்களின் மேற்செல்லும் வேட்கை, வேட்கைப் பெருக்கம், வருத்தம்.
* வயாநம் - பறவை.
* வயாவுதல் - விரும்பல். (மலை)
* வயிந்தவம் - அசுத்தமாயை.
வயிர் - கொம்பு வாச்சியம், கூர்மை.
* வயிர்த்தல் - வைரமாதல்.
* வயிர்ப்பு - வயிரித்தல். (இரா)
வயிரியர் - கூத்தர், பாணர்.
வயிறுவாய்த்தல் - கருத்தரித்தல்.
வயின் - முறை, (புற) வீடு, வயிறு. (திரு)
வயோதிகம் - அதிகவயது. அதிகம் - மிகுதி.
வர்க்கம் - வருக்கம்.
* வர்ச்சநம் - விடுதல், அழித்தல். (சப்த)
* வர்ச்சித்தல் - விடுதல். (சைவ)
* வர்ணம் - குங்குமம், நிறம், எழுத்து, குணம், பூச்சுத் திரவியம், துதி. (சப்த)
* வர்ணனை - வருணனை.
* வர்ணி - பிரமசாரி. (சப்த)

* வர்த்தநம் - தாபித்தல், வளர்த்தல். (சப்த)
*வர்த்தமாநம்-தற்காலநிகழ்ச்சி.
* வர்த்தனை - செல்வம். (சிவத)
* வரகாத்திரம் - யானைத்தலை.
வரணம் - மதில். (சிவத)
வரத்து - வருகை, வருவது.
வரதம் - வரங்கொடுத்தலைக் குறிப்பிக்குங்கரநியாசக் குறிப்பு.
வரதன் - வரங்கொடுப்பவன். தன் - கொடுப்பவன்.
வரதை - உமாதேவி.
வரநதி - கங்கை.
* வரப்புள் - வயல். (பிங்)
வரம் - இச்சை, யாசித்தல்,மறைத்தல், வளைத்தல், விரும்பியது, மேன்மை. (சப்த) வேண்டும் பொருள். (திருமு)
வரம்பு - அணை, எல்லை.
வரலாறு - வருதலின்வழி.
வரன் - சிரேட்டன், கணவன்.
வரன்முறை - வரலாறு.
வரன்றல் - வாருதல், (திவா) அரித்தல். (சிந்)
வராகம் - பன்றி, யுத்தம்.
வராகி - வராகி என்னும் மருந்து. (கந்த)
வராங்கம் - தலை.வரம்-உத்தமம்.
வராடி - பலகறை.
வரி - எழுத்து, வண்டல், (புற) இசை, இசைப்பாட்டு, குடியிறை, நெல்லு, நிறம், தேமல், (பிங்) இரேகை, வண்டு.
வரிக்கடை - வண்டு.வரி-ரேகை. கடை - பின்.
* வரிக்கல் - தாங்குதல். "வரிக்கலா தாக்கூற்றம்" (இரா) "விரு" என்னும் வடமொழிப் பகுதியினின்று வந்தது.
வரிச்சு - வீட்டின்மேலிடும் மரக்கீற்று. (இரா)
வரிசை - பட்டம், (பார) சிறப்பு, தரம், மேம்பாடு, (புற) ஒழுங்கு, முறை, உயர்வு.
* வரிட்டம் - சிறந்தது. (அமர)
வரித்தல் - தெரிந்து பெறல், "வேண்டுருவரிக்க" (இரா) தெரிதல், (பிங்) பூசுதல், விரும்புதல். இதுவும் "விரு" என்பதினின்றும் வந்தது.
வரிதல் - கட்டுதல், எழுதுதல்.
வரிப்புறம் - அணில். புறம் - முதுகு.
* வரியன் - சிரேட்டன். (சப்த)
வருக்கம் - ஒரு நிகரனவாகிய சாதியின் சமூகம். (சப்த)
வருக்கை - பலாமரம், (சேது)
வருகை - வரவு.
வருட்டுதல் - வற்புறுத்தல்.
* வருடப்பிரியம் - வானம்பாடி, (சப்த) வருடம் - மழை.
வருடம் - மழை, தேசங்களின் பிரிவு, மேகம், ஆண்டு. (சப்த)
வருடல் - தடவல். (இரா)
* வருடித்தல் - மழைபெய்தல்,
வருடை - மலையாடு, சரபம்.
* வருடைமான் - மலையாடு.
வருணனை - புகழ்ந்துரைத்தல், விரித்துக்கூறல்.
வருணம் - சாதி, நிறம், எழுத்து, கீர்த்தி, நீர், அழகு, கிதக்கிரமம். (சப்த)
வருணனுள் - சதயம்.
வருணித்தல் - புகழ்ந்துரைத்தல்.

வருத்தநம் - வர்த்தநம்.
* வருத்தல் - வருவித்தல். (தணி)
* வருநர் - வருவோர். (பார)
வருபுனல் - யாறு, (தணி) (திவா) புதுநீர். (தணி)
வருவாய் - வரக்கடவதாய பொருள். (வள்) வாய் - ஒரு விகுதி.
* வரூதம் - காவலான இடம்.
வரூதிநி - சேனை. (பார)
* வரேணியன் - சிரேட்டன்.
வரை - அளவு, மலை, மூங்கில், எழுத்து, விரலிறை, (பிங்) உயர்ந்தமலை, (திருக்கோ) பக்கமலை, கணு, எல்லை.
* வரைசிறகரிந்தோன் - இந்திரன். (ஆசி)
வரைதல் - நீக்குதல், கொள்ளுதல், (திவா) கூறுபடுத்தல், (புற) எல்லைப்படுத்தல், (மலை) விவாகஞ் செய்தல், எழுதுதல்.
* வரைப்பகை - இந்திரன். (கல்லா) வரை - மலை. பகை - விரோதி.
வரைப்பு - எல்லை, (புற) மதில், (பட்) குளம், (பொ) இடம்.
* வரையணை - நீர்க்கரை. (திவா)
* வரையமிர்து - மலைபடுதிரவியம். (சிந்)
வரையரமகளிர் - மலையிலிருக்குந் தேவப்பெண்கள்.
* வரையனல் - காட்டெரி. (பிங்)
வரை - மூங்கில்.
வரையாடு - மலையாடு.
வரையாதுகொடுத்தல் - எல்லைப்படுத்தலின்றிக்கொடுத்தல்.
* வரைவயிரம் - மூங்கில்வயிரம். (நீதி)
வரைவின்மாது - வேசை.
வரைவு - நீக்கல், (பிங்) எல்லை, விவாகம், கூறுபாடு, இலேக்கியம், அளவு.
* வரோதயன் - வரத்தாற் பிறந்தவன்.
வல் - சூதாடுகருவி, விரைவு, வலி.
வல்சி - உணவு, சோறு. (புற)
வல்லகி - வீணை. (சப்த)
வல்லணங்கு - காளி.
வல்லபம் - உத்தமமானகுதிரை.
* வல்லயம் - எறியீட்டி. (கந்த)
வல்லரி - பூங்கொத்து, தளிர்.
வல்லவன் - இடையன், உணவுசமைப்பவன், வீமன், (சப்த) கணவன், வன்மை யுடையவன்.
வல்லவர் - அறிஞர். (திரு)
வல்லவி - மனைவி.
வல்லாங்கு - சதுரப்பாடு, வல்லபடி. (புற)
* வல்லாடாயம் - சூதாடுமிடம்.
* வல்லாமை - இயலாமை.
வல்லார் - வல்லமையில்லாதவர், (புற) வல்லமையுள்ளவர்.
வல்லாளன் - வல்லமையுடையவன்.
வல்லான் - வல்லமையில்லாதவன், வல்லமையுள்ளவன்.
வல்லி - படர்கொடி, பூட்டும் விலங்கு, பிரிவு, பூமி, பெண்.
வல்லிகை - குதிரைக்கழுத்திலணியும் ஒருவகைவடம், (கலி) காதணி.

வல்லிசை - உச்சவிசை.
வல்லியம் - கொல்லிமலை, புலி.
வல்லுதல் - வலிமையாதல்.
வல்லுநர் - வல்லவர்.
வல்லுரம் - வயல், காடு, பூந்கொத்து. (சப்த)
வல்லுளி - பன்றி.
* வல்லூரம் - உலர்ந்தமாமிசம்.
* வல்லெனல் - வலிதாதல்.
* வல்லே - விரைவாக. (சிந்)
வல்லை - விரைவு, பெருங்காடு.
* வல்விரைவு - கடுவிரைவு.
வல்விலங்கு - யானை.
வலக்காரம் - பொய். (சூடா)
வலங்கொள்ளல் - வலப்பக்கமாகவருதல்,வெற்றியடைதல்.
வலத்தல் - சூழுதல், (சிந்) தெற்றுதல், (குறி) சொல்லல், (சிந்) கட்டல், (பொரு)
வலம் - வலப்பக்கம், இடம்,வலிமை, வெற்றி.
வலம்புரி - சங்குவடிவாக்ச் செய்த தலையாபரணம், (கந்) சிறந்தசங்கு, (திவா) சங்கு, நந்தியாவர்த்தம்.
வலயம் - பாத்தி, (சில) கைவளையல், வட்டம், வட்டமானபூமி.
வலவன் - தேர்ப்பாகன், வல்லவன்.
வலவை - இடாகினி,வல்லோன்.
வலன் - வலி, வெற்றி, வலாசுரன்.
வலாகம் - கொக்கு, மேகம்.
வலாரி - இந்திரன்.
வலாற்காரம் - அடாத்தானசெயல். (சப்த) வலாத் - அடாத்து. காரம் - செயல்.
வலி - வலமுள்ளவன், (பழ) ஒலி, வஞ்சம், (பிங்) வன்மை, திரைவு.
வலித்தல் - துணிதல், (சிந்) இழுத்தல், வளைத்தல், (இரா) சொல்லல், கொழுத்தல், (பிங்) வன்மையாதல், உடன்படல்.
* வலிப்படல் - வலிதாதல்.
வலிப்பு - இழுப்பு, வன்மை.
* வலிப்புறுத்தல்-வற்புறுத்தல்.
வலிமுகம் - குரங்கு. வலி - திரைவு.
வலிய - தானாக.
வலியன் - கரிக்குருவி, வீரன்.
* வலியாடல் - வலாற்கரித்தல்.
* வலியுறுத்தல் - வலிதாக்கல்.
வலைஞர் - வலையான் மீன்பிடிப்பவர்.
* வலைப்படுதல் - சிறைப்படல்.
* வலைவர் - வலைஞர். (கலி)
வவ்வல் - கவர்தல்.
* வவ்வு - வெளவல். (சிந்)
வழக்கம் - பரம்பரையாய் நடந்துவருவது, போக்கு.
வழக்கு - சஞ்சாரம், (கல்லா) போக்கு, (கலி) நியாயவாதம்.
வழங்குதல் - அசைத்தல், செலுத்தல், (புற) உலாவுதல்,(பொரு) கொடுத்தல், நடத்தல், சொல்லல்.
வழாநிலை - வழுவாது நிற்பது.
* வழாஅல் - வழுவுதல்.(தொல்)
வழாறு - நிறைபுனல். (பிங்)
வழி - வழிபாடு, (இரா) ஏவல், (வெண்) பழமை, ஒழுக்கம், இடம், பின், முறை, (பிங்) மரபு, நெறி, மகன்.

வழிக்கொள்ளல் - போதல்.
* வழித்தல் - மெழுகல்.(தணி)
வழித்தொண்டு - பரம்பரையான தொண்டு.
வழிநாள் - பின்வருநாள்.(தணி)
* வழிநிலை - பின்னிற்றல்.(அகப்)
வழிப்படுதல் - பிரயாணமாதல்.
வழிப்படுத்தல் - வழிகாட்டல், ஒழுங்காக்கல்.
வழிபடுதல் - வணங்குதல், பூசித்தல்.
வழிபாடு - பூசை, வணக்கம்.
* வழிமொழிதல் - வழிபாடு கூறல், (தொல்) பின்னெடுத்துக்கூறல்.
வழியுரைப்போர் - தூதர். வழி - பின்.
வழு - கேடு, தவறு, பாதகம்.
வழுக்கல் - அடித்தல், இழுக்கல், மறத்தல்.
வழுக்கு - நிணம், மறல், தவறு.
வழுத்தல்-சொல்லுதல்,துதித்தல்
வழுதலை - கத்தரி.
வழுதி - பாண்டியன்.
வழுது - பொய், வைக்கோல்.
வழுதுணை - கத்தரி.
* வழுநர் - வழுவினோர்.(இரகு)
வழுநிலை - வழுவிநிற்பது.
வழும்பு - குற்றம், (மலை) நிணம்.
* வழுவு - கேடு,(திவா)குற்றம்.
வழுவுதல் - தவறுதல், கெடுதல்.
வழுவை - யானை. (சேது)
* வழூஉ - வழுவிநிற்பது.
வழை - சுரபுன்னை. (இரா)
* வழைச்சு - இளமை. (பெரு)
வள் - பற்றிரும்பு, வார், காது, வலி, கூர்மை. (பிங்)
* வள்வு - வார். (வெண்) "வள்வார் முரசம்" (இரா)
வள்ளம் - தோணி, (இரா) சிறுவட்டில், மரக்கால்.
வள்ளல் - சிரேட்டன், கொடையாளன், பாம்பு. (இரா)
* வள்ளற்றனம் - கொடைக்குணம். (இரா) தனம் - தன்மை.
வள்ளன்மை - கொடைக்குணம்.
வள்ளி - படர்கொடி, (இரா) ஆபரணம்.
* வள்ளிகேள்வன் -முருகபிரான்.
வள்ளியோன் - வரையாதுகொடுப்பவன், சிரேட்டன்.
வள்ளுரம் - தசை. (சிங்)
வள்ளுவன் - நிமித்திகன்.
* வள்ளை - உலக்கையை முறையே ஓச்சி வீட்டுத்தலைவருடைய வளங்களை வாழ்த்தி மகளிர் பாடும்பாட்டு, (தணி) வள்ளைக்கொடி.
* வளகு - வளகென்னுஞ்செடி, (கலி) இலை.
வளப்பம் - கொழுப்பு, மாட்சிமை.
* வளப்பு - வளமை. (இரா)
வளம் - மாட்சிமை, கொழுப்பு, தகுதி,(பிங்)நன்மை, (வெண்) அழகு, (சிங்) செல்வம், வலி.
வளமை - செல்வம், மாட்சிமை.
வளமையர் - வேளாளர்.
* வளர்த்தல் - பரப்பல். (சிங்)
* வளர்த்துதல் - நித்திரையாக்கல்.
வளவல் - கலத்தல். (இரா)
வளவன் - சோழன்.

* வளவி - வீட்டிறப்பு.
வளவு - வீட்டினைச்சூழ்ந்தவிடம்.
* வளவுதல் - கலத்தல், (இரா) சூழ்தல்.
வளாகம் - தினைப்புனம், (திவா) இடம், சூழ்ந்தவிடம்.
வளார் - இளங்கொம்பு. (சித்)
வளாவுதல் - சூழ்தல், (சிந்) கலத்தல், வளைதல்.
வளி - காற்று, (தணி) சுழல் காற்று. (பிங்)
வளிசம் - தூண்டில்.
* வளிமறை - கதவு. (வெண்) வளி - காற்று. மறை - தடுப்பது.
வளை - சங்கு, சக்கரம், புற்று, கைவளை.
வளைத்தல் - வாருதல், (திவா) சூழுதல், தடுத்தல்.
வளைப்பு - காவல், (சிந்) தடை, மதில், வளைத்தல்.
வளைபோழ்நர் - சங்கறுப்பவர்.
வளையம் - தாமரைச்சுருள், (இரா) வட்டம்.
* வளைவிற்பொறி - வளைந்து தானே எய்யும் இயந்திரவில்.
வளைவு - வளைதல், வளைந்தது.
வற்கடம் - பஞ்சகாலம். (சீகா)
வற்கம் - குதிரைவாய்வடம், மரவுரி.
வற்கரி - கரகம்.
வற்கலை - மரத்தோல். (இரா)
வற்காலி - வெள்ளாடு.
வற்கு - அழகு, சந்தநம், ஆடு.
* வற்கெனல் - வலியாதல்.
வற்சம் - குழந்தை, பசுக்கன்று.
வற்சரம் - வருடம். (சேது)
வற்சலம் - இரக்கம்.
* வற்சலை - ஈன்ற பசு. (சூடா)
* வற்பம் - வன்மை. (மணிமே)
வற்பு - வலி, உறுதி. (திருவா)
* வற்புறுத்தல் - வன்மையாக்கல்.
* வற்றம் - வறுமை. (நாலடி)
வற்றல் - உலர்தல், உலர்ந்தது.
* வற்று - வன்மையுடையது.
வறத்தல் - வறுமையாதல், வற்றல்.
வறப்பு - வற்றுதல், வறுமை.
* வறம் - வறுமை, (தணி) நீரின்மை.
* வறல் - வறுமை, (கலி) உலர்தல். (இரகு)
* வறள் - வற்றல். (இரா)
* வறளி - உலர்ந்தசாணி. (இரா)
* வறன் - வறுநிலம். (கலி) பஞ்சம்.
வறிது - அற்பம், வீண், அறியாமை. (பிங்)
வறுமொழி - வீண்வார்த்தை.
வறை - பொரிக்கறி.
* வன்கட்பிணா - பாலைநிலப்பெண்.
வன்கண் - கொடுமை, அசைவின்மை. (வள்)
* வன்கண்மை - தறுகண்மை.
வன்சொல் - கடுஞ்சொல்.
* வன்பாடு - வலியது. (நான்ம)
வன்பால் - மேடு, "வன்பால தான வடபால" (கந்) வன்னிலம், குறிஞ்சி, பாலை.
வன்மை - வலிமை, பொல்லாங்கு. (வாண)
* வன்புலம் - முல்லைநிலம்.

* வன்புறை - வற்புறுத்தல்.
வன்பொறை - கடும்பாரம்.
வன்மரம் - உள்வயிரமுள்ள மரம்.
வன்மீகம் - புற்று. (சேது)
* வன்மீனம் - முதலை. (காஞ்)
வன்மீன் - முதலை. (தணி)
வன்மை - வலிமை, கருத்து, வல்லெழுத்து.
* வன்றி - பன்றி. (விநாய)
* வன்றொழில் - கொடுஞ்செயல்.
வன்னம் - எழுத்து, நிறம், அழகு, சித்திரம்.
வன்னி - நெருப்பு, கிளி, பிரமசாரி. (பிங்)
* வன்னிசகாயன் - காற்று.
வன்னியம் - காட்டிலுள்ளது.
வன்னியர் - வனவாசிகள்.
வனசம் - தாமரை.
வனசரம் - காட்டிற்பிறந்தயானை.
வனசரர் - வேடர்.
வனப்பு - கட்டழகு. (திவா)
வனம் - அழகு, சோலை, துளசி, காடு, நீர், மிகுதி, சுடுகாடு.
வனமாலி - விட்டுணு. (விநா)
வனவாசி - காட்டில்வசிப்பவன்.
வனிதை - பெண். (சேது)
வனைதல் - செய்தல், அலங்கரித்தல்

## வா.

* வாக்கரி - வாக்குவல்லவன். வாக்கு - வார்த்தை. அரி - சிங்கம்.
வாக்காள் - சரசுவதி.
வாக்கி - அறம் முதலிய பொருள்கள் நான்கினையும் விரும்பிக் கேட்குமாறு விரித்துக் கூறுவோன். (தணி)
* வாக்கியசேடம் - குறைவாக்கியம்.
வாக்கியம் - அவாய்நிலை தகுதி அண்மை என்பன அமைந்து நிற்குஞ் சொற்கூட்டம்.
வாக்கின்செல்வி - சரசுவதி.
வாக்கு - திருத்தம், (சிந்) வடிவம், (கலி) வார்த்தை.
வாக்குத்தானம் - வாக்குக்கொடுத்தல்.
* வாக்குபதம் - வாக்கியவிஷயம். (சப்த)
* வாக்குபதி - வியாழன்.
வாகம் - வாகநம். (பார)
வாகனம் - தேர்முதலிய ஊர்தி.
வாகினி - சேனை.
* வாகியம் - புறத்தது, (சைவ) புறத்திற் குரியது.
வாகீசன் - வாக்குத்தலைவன், திருநாவுக்கரசன். வாக் - சொல். ஈசன் - தலைவன்.
வாகு - அழகு, தோள். (கந்த)
வாகுசன் - அரசன்.
வாகை - வெற்றி, வாகைமாலை.
வாங்கல் - வளைத்தல், வளைவு, கொள்ளுதல், (இரா) தழுவல்.
* வாங்குமயம் - சொல்வடிவம், (சப்த) வாக் - சொல்.
வாச்சியம் - நிந்தை, சொல்லல், சொல்லாற் பெறும்பொருள்.
* வாசகதீக்கை - உபதேசதீக்கை.
வாசகம் - வசநம். (இரா)
வாசந்தி - குருக்கத்திக்கொடி, இது வசந்தகாலத்திலே மலர்வதென்னும் பொருளுடைய தத்திதம்.
* வாசநம் - சொல்லல். (சப்த)

வாசநெய் - புழுகு. (இரா)
வாசனை - அறிவு, பரிமளம், நினைவிற்குக் காரணமான பயிற்சி. (சப்த)
வாசபேயம் - பன்னிரண்டுநாள்களில் இருபத்துமூன்று ஆடுகளைக் கொன்று செய்யும் யாகம். வாசம் - நீரோடு கூடிய உணவு. பேயம் - குடிக்கப்படுவது.
வாசம் - வசிக்குமிடம், பூவின் மணம், இறகு, சீலை, வீடு.
* வாசரம் - ஞாயிறுமுதலியகிழமை.
* வாசவர் - வாசம்விற்பவர்.
வாசவன் - இந்திரன்.
* வாசவி - அருச்சுனன்.
* வாசனம் - சீலை. (பிங்)
வாசனை - வாசனை.
வாசாலம் - அதிகம்பேசல்.
வாசி - உயர்வுதாழ்வு, (சிந்) குதிரை, அம்பு, வட்டமாகக்கழிக்கும்பணம், அச்சுவினி, நாள்.
* வாசிசம் - சொல்லாற்செயுந்தவம். (திருவி)
வாசிகை - கோத்தமாலை; மாலை.
* வாசிப்பாடு - பெருமை.(இரா)
வாசுதேவன் - கண்ணபிரான், இது வசுதேவன்மகன் எனப்பொருள்படுந் தத்திதம்.
* வாசை - ஆடாதோடை.
வாஞ்சித்தல் - விரும்புதல்.
வாஞ்சை - விருப்பம். (சேது)
வாட்டம் - வாடுதல், சோர்வு.
* வாட்டு - பொரியல். (பெரு)
* வாட்டுதல் - கெடுத்தல். (சிந்)
வாடாமாலை - பொன்னரிமாலை.
* வாடாவள்ளி - வள்ளிக்கூத்து.
வாடி - வேலி, மதில். (சப்த)
வாடை - இடைச்சேரி, காற்று, வடகாற்று. (பிங்)
வாணம் - அம்பு, நெருப்பு.
வாணன் - நிருமதையாற்றங்கரையிலே சோணித புரத்திலிருந்து நாடோறும் ஆயிரஞ்சிவலிங்கம் தாபித்துப் பூசைசெய்து வந்த அசுரன்,(நைட) பாணவமிசத்துள்ள ஓரரசன்.
வாணி - சரசுவதி, வார்த்தை, கூத்து.
வாணிகம் - ஊதியம், (புற) வணிகர் தொழில்.
வாணிகன் - செட்டி, துலாராசி.
வாணிகேள்வன் - பிரமா.
வாணிச்சியம் - வணிகர்தொழில்.
வாத்தியம்-மத்தளம் முதலியன.
* வாத்து - வசித்தற்குரியபூமி.
* வாதகேது - புழுதி. (சப்த)
* வாதத்துவசம்-மேகம். (சப்த)
* வாதப்பிரமீ - விரைந்து செல்லும்மான். (சப்த)
* வாதபாடணர் - அபவாதஞ்சொல்பவர்.(சிவத)பாடணர் - சொல்வோர்.
வாதம் - மெய்யுணர்வு காரணமாகச்செய்யுந் தருக்கம், இரும்புமுதலியவைகளைப் பொன்னாக்கும் இரசவாதம், தடுத்தல், பேசுதல். (சப்த)
வாதராயணன் - வியாசமுநிவன், இது வதரவனத்திலிருப்பவன் எனப்பொருள்படுந் தத்திதம். வதர - இலந்தை. ஆயந் - ஒரு விகுதி. (கந்த)

* வாதவிநோதிகள் - வாதஞ் செய்தலாற் பொழுது கழித்து விளையாடுபவர். (சிவத)
* வாதனை - அழுத்தம், பயிற்சி. "சேர்தருமலவாதனை" (வாதவூ) வருத்தம். (கம்ப)
* வாதாபிசூதநன் - அகஸ்திய முனிவன். வாதாபி - ஓரசுரன். சூதநன்-அழித்தவன்.
* வாதாடல் - தருக்கித்தல்.
வாதாயநம் - பலகணி. வாதம் - காற்று. அயநம் - வழி. (கந்த)
* வாதாரி - ஆமணக்கு. (சப்த)
வாதி - ஏதுவும் மேற்கோளும் எடுத்துக்காட்டிப் பிறர்கொள்கையை மறுப்பவன், (தணி) நியாயசாலையிலே முறையீடு செய்பவன், வாதஞ் செய்பவன், காற்று, வாதைசெய்பவன். (சப்த)
வாதித்தல் - வருத்துதல், (பார) வாதஞ்செய்தல், இரசவாதஞ் செய்தல்.
* வாதித்திரம் - மத்தளம் முதலிய வாச்சியம். (சப்த)
வாது - விவாதம்.
வாதுவர் - யானைகுதிரைகளின் பாகர்.
வாதை - வேதனைசெய்யும்நோய், (சூடா) வதைத்தல். (சேது)
வாந்தி - சர்த்திசெய்தல்.
வாநப்பிரஸ்தம் - மனைவியைப் புத்திரரிடம் வைத்துவிட்டுக் காட்டிற்சென்று தவம்புரியும் நிலை. (சப்த)
* வாபி - குளம். (சப்த)
வாமதேவன் - சிவன்.
வாமம்-வாமசமயம், (கந்) அழகு, இடப்பக்கம், தொடை, முலை.
வாமனூரம் - புற்று. (சப்த)
வாமன் - அருகன், காமன், சிவன்.
வாமனம் - குறள், தென்றிசை யானை. (சப்த)
வாமனன் - விட்டுணு, குறளன்.
* வாமனூர் - புத்தனூர். (சிந்)
வாமி - வாமசமயத்தவன். (சித்)
வாய் - வடு, விளிம்பு, (சிந்) உண்மை, இடம், துவாரம், வாயில்.
வாய்க்கால் - மகநாள்.
வாய்த்தல் - பெறுதல், மாட்சிமை, (திவா) தப்பாமை. (சிந்)
* வாய்தல் - வாயில். (கந்த)
* வாய்திறத்தல் - உடைத்தல்.
வாய்ப்பு - பேறு, மாட்சிமை.
வாய்ப்புள் - நன்னிமித்தம், (மு) சொற் சகுனம்.
வாய்பாடு - வாயிற்பயின்றிருக்கும் வாக்கியம். (கம்ப)
வாய்பூசுதல் - வாய்கழுவல்.
வாய்மை - உண்மை.
* வாய்வது - உண்மை. (முல்)
வாய்விடல் - பேசுதல்.
* வாய்வெருவல் - தடுமாறிப் பேசல். (இரா)
வாயசம் - காகம்.
* வாயசி - பெண்காகம். (சப்த)
* வாயல் - வாயில். (இரா)
வாயவ்வியம் - வாயுதிசை. (சப்த)
வாயில் - வழி, கூட்டுவார், (சிந்) வரலாறு, (வெண்) தூது, ஐம்பொறி, (திவா) காரணம், துவாரம்.

* வாயில்விழைச்சு - வாயெச்சில்.
வாயிலோர் - தமிழ்க்கூத்தர், வாயிற் காவலர்.
வாயிற்காட்சி - ஐம்பொறிகளாற் காணுதல்.
வாயு - காற்று. வா - வீசுதல். யு - விகுதி.
வாயுசகன் - நெருப்பு. (சப்த)
* வாயுசன் - காற்றின்மைந்தன்.
வாயுமைந்தன் - அநுமன், வீமன்.
வாயுறை - கவளம், (திரும) மெய்யுபதேசம், உறை - உறுத்தல், உறப்படுவது.
வார் - கச்சு, கயிறு, நீர், நீளம்.
வார்த்தகம் - வயோதிகர் குழு.
வார்த்திகம் - விருத்தியுரை, சூத்திரத்திற் சொல்லப்படாதவைகளையுஞ் சொல்லுமுரை.
வார்த்தை - சொல்லு, நிகழ்ச்சி.
வார்தல் - நேரிதாதல், (மது) நீளுதல், ஒழுகுதல்.
வாரணம் - யானை, கோழி, சங்கு, தடை, கடல், கவசம்.
வாரணவாசி - காசிநகர். (திருவி)
வாரணசி - காசிநகர்.
வாரணை - தடை. (பிங்)
வாரம் - சொல்லொழுக்கமும் இசையொழுக்கமுமுடைய பாட்டு, தெய்வப்பாடல், (சில) துவாரம், யாகபாத்திரம், சூரியன்முதலிய ஏழுகிரகங்களும் அதிகரித்து நிற்குந் திநம், (சப்த) கடல், அன்பு, நீர்க்கரை, மலைச்சாரல், பங்கு, (பிங்) பக்கபாதம், (உரிச்சொ) தரம், பிற்பாடு.
* வாரம்படல் - பக்கபாதமுறல்.
* வாரம்வாரம் - பலமுறை.
வாரவாணம் - கவசம். (சப்த)
வாரல் - வாருதல்.
* வாராக்கதி - முத்தி. (சிங்)
* வாராகன் - விட்டுணு. இது வராக அவதாரமுடையவன் எனப் பொருள்படுந் தத்திதம்.
வாராகி - அன்னையர் எழுவருள் ஒருத்தி.
* வாராங்கனை - வேசை. (சப்த)
வாராணசி - காசி. (சப்த)
வாரானை - வருகை. வா - பகுதி. ஆனை - தொழிற்பெயர்விகுதி.
வாரி - செண்டுவெளி, யானையை அகப்படுத்துமிடம், (சிங்) வருமிடம், (இரா) விளைவு, (புற) வருவாய், (கந்த) கடல், வெள்ளம், மதிற்சுற்று, கதவு, நீர், வழி, மதில், (பிங்) மடை, (தி) யானைகட்டுஞ் சாலை. மிகுதி.
வாரிசம் - தாமரை, சங்கு
* வாரிசன் - பிரமா. (சேது)
வாரிசாதம் - தாமரை. (பார)
வாரித்தல் - தடுத்தல். (தணி)
வாரிதம் - மேகம். தம் - கொடுப்பது. (பார)
வாரிதி - கடல்.
வாருண்டம் - சரபம். (பிங்)
வாருணம் - வருணாஸ்திரம், (பார) மேற்கு, கடல். (பிங்)
வாருணி - அகஸ்தியன், மேற்கு.
வாருதல் - யாழ்நரம்புகளைக் கூடத்தழுவுதல். (பொ) "வழுவிலைந்தாங்கோன் முதலெழுவாயளவுந் தொடல் வார்தல்" (கூர்ம) கொழித்தல், வெளவுதல்.

வால் - பெருமை, வெண்மை, சுத்தம். (பிங்)
* வால்வெடித்தல் - வால்வீசல். (சிந்)
* வாலக்கிரகம் - பாலர்களைப்பிடிக்குங்கிரகம். (சேது)
* வாலகில்லர் - புலத்தியன் மகளாகிய சந்ததிக்கும் கிரது என்பவனுக்கும் பிள்ளைகளாய் விளங்கும்முனிவர். (இரகு)
வாலதி - யானையின்வால், வால்.
* வாலம் - வால். (காஞ்)
* வாலமூடிகம் - எலி. (சிவத)
வாலவாயம் - வைடூரியம்.
வாலவியசனம் - சாமரை, வால-வால். வியசனம் - விசிறி.
வாலறிவு - மெய்யறிவு.
வாலாமை - அசுத்தம்.
வாலிசன் - மூடன், குழந்தை.
* வாலிது - வெளியது. (சேது) நன்று. (இரா)
வாலுகம் - வெண்மணல். (சேது)
வாலுங்கி - சக்கரி.
வாலுவர் - பாகஞ்செய்பவர்.
வாலேயம் - கழுதை.
வாலை - பதினாறு வயசுக்குட்பட்டபெண். (கந்த)
வாவல் - வௌவால். (நாலடி)
வாவி - குளம்.
* வாவிப்புள் - அன்னம். (சிந்)
வாவுதல் - பாய்தல்.
* வாவெனல் - அழைத்தல்.
வாழ்க்கை - செல்வம், ஊர், சீவித்தல்.
வாழ்க்கைத்துணை - மனைவி.
வாழ்த்து - துதி, ஆசிர்வாதம்.
வாழ்த்துதல் - துதித்தல், ஆசிர்வதித்தல்.
வாழ்வு - செல்வம், (இரா) வாழ்தற்குரிய இடம். (பார)
வாழி - வாழ்த்து. (பார)
வாள் - ஒளி, கொலை, வாட்படை.
வாள்கைக்கொண்டாள் - துர்க்கை.
வாளம் - சக்கரவாளம், (பார) வளைவு, வாள். (சப்த)
* வாளரம் - ஒருவகை அரம்.
* வாளரி - சிங்கம். (ஆசிரி)
வாளா - தவிர்வு, சும்மா. (இரா)
* வாளாங்கு - சும்மா. (தணி)
வாளி - அம்பு, மண்டலமாயோடல்.
* வாளியம்பு - அலகம்பு. (சிந்)
வாளுழவர் - படைவீரர்.
* வாளேறு - வாள்வெட்டு.
வாற்சல்லியம் - அன்பு. (பிங்)
* வாறுதல் - அரிதல். (பொரு)
வான் - வலி, பெருமை, ஆகாயம், முகில், மழை. (பிங்)
* வான்பாடுபுள் - வானம்பாடி.
வான்மீகி - வடமொழியில் இராமாயணஞ் செய்த முனிவர். இவர் தவஞ்செய்யும்போது வன்மீகம் மூடியகாரணத்தால் வான்மீகி எனப்பட்டார்.
* வான்மை - சுத்தமுடைமை, (வெண்) வெண்மை. (சேது)
* வான்மைந்தன் - வாயு. (பார)
* வான்மொழி - ஆகாயவாணி.
வானகம் - தேவலோகம்.
வானதி - கங்கை.
வானபத்தியம் - பூவாமற் காய்க்குமரம்.

வானம் - ஆகாயம், மழை, உலர்ந்தமரம், உலர்ந்தது. (பிங்)
வானரம் - குரங்கு. (பார)
வானவரம்பன் - சேரன்.
வானவன் - தேவன், சூரியன்.
* வானுடி-தேவப்பெண். (இரா)
வான் - நாடு. இ - விகுதி.
வானி - காற்றிற் செல்லும்பட்டம், (கந்) மேற்கட்டி, பெருங்கொடி, படை. வான் - ஆகாயம். இ - விகுதி.
வானுலகு - தேவலோகம்.
வானோர் - தேவர்.
வானோர்முதுவன் - பிரமன்.

## வி

வி - பறவை, (இரகு) விலக்கு, வேறு, பிரிவு, காரணம், அற்பம், சுத்தி, அறிவு, விசேடம், நிச்சயம். (சப்த)
விக்கியாதம் - பிரசித்தம்.
விக்கியாபநம் - அறிவித்தல்.
விக்கிரகம் - யுத்தம், (இரகு) சரீரம், பிரித்தல், விசேடவறிவு. (சப்த)
விக்கிரமம் - மிக்கவீரம், சாமர்த்தியம். வி - விசேடம். கிரம் - அடிவைத்தல்.
* விக்கிரமன் - மகாவீரன்.
விக்கிரயம் - விற்றல். (சப்த)
விக்கிரயிகன் - விற்பவன்.
விக்கிராந்தம் - மகாவீரம்.
* விக்கிரியை - விகாரம்.
* விக்கிரேதா - விற்பவன்.
* விக்கிரேயம் - விற்கப்படும்பொருள்.
விக்கினம் - தீங்கு, இடையூறு.
விக்கினராசன் - விநாயகன்.
விக்குள் - விக்கல்.
* விக்கேபசத்தி - அவித்தியாசத்தி. (சப்த)
* விக்கேபம் - வீசல், செலுத்துதல். (சப்த)
விகங்கம் - பறவை, அன்னம், அம்பு, மேகம். (சப்த) காற்றூடி. (கோயி)
* விகங்கராசன்-கருடன். (சப்த)
* விகசித்தல் - மலர்தல்.
விகசிதம் - மலர்தல். (இரகு)
விகடம் - விசாலம், வேறுபாடு, (இரா) அழகு. (சப்த)
* விகர்த்தநன் - சூரியன். (பிங்)
விகலம் - குறைவு. (கந்த)
* விகலன் - குறைவுடையோன்.
விகலை - காலநுட்பம். (சூடா)
* விகற்பம் - மயக்கத்துக்குக் காரணமானகற்பனை, பலவிதகற்பனை, வேறுபாடு.
விகற்பித்தல் - வேறுபடல்.
விகற்பு - விகற்பம்.
விகாசம் - பிரகாசம்.
விகாதம் - தடை, தீங்கு.
விகாசித்தல் - மலர்தல்.
விகாரம் - வேறுபாடு, திரிதல், விளையாட்டு. (சப்த)
* விகாரி - விகாரமுடையவன்.
விகிதம் - செயல், விதி.
விகிர்தம் - அச்சம், (சைவ) வேறுபாடு.
* விகிர்தன் - சிவன். (திருவி)
விகிர்தி - விகாரம்.
* விகிரம் - புட்பொது. (பிங்)
* விகுணம் - குணமில்லது.
விகுணி - கள்ளு. (சூடா)

* விகுதி - விகாரம். (இரா)
* விங்குதல் - துளைத்தல். (சிவ)
விச்சாதரன் - வித்தையைத் தரித்தவன், விஞ்சையன்.
* விச்சாயம் - பறவைநிழல்.
விச்சிந்நம் - பிளவு.
* விச்சிரவா - புலத்தியமுனிவின்மகன்.
விச்சிராமம் - செயன்முடிவு, ஓய்வு. (சப்த)
விச்சிரும்பனம் - மலர்தல்.
விச்சு - வித்து. (திருவா)
விச்சுவகர்மன் - தேவத்தச்சன்.
விச்சுவநாள் - உத்தரட்டாதி.
விச்சுவம் - உலகம்,முழுமையும்.
* விச்சுவமூர்த்தி - அட்டமூர்த்தி. விச்சுவம் - உலகம், மூர்த்தி - வடிவுடையவன்.
* விச்சுவரூபம் - உலகரூபம்.
* விச்சுவாதிகன் - சிவபிரான், விச்சுவ - உலகம். அதிகன் - மேம்பட்டவன். (சிவத)
* விச்சுவேசன் - உலகநாதன், கடவுள். (காஞ்)
விச்சை - வித்தை, தெரு. (பிங்)
* விசக்கணன் - பண்டிதன்.
* விசங்கடம் - விசாலம். (சப்த)
விசயம் - வெற்றி, சூரியமண்டலம், சருக்கரை, விமானம்.
விசயன் - அருச்சுனன், வெற்றியாளன். (சப்த)
விசயார்த்தம் - கைலாசமலை.
விசயை - துர்க்கை. (சேது)
விசர்க்கம் - கொடுத்தல், விடுதல், நீர்வார்த்தல், பிரளயம்.
விசர்ச்சநம் - கொடுத்தல், விடுதல்.

விசளை - சட்டி. (சூடா)
விசனம் - வியசனம், சனமில்லாத இடம். (சப்த)
விசாகன் - குமாரக்கடவுள்.
விசாரணம் - ஆராய்தல்.
விசாரம் - ஆராய்வு. (சேது)
விசாலம் - அகலம்.
* விசாலை - அவந்திநகர்.
விசி - கட்டில், வார், கட்டு.
விசிகம் - அம்பு, இருப்புலக்கை.
விசிகை - கச்சு. (சூடா)
* விசிட்டசத்தை - விசேடிக்கப்பட்ட உண்மை. விசிட்ட - விசேடிக்கப்பட்ட. சத் - உள்ளது. தை - தன்மை.
விசிட்டம் - தகுதியுடையது, விசேடமுடையது.
* விசிட்டன் - தகுதியுடையவன்.
விசித்தல் - வலித்துக்கட்டல், விம்மல், (புற) கட்டுதல்.
* விசிப்பு - கட்டு. (இரா)
விசித்திரம் - ஆச்சரியம், பேரழகு.
விசும்பு - ஆகாயம், தேவுலகம்.
* விசும்பேறு - இடியேறு.
விசுவகர்மன் - விச்சுவகர்மன்.
* விசுவகுத்தன் - கடவுள், உலகினைக்காப்பவன். (சேது) குத்தன் - காப்பவன்.
விசுவசித்து - யாரையும்வென்று செய்யும் யாகம்.
* விசுவசேவியன்-சிவன்.(சிவத) விசுவ - உலகம். சேவியன் - சேவிக்கப்படுபவன்.
விசுவநாதன் - சிவன்.
விசுவநாள் - உத்தராடம்.

விசுவரூபம் - உலகெலா மாகி நிற்கும் வடிவம்.
விசுவாசம் - நம்பிக்கை.
* விசுவாசி - அரம்பாஸ்திரிகளுள் ஒருத்தி. (சேது)
* விசுவாமித்திரப்பிரியம் - தெங்கு. (சப்த)
விசுவாமித்திரன் - காதியரசன் மகன்.
விசுவேசன் - விச்சுவேசன்.
விசேடணம் - வேறுபடுத்துவது, அடைமொழி.
விசேடம் - சிறப்பு, அவயவம், உத்தமவஸ்து, திலகம். (சப்த)
விசேடித்தல் - சிறப்பித்தல்.
விசேடியம் - விசேடிக்கப்படுவது.
விசைத்தல் - துள்ளல், (புற) வேகங்கொள்ளல்.
* விஞ்சதி - இருபது.
விஞ்சுதல் - மிகுதல்.
விஞ்சை - வித்தை.
விஞ்சையர் - புலவர், வித்தியாதரர்.
* விஞ்ஞப்தி - அறிவிப்பு.(சப்த)
விஞ்ஞாதம் - அறியப்பட்டது.
விஞ்ஞானம் - விசேடமான அறிவு.
* விஞ்ஞானகலர் - மூவகை உயிர்களுள்ளே ஒருவகை உயிர்கள், இவர் ஒருமலமுடையவர்.
* விஞ்ஞாபனம் - அறிவிப்பு.
விட்கம்பம் - வித்தாரம், நித்தியயோகத்தொன்று.
* விட்டபம் - பூமி. (சப்த)
விட்டரம் - ஆசனம், தவத்தோர் பீடம். (சப்த)
* விட்டல் - விடுதல். (திருவி)
* விட்டலக்கணை - சொல்லப்பட்ட வாசகத்தின் பொருளை இயைபின்மையாற் கைவிட்டு அவ்வாசகத்திற்கு வேறுபொருள் கொள்ளுமாறு நிற்கும் குறிப்பு. (சேது)
விட்டவர் - பகைவர். (திவா)
விட்டி - கோழிக்கரணம்.
விட்டிசைத்தல் - பிரிந்திசைத்தல். விடுதல் - பிரிதல்.
விட்டில் - பராய்மரம். (சூடா)
விட்டுணு - வியாபகன், கடவுள்.
* விட்டும்விடாதலக்கணை - ஒரு வாசகத்திலே ஒருபாகத்தின் பொருளை விட்டு மற்றைப்பாகத்தின் பொருள் இயைபு பெற நிற்கும் இலக்கணை.
* விட்டேறு - வேல். (திவா)
விட்டை - மலம். (சப்த)
* விட - அகல. (பார)
* விடக்கிருமிநியாயம் - விடத்துள் வசிக்குங்கிருமிக்குவிடம் இனிதாயிருத்தல்போல ஒன்றற்குத் தீங்காயிருப்பது மற்றொன்றற்கு நன்காயிருக்கும் என்று கொள்ளும் நியாயம்.
விடக்கு - ஊன். (பெரி)
* விடகண்டன் - சிவன்.
விடகாரி - விஷவைத்தியன்.
விடங்கம் - வீதிக்கொடி, முகடு, அழகு, ஆண்மை, கொடுங்கை.
விடங்கர் - சிறுவழி.
* விடங்கன் - சுயம்புமூர்த்தி.
* விடங்கு - அழகு. (பார)
விடத்தேர் - விடத்தலென்னுமரம்.

விடதரம் - பாம்பு. (இரகு)
விடதரன் - சிவன்.
விடபம் - மரக்கொம்பு, தூண், தளிர், எருது. (சூடா)
விடபி - மரம், ஆலமரம். (சப்த)
விடம் - நீர், நஞ்சு.
* விடம்பம் - வேடம்பூணல்.
விடமம் - சமமின்மை, சங்கடம், அழுத்தமின்மை, பயம். (சப்த)
விடயம் - கண்முதலிய பொறிகளுக்குப் புலப்படும் உருவம் முதலியன, தேசம், (சப்த) பொருள், பிரயோசநம்.
* விடயி - ஐம்பொறி, அரசன்.
* விடயித்தல் - விடயத்தைப் பற்றல்.
விடர் - குகை, மலைப்பிளப்பு, (புற) நிலப்பிளப்பு, (பிங்) தூர்த்தர். (இரா)
* விடரகம் - குகை. (இரா)
விடருகம் - பூனை.
விடல் - குற்றம், (பிங்) விடுதல்.
விடலி - விவாகத்துக்குமுன் இருதுவானஸ்திரி, (சப்த) தூர்த்தமங்கை. (சேது)
விடலை - காளை.
* விடலிபதி - "மணைவி பிறர் முகம் பார்க்க வாஞ்சித்திருக்கும்" பிராமணன். (சைவ)
விடலை - படைவீரன், (ஆசிரி) திண்ணியன், தலைவன், பாலைநிலத்தலைவன், வலிமையுடையவன்.
* விடவி - மரம். (பார)
விடன் - தூர்த்தன், சோரநாயகன். (சப்த)
விடாணம் - விலங்கின்கொம்பு.
விடாணி - கொம்புடையது, யானை. (சப்த)
* விடாதம் - மயக்கம். (சப்த)
* விடாதலக்கணை - வாசகத்தின் பொருட்கும் இயைபுறநிற்கும் இலக்கணை.
விடாய் - தாகம். (இரா)
விடியல் - வெளி. (பிங்)
* விடுத்தல் - விடைகூறல்.
விடுதல் - தங்குதல், (சிந்) தவிர்தல், பிரிதல், விள்ளுதல்.
விடுதி - தங்குமிடம்.
விடுவாய்செய்தல் - அரிதல்.
விடை - கடா, (திரு) வினவுக்கெதிர்மொழி, (திவா) மிகுதி, (வெண்) எருது, விடுதல்.
விடைத்தல் - வேறுபடுத்தல், (சிந்) சீறுதல், (திவா) தாக்கல்.
* விடைப்பு - வேறுபடுத்துகை.
* விடையவன் - சிவன், வருணன்.
* விடையேறி - சிவன். (வாதவூ)
விண் - ஆகாயம், தேவுலகம்.
* விண்டல் - மூங்கில். (பிங்)
விண்டலம் - ஆகாயம்.
* விண்டாண்டு - ஊஞ்சல்.
விண்டு - விட்டுணு, காற்று, மேகம், மலை, மூங்கில். (பிங்)
* விண்ணகம் - தேவுலகம்.
விண்ணப்பம் - அறிவிப்பு.
விண்ணவன் - தேவன், அருகன்.
* விண்ணெனல் - வெளியாதல்.
விண்ணேறு - இடியேறு.
விண்ணோர் - தேவர்.
விண்மணி - சூரியன். (தணி)
விண்மீன் - நட்சத்திரம்.
விண்முழுதாளி - இந்திரன்.

வித்தகம் - சாதுரியம். (இரா)
வித்தகர் - அறிஞர், கம்மியர், தூதர், சாதுரியர்.
வித்தம் - அறிவு, (திவா) பொன்.
* வித்தரம் - அகலம், (பார) பிரசவம். (சப்த)
வித்தரித்தல் - விரித்தல்.
வித்தாரம்-அகலம், வித்தாரகவி.
வித்தியாதாநம் - கற்பித்தல், புத்தகங்கொடுத்தல். (சப்த)
வித்தியார்த்தி - மாணவகன்.
வித்தியாலயம் - கல்விபயிலிடம்.
வித்தியுத்து - மின்னல்.
வித்து - அறிஞன், (இரா) காரணம், (சிந்) அறிதல், (சிவ) விதை.
வித்துத்து - மின்னல்.
வித்துதல் - பரப்புதல், (சிந்) விதைத்தல்.
* வித்துநர் - விதைப்பவர்.
வித்துருமம் - பவளம். (திருவி)
வித்துவான் - அறிஞன். வித் - அறிதல். வான் - ஒருவிகுதி.
வித்துவேடம் - விரோதம்.
வித்தை-கல்வி, உண்மையுணர்வு.
* வித்தேசன் - குபேரன்.
விதண்டை - தன்பக்கத்தினைமாத்திரம் நிறுத்திப் பேசுங் கதை. (திருவி)
விதத்தல் - மிகுத்துக்கூறுதல்.
* விததி-விரிவு, கூட்டம்,(பார) இது விரததி என்னும் வடசொல்.
*விதந்தோதல்-மிகுத்துக்கூறல்.
விதப்பு - மிகுதி, (திவா) நடுக்கம், விவரம். (பிங்)
விதப்புக்கிளவி - மிகைமொழி.

விதம் - செயல், பிரகாரம்,வகை.
விதர்க்கம் - சந்தேகம்,ஆராய்வு.
விதரணம் - கொடை. (பார)
* விதரம் - பிளத்தல். (சப்த)
விதலம் - கீழுலகத்தொன்று.
விதலை - நடுக்கம். (கந்த)
* விதலையாப்பு - முதல் இடை கடை என்னும் மூன்றிடத்துங் கொள்ளும் பொருள் கோள். (இறைய)
விதவை - அமங்கலி, (சப்த) (வி - இன்மை. தவன் - கணவன்.) பாற்சோறு, (மலை) குழம்பு. (சிந் முத்)
விதநம் - துயர்.
விதாதா - பிரமன், அருகன்.
விதாநம் - விதி, செயல், மேற்கட்டி.
* விதாம்பரன் - சிரேட்டன்.
விதாரணம் - பிளத்தல்.
விதாரம் - பிளப்பு, யுத்தம்.
விதி - தன்மை, செயல், (திவா) பிரமன், செல்வம், கிரமம், (சப்த) ஊழ், பாக்கியம்.
விதித்தல் - சிருட்டித்தல், நியமித்தல்.
விதியுளி - முறை, (சிந்) யாகம், விவாகம். விதி-கிரமம். உளி-உள்ளது.
விதிர்த்தல் - சிதறுதல், நடுங்கல், (புற) அசைத்தல்.
விதிர்ப்பு - நடுக்கம்.
விதிர்விதிர்த்தல் - நடுநடுங்கல்.
* விதிவத்து - முறையுடையது.
* விதிவாக்கியம்-இதனைச் செய்க என்று நியமிக்கும் வாக்கியம்.
விது - சந்திரன்,குபேரன்,வாயு.

*விதுக்குறை - பாதிச்சந்திரன்.
விதுடி - கல்விகற்றபெண்.
விதுப்பு - நடுக்கம், விரைவு.
விதும்புதல் - மனமசைதல், நடுங்குதல். (சிந்)
விதுரன் - அறிஞன். (வித்-அறிதல். உர - ஒரு விகுதி.)
* விதுலன் - ஒப்பிலி. (சிவ) வி-இன்மை. துல - ஒப்பு.
* விதுவிதுப்பு - நடுக்கம்.
* விதூடகர் - கோமாளிகள்.
விதூடணம் - விசேடமான நிந்தை.
* விதூரசம் - வைடூரியம்.(சப்த)
* விதேககைவல்லியம் - தேக சம்பந்தமின்றிச் சீவன்முத்தனடையும் முத்தி. (சப்த)
* விதேகம் - தேகசம்பந்தமின்மை, மிதிலைநகரம். (சப்த)
விதேகை - மிதிலைநகரம்.
விதேசம் - வேற்றுத்தேசம்.
* விதேயன்-ஆஞ்ஞைக்கு அமைந்து நடப்பவன். (சப்த)
விதை - அறிவு, புத்தி, (சப்த) வித்து.
விதைத்தல் - பரப்புதல். (இரா)
* விதையம் - விதேகதேசம்.
* விந்தியவாசினி - வீரலக்குமி.
விந்து - சுத்தமாயை, (சிவஞா) நீர்த்துளி. (சப்த)
விந்தை - துர்க்கை. (திருவி)
* விந்நியாசம்-தாபித்தல், தொடுத்தல். (சப்த)
விநதை - தக்கன்புதல்வியருள் ஒருத்தி.
விநயம் - வணக்கம், தண்டித்தல், பயிற்றுதல். (சப்த)
விநாசநம் - அழித்தல்.
விநாசம் - அழிவு, காணப்படாமை.
விநாசன் - கொலையாளி.
விநாயகன்-கணேசன், கருடன்.
* விநாழிகை - விநாடி. (பார)
விநிமயம் - பண்டமாற்று.
விநியோகம் - பிரிதல், விடுதல், செலவுசெய்தல்.
விநோதம் - பொழுதுபோக்கி விளையாடல், (திவா)மகிழ்ச்சி.
* விப்பிரகாரம் - அபகாரம்.
* விப்பிரதிபத்தி - விரோதம், சந்தேகம், விகாரம். (சப்த)
விப்பிரமம் - மயக்கம்.
விப்பிரயோகம்-வெய்துயிர்த்திரங்கல், (பிங்) விரோதம்,பிரிவு.
* விப்பிரலாபம் - ஒருவரையொருவர்பகைத்துரையாடல்.
விப்பிரன் - பிராமணன்.(சேது)
விப்பிரியம் - அபராதம், பிரியமின்மை.(சப்த) வி - இன்மை.
விபக்கம் - துணிந்தபொருளில்லாத இடம், (தர்க்கச) பிரதிகூலமானபக்கம்.
* விபச்சித்து - பண்டிதன்.
விபஞ்சி - வீணை. (சப்த)
விபத்தி - ஆபத்து,அழிவு.(சப்த)
விபத்து - ஆபத்து, அழிவு.
விபரியாசம் - விபரீதம்.(தண்டி)
விபரீதம் - வேறுபாடு, பிரதிகூலம்.
விபலம் - பயனின்மை.
விபவம் - செல்வம், மோக்கம்.
விபாகம் - பிரிவு. பங்கு.
விபாகரன் - சூரியன். விபா - கிரணம். கரன் - செய்பவன்.

விபாவசு - சூரியன். (சப்த)
* விபாவனை - விசேடமாகச் சிந்தித்தறிதல். (சப்த)
விபாவரி - இரவு.
விபிநம் - காடு.
விபு - மகாதேவன், வியாபகன்.
விபுதர் - மிகவல்லவர், (திவா) தேவர். வி - விசேடம். புதர் - அறிஞர்.
விபுலம் - அகலம், பெருமை.
விபுலை - பூமி.
விபூதி - திருநீறு, செல்வம்.
விம்பம் - கண்ணாடி முதயலிவற்றிலே தோன்றும் வடிவம், சூரியாதி மண்டலம், கொவ்வை,(சப்த) வடிவம், சாயை.
* விம்மாத்தல் - பொருமுதல்.
விம்மிதம் - ஆச்சரியம், இது விஸ்மிதம் என்பதன்விகாரம்.
விம்முதல் - ஒலித்தல், (திவா) இரங்குதல், அழுதல், (பிங்) பொருமுதல், (சிந்) பருத்தல்.
* விம்முறவு - வருத்தம். (சிந்)
* விமதம் - விரோதமான கொள்கை. (சப்த)
* விமர்சநம் - ஆராய்தல்.
விமர்த்தநம் - தேய்த்தல், அழித்தல். (சப்த)
விமலம் - அழுக்கின்மை,
விமலன் - கடவுள்.
விமலை - பார்ப்பதி, இலக்குமி, துர்க்கை.
விமாநம் - இராசமாளிகை, தேர், ஊர்தி, தேவர்களினூர்தி, பரிமாணம், (சப்த) தேவுலகம்.
* விமுகம் - வெறுப்பு. (சப்த)
விமோசனம் - விட்டுநீங்குதல்.
வியங்கியம்-குறிப்புப்பொருள்.
வியங்கோள் - ஏவல்கொள்ளல், ஏவல்.
* வியங்கொளல் - ஏவுதல்.
வியசநம்-விசிறி, ஆபத்து, கவலை.
* வியசநி - வியசநமுடையவன்.
வியஞ்சகம்-வெளிப்படுத்துவது.
வியஞ்சநம் - கறிவர்க்கம், மெய்யெழுத்து.
* வியட்டி - வேறு வேறுபிரித்துக் கூறுவது.
வியத்தம் - வெளிப்பட்டது; அறிவு. (சப்த)
வியத்தல் - நன்குமதித்தல், புகழ்தல்.
* வியத்தாவியத்தம் - வெளிப்பட்டதும் வெளிப்படாதது மாயிருப்பது, (சைவ) அவியத்தம் - வெளிப்படாதது.
* வியதிக்கிரமம் - மாறுபாடு.
* வியத்தியாசம் - வேறுபாடு.
வியதிரேகம் - எதிர்மறை, விசேடம்.
வியந்தரம் - பசாசம்.
* வியப்பித்தல் - மேம்பாடுசெய்வித்தல். (நீதி)
வியப்பு - மேம்பாடு, (குறி) அதிசயம்.
வியபதேசம் - கபடம்.
வியபிசாரம் - தீயொழுக்கம், நெறிகடந்த மைதுநம்.
வியம் - வழி, (மலை) ஏவல், (தணி) பெருமை.
* வியமம் - பெருமை. (கலி)
* வியயம் - பொருட்செலவு.
வியர்த்தம் - பயனின்மை.
வியர்த்தல் - பொருமை முதலி

யனகாரணமாக மனம்புழுங்குதல், (தொல்) வேர்வைகொள்ளல்.
வியர்ப்பு - வேர்வை, சினக்குறிப்பு.
வியல் - அகலம், பெருமை, காடு.
வியவகாரம் - கடன்கோடல், வன்செயல் முதலியனகாரணமாக அரசநீதிக்குச் செல்லும் வழக்கு, வழக்கினை நிர்ணயித்தல், பொருத்தம். (சப்த)
* வியவகாரபதம் - வியவகாரவிடயம். பதம் - விஷயம்.
* வியவகாரியம் - இஃது இப்படியாகும் என்று நிச்சயிக்கும் வழக்குவிடயம்.
* வியவசாயம்-முயற்சி,பயிலல்.
*வியவத்தாபநம்-நிலைப்படுத்தல்.
* வியவஸ்தை - நூலிற் சொல்லிய பொருளை நிலைப்படுத்தற்கு விசேடவிஷயங்காட்டி உரைத்தல். (பெரிய)
* வியநிலை - சமமிலாநிலை.
* வியவர் - ஏவல்செய்வோர்.
வியவன் - ஏவல்செய்வோன், திண்ணியன், வழிச் செல்வோன்.
* வியவுதல் - ஏவுதல். (தணி)
வியன் - வேறுபாடு, (சில) பெருமை.
வியனுலகு - தேவலோகம்.
வியாக்கியாநம் - உரை. (சப்த)
* வியாக்கியை - உரை.
* வியாக்கிரபுரி - சிதம்பரம்.
வியாக்கிரம் - புலி.
வியாகரணம் - இலக்கணநூல்.
வியாகாதம் - தீங்கு, தடை.
வியாகுலம் - துக்கம், கலக்கம்.
வியாசம் - கபடம், பொய்வழக்கு, விஸ்தாரம். (சப்த)
வியாத்தி - வியாபித்தல். (சப்த)
வியாதன் - வேடன், (திவா) வியாசமுனி.
வியாப்பியம் - வியாபிக்கப்படுவது.
வியாபகம் - வியாபிப்பது.
* வியாபரித்தல்-தொழிற்படல்.
வியாபாதநம்-அழித்தல். (சப்த)
வியாபாரம் - தொழில், வணிகர் தொழில், முயற்சி. (சப்த)
வியாபி - எங்கும் நிறைந்தவன்.
வியாபித்தல் - கலந்து நிறைதல்.
வியாவிருத்தம் - திரும்பிவந்தது.
* வியாழதசை - வியாழநிலை.
வியாளம் - பாம்பு, துட்டயானை.
வியானன் - சரீரத்திலே வியாபித்திருக்கும் ஒருவாயு.(சப்த)
வியுற்பத்தி - சொற்பொருளுணரும் வன்மை, விசேட உற்பத்தி. (சப்த)
* வியுற்பந்நன் - பண்டிதன்.
வியூகம் - உடம்பு, தர்க்கம், கூட்டம், நிருமித்தல், சேனை.
வியோகம் - பிரிவு,சாவு.(சூடா)
* வியோகி - பிரிவுடையவன்.
* வியோமகேசன் - சிவன்.
வியோமசாரி - தேவன்,பறவை.
* வியோமதூமம் - மேகம்.
வியோமம் - ஆகாயம், நீர்.
* வியோமயானம் - தேவவிமானம். (சப்த)
விரகம்-பிரிவு,(இரா)ஆசைநோய்
விரகன் - வல்லவன், அறிஞன்.
* விரகிதன் - விடப்பட்டவன்

விரகு - உபாயம், (சிந்) அறிவு, (புற) கபடம். (இரா)
விரசுதல் - நெருங்குதல்.
* விரசை - தொழுவம். (தணி)
விரணம் - புண். (விநா)
விரத்தி - துறத்தல். (சூடா)
விரதம் - நியமம், ஓய்வு, தவம்.
விரதி - தவமுடையவன், யாகஞ் செய்பவன்.
* விரதியர் - தவத்தர். (இரா)
விரலணி - மோதிரம்.
* விரலேறு - ஒருவாச்சியம்.
விரவல் - கலத்தல்.
*விரவலர்-பகைவர், விரவு + அல்
* விரவார் - பகைவர், (இரா)
விரவுதல் - கலத்தல்.
விரவுப்பெயர் - பொதுப்பெயர்.
விரளம் - அவகாசம், நெருக்கமின்மை, இடைவெளி. (சப்த)
விராகம் - விருப்பின்மை, (கந்) வி - இன்மை. ராகம்-விருப்பு.
விராகன் - அருகன், விருப்பில்லாதவன்.
விராட்டு - பட்டத்துக்குரிய அரசன், அண்டமே தூலசரீரமாக அபிமானிக்கும் ஆதிபுருடன்.
விராத்தியன் - பிரதிலோமத் தந்தைக்கும் அநுலோமத் தாய்க்கும் பிறந்தவன்.
விராமம்-மெய்யெழுத்து, (திவா) முடிவு, ஓய்வு. (சப்த)
விராவம் - ஒலி. (சப்த)
விராவுதல் - கலத்தல். (தணி)
விரிச்சி - நன்னிமித்தம்.
விரிச்சிகன் - சூரியன். (சேது)
விரிசிகை - முப்பத்திரண்டு கோவைமணி. (திருவி)
விரிஞ்சன் - பிரமன். (சேது)
* விரிஞ்சி - பிரமன். (பார)
விரித்தல் - சொல்லல், விரிவாக்கல்.
விரிதல் - அலர்தல், ஒளிர்தல்.
விரிதுறை - பெரும்பற்றை.
விரியல் - ஒளி, விரிந்தது.
விரீகி - நெல்லு. (சிந்)
விரீடம் - வெட்கம். (சப்த)
விருக்கம் - மரம்.
விருகம் - செந்நாய்.
விருகற்பதி - வியாழன். (சப்த)
விருகோதரன் - வீமன்.
விருச்சிகம் - தேள், நண்டு.
விருச்சிகன் - சூரியன். (சேது)
* விருட்டி - மழை.
விருட்டிணி - கண்ணபிரான்.
விருத்தகங்கை-கோதாவரியாறு.
* விருத்தகந்தி - செய்யுட்பாகங் கலந்த வசநம். (சப்த)
விருத்தகிரி - பழமலே.
* விருத்தகுமாரீவரநியாயம் - விருத்தையான ஒரு கன்னி சுகாநுபவம் அரிதாயினும் நாயகனைப் பெறுதலாலே தனது கன்னிமை நீங்கிற்று என்றுமகிழ்தல் போல ஒன்றனைப் பெறுதற்கண்கே டுளதாயினும் அதனால் வரும் நன்மைகருதி மகிழும் நியாயம். வரன் - நாயகன்.
* விருத்தத்துவம் - முதுமை.
விருத்தபலம் - மிளகு. (சப்த)
விருத்தம் - பழையது, நிகழ்ந்தது, விருத்தச்செய்யுள், சரித்திரம், (சப்த) மாறுபாடு, (இரா) பழமை, வட்டம்.

* விருத்தர் - முதியோர். (இரா)
விருத்தன் - முதியோன், (இரா) விரோதி. (பார)
* விருத்தாசலம் - பழமலை.
விருத்தாந்தம் - நிகழ்ந்தமுடிவு.
விருத்தி - வளர்தல், நிலை, செயல், (சப்த) இலாபம், விருத்தியுரை, அடிமை, (சூடா) செல்வம், கூட்டம், வேறொன்றாகத் திரிதல். (சப்த)
* விருத்திப்படல் - விரிதல்.
விருத்தியர் - அடிமையாளர்.
* விருத்தியுரை - உரியசொல்லும் உரியபொருளும் விரியவுரைப்பது. (திவா)
விருத்திரன் - துவட்டாவின் புத்திரனாகிய ஓரசுரன். (சப்த)
விருத்திராரி - இந்திரன் (திவா) அரி - பகை.
* விருத்தூண் - புத்தூண.
விருத்தை - வயோதிகப்பெண்.
விருதா - வீண்.
விருது - வெற்றி, (இரா) அடையாளம்.
விருந்தம் - சுற்றம், கூட்டம்.
விருந்தர் - புதியவர்.
* விருந்தாட்டு - விருந்துசெய்தல்.
விருந்து - செய்யுள் வனப்புள் ஒன்று; அது, பலசெய்யுளும் புதிதாகத்தொடர்ந்துவரப் பாடுவது, சுற்றம், (ஆசிரிய) புதுமை.
* விருந்தை - துளசி. (சப்த)
விருபம் - வேறுபாடு, துட்டரூபம்.
விருபாக்கன் - சிவன். அக்கம் - கண்.
விரேசநம் - மலங்கழித்தல்.
விரை - பரிமளச்சாந்து, வாசனை, நறும்புகை.
விரைத்தல் - பரிமளித்தல்.
* விரையாக்கலி - ஆணை. "யாரொருவன்றன் விரையாக்கலி யினாலிரவிமதி யியங்காநிற்கும்" (திருவானை)
விரோசநன் - சூரியன், சந்திரன், பிரக்கிலாதநன்மகன். (சப்த)
* விரோதாபாசம் - முரணான பொய்.
வில் - ஒளி, மூலநாள்.
வில்லம் - பாத்தி, (சப்த) வில்வம். (திருவி)
வில்லவன் - சேரன்.
வில்லி - வில்வித்தையில் வல்லவன், (இரா) மன்மதன், வீரபத்திரன்.
* வில்லியர் - வில்வல்லார்.
வில்லுவம் - வில்வமரம். (கந்த)
* வில்லுழவர் - படைவீரர், (ஆசிரி) வில்வீரர்.
விலக்கு - விலக்குவது, விலக்கல்.
விலக்குதல் - மாற்றுதல், தவிர்த்தல், தடுத்தல்.
விலங்கரசு - சிங்கம்.
விலங்கல் - மலை, விலகுதல், வளைதல். (சிந்)
விலங்கு - குறுக்கு, (புற) தளை, மிருகம்.
விலங்குதல் - குறுக்கிட்டுக் கிடத்தல்; (கு) விலகுதல்.
விலம் - பள்ளம், (சூடா) குகை, துளை. (சப்த)
விலயம் - அழிவு. (சப்த)
விலாசம் - விளையாட்டு, (பார) பிரகாசம்.

விலாசனை - மகளிர் விளையாட்டு.
விலாசினி - பெண், வேசை.
விலாபம் - புலம்புதல், அழுதல்.
* விலாவம் - அழுகை. (தணி)
* விலாவணை - அழுகை. (சிந்)
* விலாவித்தல் - அழுதல். (சிந்)
விலாழி - குதிரைவாயுமிழ்நீர், துதிக்கையுமிழ்நீர். (இரா)
விலாளம் - பூனை.
விலேபநம் - பரிமளச்சாந்து பூசுதல். (சப்த)
விலை - விற்று வாங்கும்பொருள், (தணி) விற்றல். வில் + ஐ.
விலைஞர் - விற்பவர், (மது) செட்டிகள்.
விலைமகள் - வேசை.
விலோசநம் - கண், பார்த்தல்.
விலோதம் - பெண்மயிர், மயிர்ச்சுருள், துகிற்கொடி. (பிங்)
விலோதநம் - பெருங்கொடி.
* விலோமம் - விபரீதம்.(சப்த)
* விவகாரம் - கிரியை, (வேதா) வழக்கு, வழக்கம்.
* விவகாரிகம் - விவகாரசம்பந்தமுடையது. (வேதா)
* விவச்சுவான் - சூரியன்.
விவசாயம் - முயற்சி.
விவத்தை - நன்னிலை.
விவர்த்தநம் - பழுதையைப் பாம்பு என்று கொள்ளல் போன்ற விபரீதவுணர்வு, (வேதா) திரும்பி வருதல், வளர்த்தல்.
விவர்த்தம் - விபரீதவுணர்வு, திரும்பிவருதல், கூத்தாடல், கூட்டம். (சப்த)
விவரணம் - வியாக்கியாநம்.
விவரம் - துளை, வகை, விரிவு.
விவாதம் - வழக்காடுதல், கலகம், (சப்த) வாதுசெய்தல்.
விவிதம் - பலவகை. (இரகு)
விவேகம் - உண்மையை விரைந்தறியும் அறிவு. (சப்த)
விழவு - அலங்காரம், (பெரி) திருவிழா, மிதுனராசி.
* விழாக்கோள் - விழாக்கொள்ளல். (மணி)
விழி - கண், கண்மணி.
விழித்தல் - விளங்குதல், (சிந்) கண்திறத்தல்.
விழுக்காடு - விழுதல், (திருவி) வேறுபாடு.
விழுக்கு - நிணம்.
விழுங்கல் - நுகர்தல். (திருவி)
விழுப்பம் - சிறப்பு, நன்மை, விருப்பம்.
* விழுப்பு - நீக்கற்பாலது.(சிந்)
விழுமம் - சீர்மை, சிறப்பு, நன்மை,(திவா) துக்கம், வருத்தம்.
* விழைச்சி - புணர்ச்சி. (பிங்)
விழைச்சு - இளமை, புணர்ச்சி.
விழைதல் - விரும்புதல்.
விழைந்தோர் - கணவர், விரும்பினோர்.
விழைவு - புணர்ச்சி, (சூடா) விருப்பம்.
விள்வு - நீங்கல். (சிந்) வேறுபாடு. (வெண்)
விள்ளல் - தழுவல், வேறுபாடு, (திவா) மலர்தல், (தணி) விடுதல். (நாலடி)
* விள்ளற்பாலது - விடுதற்பாலது.
விளக்கம் - விளக்கு, (இரா) பிரகாசம், விளங்குதல்.

விளக்கு - ஒளி, சோதிநாள்.
விளம்பம் - தாமதம். (சப்த)
விளம்பல் - சொல்லல்.
விளம்பனம் - தாமதம்?
விளம்பி - கள்ளு.
* விளம்பிதம் - தாமதம்.(இரா)
விளம்புதல் - சொல்லல்.
விளர் - இளமை, நிணம், (இரா) வெண்மை, கொழுப்பு.(சூடா)
விளர்த்தல் - வெளுத்தல்.
விளர்ப்பு - வெளுப்பு.
விளரி - ஏழிசையினொன்று, நெய்தல் யாழ்த்திறம், வேட்கை.
விளவு - வேறுபடல், (வெண்) நிலப்பிளப்பு, (விள் + அ + வு) விளாமரம்.
விளவுதல் - விளாவுதல்.
விளா - விளாமரம்.
விளாகம் - போர்க்களம்.
விளாவுதல் - கலத்தல்.
விளி - இசைப்பாட்டு, ஓசை, கொக்கரிப்பு, (சிந்) அழைப்பு.
விளித்தல் - அழைத்தல், அழித்தல்.
விளிதல் - கெடுதல், சாதல்.
விளிவு - கேடு, (திருமு) சாவு,
* விளைஞர் - வேளாளர்.(ஆசிரி)
* விளைத்தல் - விளைவித்தல்.
விளைதல் - முதிர்தல், (புற) தோன்றுதல்.
விளையுள் - விளைதல், (பொரு) விளைவிப்போர், (வள்) விளைநிலம். உள் - விகுதி.
விளைவு - ஆக்கம், பழம், (வெண்) முதுமை, (பிங்) சம்பவம், விளைந்தபொருள்.
* விற்கிடை - விற்கிடக்குந்தூரம்.
* விற்கோடி - தனுக்கோடி.
* விற்படை - அம்பு, (சிந்) வில்லின்கணிருந்து செல்லும் படை என்றவாறு.
விற்பத்தி - சொற்பொருளுணரும் வன்மை, இது வியுற்பத்தி என்னும் வடசொல்.
விற்பன்னன் - பண்டிதன்.
* விறத்தல் - செறிதல். (பெரு)
விறப்பு - செறிவு, பெருக்கம், (திவா) அச்சம்.
விறல் - பெருமை, வீரம், (திவா) வெற்றி, வலி. (பிங்கல)
விறலி - பாடும் மகடூஉ.
* விறலியர் - பாடன்மகளிர். (கந்த) விறல்படப்பாடியாடும் மகளிர். (பொரு)
* விறலுதல் - வெற்றிக்கொள்ளல். (திருவி)
விறலோன் - திண்ணியன்.
* வின்மை - வில்வன்மை.
வின்னூல் - தநுர்வேதம்.
வின்னூலாளன் - துரோணசாரியன்.
* வின்னூலாளி - துரோணசாரியன். (ஆசிரி)
வினவுதல் - பிறர்சொல்லக்கேட்டல், (கந்த) விசாரித்தல்.
வினா - சொல், கேள்வி.
வினிதை - அயோத்தி. (சிந்)
வினை - செய்கை, யுத்தம், (புற) கருத்து. (சூடா)
* வினைக்கீடாதல் - வினைக்குச் சமமாதல். ஈடு - சமம்.
* வினைக்கேடு - செயலறல், (வள்) தாமதம். (கலி)
வினைஞர் - தொழில்செய்வோர், வேளாளர்.

* வினைமாற்று - முன்சொன்ன தொழிய இனி வேறொன்று என்னும் பொருண்மை; அது தொழிலுங் காலமும் இடமும் பற்றி வரும். (தொல். நச்)
* வினைமுதல் - வினைநிகழ்ச்சிக் குத் தலைமைப்பட்டு நிற்குங் கருத்தா.
வினையம் - செயல். (இரா)
* வினையிலி - கடவுள். (தணி)
வினையுரைப்போர் - தூதர்.
வினையெச்சம் - வினையின் குறை.
* வினைவர் - வினைஞர். (கலி)
* வினைவர்க்கம் - வினைவகை.
வினைவிநாசன் - கடவுள்.

வீ

வீ - மலர், ஒழிவு, நீக்கம், கேடு, பறவை. (பிங்)
வீக்கம் - பெருமை, (சிந்) மிகுதி, வீங்குதல், கட்டு.
* வீக்கு - கட்டு. (இரா)
வீக்குதல் - அழித்தல், (பார) கட்டுதல், முறுக்குதல். (சிந்)
வீகம் - மோதிரம்.
வீங்குதல் - இறுகுதல், (சிந்) பருத்தல், (இரா) மிகுதல், (புற) பொதிதல். (திவா)
வீச்சு - எறிதல், (இரா) வீசுதல்.
வீசம் - காரணம், முளை, வித்து, பதினாறிலொன்று.
* வீசவிருக்கநியாயம் - வித்து முந்தியதோ விருக்கம் முந்தியதோ என்று விசாரிப்பது போலக் காரணகாரியவிசாரணையிற் கொள்ளும் நியாயம்.
* வீசல் - கொடுத்தல். (பிங்)
வீசனம் - சிற்றாலவட்டம்,விசிறி.
வீசி - கடற்றிரை, அற்பம், சுகம்.
* வீசிதரங்கநியாயம்-கடற்றிரை ஒன்றிலிருந்து ஒன்று படிப் படியே தோன்றி வருதல் போல ஒன்றிலிருந்தொன்று தொடர்ச்சியாய் வருவதொரு நியாயம்.
* வீசிமாலி - கடல். (சப்த)
வீசுதல் - எறிதல், (திவா) சிதறுதல், (புறநா) கொடுத்தல்.
வீட்டுதல் - கொல்லல்.
* வீடணன் - விபீடணன்.
வீடல் - சாதல், விடுதல்.
* வீடாரம் - பாசறை. (வெண்)
* வீடி - தாம்பூலம். (சப்த)
வீடு - முடிவு, (பிங்) விடுதல், (கந்த) மோக்கம்.
* வீடுகாணல் - மீட்டல். (பார) வீடு - விடுதல். காணல் - செய்தல்.
* வீடுகொள்ளல் - மீட்டல்.
* வீணாதண்டு - முதுகெலும்பு.
வீணாவாதன் - யாழ்ப்பாடி.
வீணை - யாழ்.
* வீணைவல்லவர் - கந்தருவர்.
* வீத்தல் - அழித்தல். (தணி)
வீதசோகம் - அசோகமரம்.
* வீதசோகன் - அருகன். வீத - விடப்பட்ட. சோகம் - துயர்.
வீதம் - சாந்தம், விடப்பட்டது.
* வீதராகர்-ஆசையற்றவர். (சிந்) ராகம் - ஆசை.
வீதல் - நீங்குதல், (வள்) விடுதல், (திவா) சாதல், கெடுதல்.
வீதி - தெரு, நேரோடல், (பிங்) போதல், ஒளி, வரிசை. (சப்த)
வீதிகோத்திரம் - அக்கினி.

வீபற்சு - அருச்சுநன்.
வீமசேநன் - வீமன்.
வீமம் - பயங்கரம்.
வீமன் - பாண்டவருள் ஒருவன், தமயந்தியின் பிதா.
வீரகத்தி - வீரனைக்கொன்றபழி. வீரன் - உத்தமன். ஹத்தி - கொலை.
* வீரகம் - அலரி. (சப்த)
வீரச்செல்வி - துர்க்கை.
வீரசேநன் - நளனுடைய பிதா.
வீரசொர்க்கம் - போரிலிறக்கும் வீரர்புகும் பதவி.
வீரட்டானம்-கூத்தின்விகற்பம்.
* வீரணம் - இலாமிச்சை.
* வீரதரன் - அதிவீரன்.(கோயி) தர - மிகுதியைக்காட்டும் ஒரு விகுதி.
* வீரதரு - மருதமரம். (சப்த)
* வீரதை - வீரம். (இரா)
* வீரபட்டிகை - வீரம் புலப்படு மாறு நெற்றியிலணியும் பட்டம். (கந்த)
* வீரபத்திரம் - அசுவமேதக் குதிரை. (சப்த) பத்திரம் - சிரேட்டம்.
* வீரபாணக்குழாய் - வீரபாணம் வைத்திருக்குங் குழல். (சிந். நச்) இதனை "மதுத்தண்டு" என்பர் தமிழ்நூலார்.
* வீரபாணம் - யுத்தச்சிரமம் நீங்கும் பொருட்டு யுத்த வீரர் குடிக்கும் மது முதலியன. (அமர) பாநம் - குடிப்பது நிலைமொழியின் ரகரம் நோக்கிப் பாநம் என்புழி நகரம் ணகரமானது வடமொழிவிதி.

வீரம் - தக்கசெயல்களிலே உளதாகும் மனத்துணிவு,(தண்டி) வலி, (திவா) வேகம், மிளகு.
வீரன் - படைத்தலைவன், வீரமுடையவன்.
* வீராகம் - வீரயாகம்.
வீராசநம் - வலத்தொடையில் இடக்காற் பரட்டினைச் சேர்த்து வீற்றிருத்தல். (சைவ)
வீரி - காளி, துர்க்கை, வீர + இ.
வீரியம் - பராக்கிரமம், பெலம், இந்திரியம், ஒளி. (சப்த)
* வீரியன்-இந்திரியமுடையவன், (கந்) வீரமுடையவன். (இரா)
வீரை - கடல், துன்பம், (பிங்) நெல்லி, முந்திரிகை, வாழை.
வீவு - கேடு, (குறி) சாவு.
வீழ் - விழுது. (பெரு)
வீழ்க்கை - சோதிநாள்.
வீழ்தல் - திரளுதல், (சிந்) விரும்புதல்.
வீழ்வு - விழுதல், விரும்பல்.
* வீழி - விழுதிப்பழம். (சீகா)
* வீளை-சத்தம்,(வெண்)சீழ்க்கை.
* வீற்றிருக்கை - அரசிருக்கை.
* வீற்றிருத்தல் - இறுமாந்திருத்தல், (வெண்) வருத்தமின்றியிருத்தல், (சிந்) மேன்மையோடிருத்தல்,வேறுயிருத்தல்.
வீற்று - வேறுபாடு, (பிங்) தனி.
* வீற்றுவீற்று - வேறு வேறு.
வீறு-வேறொன்றற்கில்லா அழகு, நல்வினை, (சிந்) வேறு, (புற) பொலிவு, (திவா) வெற்றி, (குறி) பெருமை.
வீறுதல் - பொலிதல், (இரா) சீறுதல். (கலி) மேலாதல்.

## வெ

வெஃகுதல் - விரும்புதல்.
வெஃகாமை - விரும்பாமை.
வெகு - மூன்று முதலிய பல தொகையோடு கூடியது.
வெகுட்சி - வெகுளுதல்.
* வெகுமஞ்சரி - துளசி. (சப்த) வெகு - பல. மஞ்சரி - தளிர்.
வெகுமாநம் - சம்மாநம்.
* வெகுமூலம் - முருங்கை. (சப்த) மூலம் - வேர்.
வெகுள்வு - சினம்.
* வெகுளம் - பலவற்றொடு கூடியது.
வெகுளி - சினம்.
வெகுளுதல் - சினத்தல்.
* வெங்கண் - கொடுமை. (இரா)
* வெங்கதிர் - சூரியன்.
வெங்களம் - போர்க்களம்.
* வெங்கார்-சுடுடையகருநிலம்.
வெங்காரம் - வெம்மையுடைய ஒருவகை உப்பு. (நீதிநெ) காரம் - உப்பு.
* வெச்சென்றிடல் - வெம்மையாதல். (சிந்)
வெச்செனல் - வெம்மையாதல்.
வெச்செனவு - வெம்மை. (சேது)
* வெஞ்சமம் - யுத்தம்.
* வெஞ்சுடர் - சூரியன். (பிங்)
வெட்டல் - கொல்லல், (திவா) தறித்தல்.
* வெட்டிமை - கொடுமை.
* வெட்டியர் - கொடியவர்.
வெட்டெனவு - கடுமை.
வெடி - பகை, முழக்கம், (சிந்) கேடு, ஒலி, (மது) நறும்புகை, அச்சம், வெளி, (பிங்) இடி, கள்ளு.
வெடித்தல் - முழங்குதல், பகைத்தல், (சிந்) வீசுதல், "வால் வெடித்து" (தணிகை)
* வெடிபடல் - சிதறல். (புறநா)
வெண்கதிர் - சந்திரன்.
* வெண்கமலை - சரசுவதி.
வெண்கொல் - வெள்ளி.
வெண்சலசமுற்றுள் - சரசுவதி.
வெண்டலை - தலையோடு. (பிங்)
வெண்டாது - வெள்ளி.
* வெண்டாமரைமகள் - சரசுவதி. (பிங்)
வெண்டுறை - வெண்பாவினங்களில் ஒன்று.
வெண்டேர் - கானல். (சிந்)
* வெண்ணைஞ்சு - நிணம். (சிந்)
வெண்பலி - சாம்பல். (சேது)
வெண்பொன் - வெள்ளி.
வெண்மலை - கைலாசம்.
* வெண்மீன் - வெள்ளி. (பட்)
வெண்மை - இளமை, (வெண்) புல்லறிவு, (திவா) களங்கமின்மை.
* வெதரிவனம் - வதரிகாச்சிரமம். (சேது)
வெதிர் - செவிடு, மூங்கில்.
வெதிர்ப்பு - நடுக்கம், கலக்கம்.
வெதிரேகம் - எதிர்மறை, விசேடம், இது வியதிரேகம் என்னும் வடசொல்.
வெதுப்பு - வெம்மை.
வெதுப்புதல்-வெம்மையாக்கல்.
வெதும்பல் - வாடல். (இரா)
* வெந் - முதுகு. (இரா)

வெந்தை - பிட்டு. (கந்த)
வெப்பம் - விருப்பம், (சூடா) வெம்மை.
* வெப்பர் - வெம்மை. (சிந்) அர் - போலி.
வெப்பு - நெருப்பு, (இரா) வெம்மை, சுரநோய்.
* வெப்புள் - வெம்மை. (புறநா)
வெம்பல் - பெருங்கோபம், வெதும்பல்.
வெம்புதல் - கொதித்தல், ஒலித்தல், விரும்புதல், (சிந்) வெதும்பல்.
வெம்மை - விருப்பம், விரைவு, (திவா) வெப்பம், கடுமை.
வெய்து - விரைவு, (சிந்) வெம்மையுடையது. வெம்மை + து.
வெய்துயிர்த்தல் - வெம்மைபோக்குதல், (மது) சுடுமூச்சுவிடுதல். உயிர்த்தல் - விடுதல்.
* வெய்துறுத்தல்-வெய்தாக்கல்.
வெய்துறல் - துன்பம், (திவா) அச்சக்குறிப்பு.
வெய்தெனல் - விரைதல். (திவா)
வெய்யது - வெம்மையுடையது.
வெய்யவன் - சூரியன், கொடியவன்.
* வெய்யன் - விரும்பினவன், (கலி) கொடியவன். வெம்மை + அன்.
வெய்யோன் - விரும்புவோன், (புற) சூரியன். வெம்மை + ஆன்.
வெயில் - ஒளி, சூரியன், சூரியகிரணம். வெம்மை + இல்.
* வெரிந் - முதுகு. (இரா)
வெருக்கொளல் - அஞ்சுதல்.
வெருகம் - விலங்கின் வாலின் கீழ்.
வெருகு - காட்டுப்பூனை, (சிந்) பூனை.
வெருட்சி - மயக்கம், அச்சம்.
வெருட்டி-வெருட்டியபொருள்.
வெருட்டு - அச்சம், மயக்கம்.
வெருட்டுதல் - மயக்குதல், அச்சுறுத்தல். (இரா)
வெருவரல் - அஞ்சுதல். (புறநா)
* வெருவிடல் - அஞ்சுதல். வெருவு + இடல்.
வெருவு - அச்சம்.
வெருவுதல் - அஞ்சுதல்.
வெருள் - மயக்கம். (தணி)
* வெருளி - செல்வச்செருக்கு, (சிந்) மயக்கமுடையது.
வெருளுதல் - மயங்குதல்.
* வெரூஉ - அச்சம். (பொரு)
வெல்லுமா - புலி.
* வெலவு - வெல்லல். (இரா) வெல் + அ + வு.
* வெலீஇயோன் - வெல்வித்தோன். (புறநா)
* வெவ்வியர் - கொடியவர். (இரா) வெம்மை + வி + அர்.
* வெவ்வுரை - கடுஞ்சொல்.
வெவ்வேறு - வேறுவேறு.
வெள்கல் - குலைதல், (பிங்) வெண்மையாதல், (திருவி) நாணுதல்.
* வெள்வரைப்பு - விடியல். (திருவாய்) வரைப்பு - எல்லை.
* வெள்ளடை - வெற்றிலை.
வெள்ளணி - பிரசவநாளிலேமங்கலம் பெற அணியும் வெண்பட்டு முதலிய அலங்காரம்.
* வெள்ளணிநாள் - பிறந்தநாள்.

வெள்ளம் - கடல், கடற்றிரை, நீர்ப்பெருக்கு, ஈரம், (பிங்) வெள்ளம் என்னும் எண், நீர்.

வெள்ளறிவு - புல்லறிவு.

வெள்ளி - சுக்கிரன், வெண்பொன் "வெள்ளிமிகப்புணர்க்கின்மேலையுரு நின்றிடுமோ" (கந்த) வெண்மை, (இரா) விண்மீன்.

வெள்ளிடை - வெளியிடம். (சிந்)

* வெள்ளிப்போழ் - வெள்ளித்தகடு.

* வெள்ளியங்கிரி - கைலாசமலை.

வெள்ளில் - சவப்பாடை, விளாமரம்.

வெள்ளிலை - வெற்றிலை. (சேது)

* வெள்ளிவள்ளி - வெள்ளிவளை.

வெள்ளெலும்பு - தசைகழிந்த எலும்பு.

வெள்ளெனல் - வெளியாதல்.

வெள்ளேடு - எழுத்தில்லாத ஏடு.

வெள்ளை - பலதேவன், (சேது) சங்கு, வெண்பா, (பிங்) புல்லறிவாளன், (பரி) வெண்ணிறப்பொருள், (திவா) (வெண்மைஐ - ஒருபெயர்விகுதி.) வெள்ளாடு, புல்லறிவு, கள்ளு, எருது.

வெள்ளைக்கிழத்தி - சரசுவதி.

* வெள்ளைக்கோட்டி - புல்லறிவாளர்சபை. (சில) கோட்டி - சபை.

* வெள்ளைகள் - புல்லறிவாளர்.

வெள்ளைமெய்யாள் - சரசுவதி.

* வெள்ளையானைவாகனன் - ஐயனார். (பிங்)

வெள்ளைவாரணன் - இந்திரன், மாசாத்தன். (கந்த) வாரணம் - யானை.

* வெளி - வெண்பா, (யாப்) ஆகாயம், வெளியிடம். வெண்மை + இ.

வெளித்தல் - வெளிப்படல், பயனிலதாதல்.

* வெளிப்படல் - தோன்றல்.

வெளிப்படை - வெளியாதலுடையது. படு + ஐ.

வெளிப்பாடு - வெளிப்படுதல்.

வெளியார் - புல்லறிவாளர். (வள்) வெண்மை + இ.

வெளியிடல் - வெளிப்படுத்தல்.

வெளில் - அணில், தயிர்கடை மத்து, யானைத்தூண். (பிங்)

வெளிவிருத்தம் - வெண்பாவுக்கு இனமாயுள்ள விருத்தம்.

* வெளிற்றுடல் - இரத்தம் நீங்கியபிணம்.

வெளிற்றுரை - பயனில்லாவுரை.

வெளிறல் - வெண்மையாதல்.

வெளிறு - இளமை, வெண்மை, (புறநா) குற்றம், (சிந்) பயனின்மை, (இரா) புல்லறிவு, (திவா) அலிமரம், உள்வீடின்மை.

வெளுத்தல் - வெண்மையாதல்.

வெளுப்பு - வெண்மை.

வெற்பன் - மலையில்வசிப்பவன்.

வெற்பு - மலை.

வெற்றம் - வெற்றி.

* வெற்றி - துர்க்கை, (சூடா) வெற்றம் - வெற்றி. இ - ஒரு பெயர் விகுதி. இது விசயை என்னும் வடமொழிக்குச் சமபதம்.

* வெற்றிமயில் - துர்க்கை.
* வெற்றிலைக்கா - வெற்றிலைத் தோட்சுமை.
* வெற்றிலைப்படலிகை - வெற்றிலைத்தட்டு. (சிந்)
* வெற்றுரை - பயனிலாதவார்த்தை.
* வெற்றுடம்பு - சாரமில்லாவுடம்பு (நீதிநெ) வெறுமை + உடம்பு.
வெற்றெனத்தொடுத்தல் - அறிஞர்க்கு மகிழ்வை விளைவிக்குங் குறிப்பு மொழி சிறிதுமில்லாமல் வெளிறுபடுமாறு சொற்களைத் தொடுத்தல்.
* வெற்றெனல் - வெறுமையாதல், வெளிறுதல்.
வெறி - தெய்வம் ஆவேசித்தாடுங் கூத்து, அச்சம், மணம், கலக்கம், நோய், ஆடு, வட்டம், பிசாசம், (பிங்) ஒழுங்கு, (மது) கள்ளு, மருட்சி. (கலி)
வெறித்தல் - மயங்குதல், அஞ்சுதல், (கலி) மணத்தல், (இரா) வெறியாடல், கலங்குதல்.
* வெறிகோள் - வெறியாடல்.
வெறிது - வீண், (வாணன்) வெறுமையுடையது.
வெறிப்பு - கலக்கம், மயக்கம், (இரா) மணம், அச்சம்.
வெறியாடல் - சன்னதமாடல்.
வெறுக்கை - மிகுதி, (வள்) பொன், செல்வம். (பிங்)
வெறுத்தல் - மிகுதல், (புற) செறிதல், (தணி) சினத்தல், நெருங்குதல்.
வெறுநுகம் - சோதிநாள்.
வெறுப்பு - செறிவு, (மலை) துன்பம், (சூடா) சினம், நெருக்கம், வேண்டாமை.
வெறுமை - ஒன்றுமின்மை, வீண்.
* வெறுவிது - பயனிலது.
வென் - வென்றி. (புற)
* வென்காணல் - வெல்லுதல்.
* வென்றவர் - முநிவர்.
வென்றி - வெற்றி.
* வெற்றிமாலை - வெற்றியொழுங்கு. (சிந்)
வென்றோன் - அருகன், புலன்களை வென்றவன்.
வென்னிடுதல் - தோல்வி. வென் - முதுகு. இடுதல் - கொடுத்தல்.

## வே

வேக்காடு - வேகுதல். காடு - தொழிற்பெயர்விகுதி.
வேகடம் - இரத்தினங்களைச்சுத்திசெய்தல். (இரா)
வேகம் - நஞ்சு, (சிந்) பிரவாகம், விரைவு, (சப்த) கடுமை.
வேகவதி - வைகைநதி. (திவா) வேகம் - விரைவு. வதி - உடையது.
வேகி - வேகமுடையவன்.
வேங்கை - புலி, பொன். (பிங்)
வேசகம் - யானைவாலின்நுதி.
வேசநம் - நகரம், (பிங்)
வேசம் - வேடம், (இரா) பிரவேசம்.
வேசரி - கழுதை, கோவேறுகழுதை. (சேது)
* வேசறவு - துக்கம். (காஞ்)
* வேசாக்கள் - வேசைகள்.
வேட்கை - விருப்பம், பொருட்பற்று.

* வேட்கோ - குயவன். (புற)
வேட்கோவன் - குயவன்.
வேட்டகம் - தலைப்பாகை. (வேஷ்ட - சுற்றுதல்.) விவாகஞ் செய்தவீடு.
வேட்டம் - கொலை, (பிங்) விருப்பம், (புற) வேட்டை.
வேட்டல் - யாகஞ்செய்தல், விவாகஞ்செய்தல், விரும்புதல், வேள் + தல்.
வேட்டார் - வேட்டல்செய்தவர்.
வேட்டிதம் - சூழ்வு, தடை.
வேட்டுவன் - வேடன், வேட்டைக்காரன், (புற) வேட்டைவாளிக் குளவி.
* வேட்டுவித்தியர் - வேட்டுவப் பெண்கள். (தொல்)
வேட்டை - தேடிச்சென்று மிருகங்களைக் குவைகுவையாக வதைத்தல், கொலை. (இரா)
வேட்டோன்-கணவன், நண்பன்.
வேட்பித்தல் - யாகஞ்செய்வித்தல்.
வேட்பு - வேட்டல்.
வேடதாரி - கபடமாய் வேடந் தரிப்பவன்.
வேடம் - உடைமுதலியவற்றால் வேறு வடிவாவது.
வேடர் - வேடமுடையவர். "இவ் வேடர் கொத்துக்கு." (கந்)
வேடிக்கை - அலங்கரிப்பு. வேட + இ + கை.
வேடு - வேட்டுவச்சாதி, (சிந்) வேட்டுவன். (நீதி)
வேடுவன் - வேட்டுவன்.
வேடை - வெப்பம், (இரா) விருப்பம். (கந்த)
வேண்டல் - விருப்பம். (நைட)
வேண்டலர் - பகைவர். (சேது)
வேண்டாமை - வெறுப்பு. (வள்)
வேண்டார்-பகைவர், விரும்பார்.
* வேண்டுகோள் - விரும்புதல், பிரார்த்தனை.
வேண்டுதல் - விரும்புதல், யாசித்தல்.
* வேண்டுநர் - விரும்புவோர்.
* வேண்டும் - விரும்புதற் பொருளில் வரும் ஒரு வியங்கோள். (சிந். நச்) இதனை இலக்கணக் கொத்து நூலார் தேற்றப்பொருள் படுவதொரு தொழிற்பெயர் என்ப.
* வேண்டூட்டு-வேண்டும் உணவு. (சிந்) வேண்டு + ஊட்டு.
வேணகை - மதில். (பிங்)
* வேணவா - வேட்கையாலுண்டாகிய அவா. வேட்கை + அவா. வேட்கை - பொருட்பற்று. அவா - பொருளைப் பெறவிரும்புகை. (தொல்) நிகண்டுநூலார் "ஆசைப்பெருக்கம்" என்பர்.
வேணி - கங்கை யமுனை சரசுவதி என்னும் நதி மூன்றுங் கூடுமிடமாகிய பிரயாகை, நீர்ப்பெருக்கு, (சப்த) சடை, நதி, ஆகாயம், (பிங்) வெளி.
வேணு - உட்டுளை, மூங்கில், வேய்ங்குழல், வில்லு.
வேணுகம் - தோட்டி. (சப்த)
* வேணுசம்-மூங்கிலரிசி. (சப்த) சம் - பிறந்தது.
* வேத்தர் - அறிந்தோர். (இரா) வித் - அறிதல்.

* வேத்தவை - அரசசபை.(இரா) வேந்து + அவை.
* வேத்தன் - அறிந்தவன்.
* வேத்தா - அறிந்தவன். (சப்த)
* வேத்தியம் - அறிதற்பாலது.
* வேத்திரகரன் - நந்திதேவன்.
வேத்திரதரன் - வாயிற்காவலன்.
வேத்திரம் - பிரம்பு.
வேத்திராசநம் - பிரப்பம்பாய்.
வேதக்கொடியோன் - துரோணாசாரி.
வேதகம்-வேறுபடுத்தல்,(திருவி) கர்ப்பூரம், (சப்த) நற்சீலை.
வேதகாரர் - பிரம்பினாலே தொழில் செய்வோர், வேதஸ் - பிரம்பு. காரர் - செய்வோர்.
* வேதகீதன் - சிவன். (சேது)
வேதசம் - பிரம்பு.
* வேதசிரசு - உபநிடதம்.
வேதஞ்ஞன் - வேதமறிந்தவன்.
வேதண்டம் - கைலாசமலை, மலை.
வேதநம் - கூலி, அறிவு, விவாகம், துளைத்தல். (சப்த)
வேதநாயகன் - கடவுள்.
வேதநீயம் - அறிதற்பாலது.
வேதபாரகர் - வேதம் முற்றும் அறிந்தவர், விப்பிரர். (இரா) பாரகர் - கரையிற்சென்றவர்.
* வேதபுரி - வேதாரணியம்.
வேதம் - அறிவு, சாத்திர வறிவு, வேதசாத்திரம்.
வேதமாதா - காயத்திரி.
* வேதமுதல்வன் - சிவன்.(பிங்)
வேதமுதல்வி - சரசுவதி, பார்ப்பதி.
* வேதமுடி - வேதாந்தம்.
* வேதவநம் - வேதாரணியம் வநம் - காடு.
வேதவாணர் - பிராமணர்.(பார)
வேதவித்தகன் - வேதம்வல்லவன்.
* வேதவித்து - வேதம் அறிந்தவன், (இரா) விட்டுணு.(சப்த) வித்து - அறிந்தவன்.
வேதன் - பிரமன்.
வேதனை-உலைவு,(திவா)வருத்தம்.
வேதா - பிரமன்.
வேதாங்கம் - வேதத்துக்கு உறுப்பாயுள்ள நூல்; சிக்கை முதலியன.
* வேதாடவி - வேதாரணியம். அடவி - காடு.
* வேதாதி - பிரணவம். ஆதி - முதல். (சப்த)
வேதாந்தம் - வேதத்தின்முடிவு.
வேதாந்தி - வேதாந்தம் அறிந்தவன்.
வேதாப்பியாசம் - வேதங்களைக் கற்று நன்கு பயிலுதல்.
வேதாளம் - பூதம், பிசாசம்.
வேதாளி - காளி.
* வேதாளிகர் - மங்கலபாடகர். (ஆசிரிய) விதாள - பலவிதாளம். இக - விகுதி.
வேதாளிபாடுவார் - துயிலெடைநிலை பாடுவார். (சில. உரை)
வேதி - ஓமஞ்செய்யுமிடம், பண்டிதன், கேட்டைநாள்.
வேதிகை-வேறுபடுத்தல், (இரா) திண்ணை,வேள்விக்குறடு,கேடகம். (பிங்)
வேதித்தல் - அறிதல், வேறுபடுத்தல். (இரா)

வேதிதம் - துளைக்கப்பட்டது.
வேதியர் - பிராமணர்.
வேதியன் - பிரமன். (சேது)
வேதினம் - ஈர்வாள். (பிங்)
வேது - வெம்மை. (இரா)
வேதை - துளைத்தல்.
வேந்தன் - அரசன், சந்திரன், வியாழன், சூரியன், இந்திரன்.
வேந்து - அரசன், அரசியல்.
வேபதம் - நடுக்கம். (சப்த)
* வேபாக்கு - வேகுதல். (வள்)
வேம்பின்றுரோன் - பாண்டியன்.
* வேம்புறல் - உலர்தல். (சிந்)
வேமம் - நெய்வார்தறி. (ஞானு)
* வேமானியர் - விமானத்திற் செல்வோர். (சிந்)
வேய் - ஒற்று, மூங்கில், உட்டுளை.
வேய்ங்குழல் - மூங்கில்.
வேய்தல் - மூடுதல், (வெண்) வேயப்படும்வீடு, சூடுதல்.
* வேய்வை - குற்றம். (புற)
வேயர் - மறைந்து சென்று காரியம் அறிவோர்.
வேயாமாடம் - சாந்துமுதலியன இட்டு மூடியவீடு. (சில)
வேயுள் - போர்வை, (வெண்) வேயப்படும் வீடு. உள் - ஒரு பெயர்விகுதி.
வேர் - வேர்ப்பு, (பொரு) அடி.
வேர்த்தல் - கோபித்தல், வெயர்த்தல்.
வேர்ப்பு - கோபம், வேர்வு.
வேரம் - செய்குன்று, (கந்த) சரீரம், கர்ப்பூரம். (சப்த) செற்றம். (சூடா)
வேரல் - மூங்கில்.
வேரி - வெட்டிவேர், (சிந்) கள்ளு, வாசனை.
* வேரித்தண்டு - வீரபாணக்குழாய். வேரி - மது. தண்டு - குழாய். (திருவா)
வேல் - ஆயுதம், வேலாயுதம்.
* வேலருவி - வேலொழுங்கு.
வேலன் - படிமத்தான், (கந்த) முருகக்கடவுள். வேல்+அன். படிமத்தானும் முருகன். வேலை வைத்திருப்பவன்.
வேலாவலயம் - கடல், பூமி.
வேலி - ஊர், மதில், காவல், நிலம், வயல். (பிங்)
வேலிறை - முருகக்கடவுள்.
* வேலுடைக்கடவுள் - முருகக்கடவுள். (திருவா)
* வேலேறு - வேல்தைத்தபுண்.
வேலை - கடல், கடற்கரை, பொழுது, தொழில், காலம். (பிங்)
வேலையிற்றுயின்றோன் - விட்டுணு.
வேவு - வேகுதல்.
* வேவை - வெந்தது, (பொரு)
வேழம் - விளாம்பழத்துக்குவருவதொருநோய், (சிந்) யானை, கரும்பு, மூங்கில், இசை, சிறுமூங்கில். (பிங்)
வேழம்பர் - கம்பக்கூத்தர்.
வேள் - முருகன், மன்மதன், மண்.
வேள்வி - கொடை, விவாகம், (திவா) பூசை, யாகம், மகநாள். (பிங்)
வேள்விநாயகன் - இந்திரன்.
* வேள்வு - வேள்வி. (சிந்) வு - விகுதி.
* வேளா - கேளா. (பிங்)

வேளாண்மை - உபகாரம், (புறநா) கொடை, உண்மை, (பிங்) உழவுத்தொழில்.
* வேளாமை - விரும்பாமை, வேள்விசெய்யாமை.
வேளாளர் - சூத்திரர், கொடையாளர்.
* வேற்றிசைப்பா - சருக்கமுடிவில் வேறுபாடான இசைபெற்று வரும்பா. (திவா)
* வேற்றுப்புலம் - பகையிடம்.
வேற்றுப்பொருள் - வேறுபொருள்.
வேற்றுமை - வேறுபாடு.
* வேற்றுவர் - அயலார். (சிங்)
வேறல் - வெல்லல். வெல்+தல்.
வேறிடம் - தனியிடம்.
வேறு - தனி, (சிங்) பிற.
* வேறுசெய்தல் - பிரித்தல்.
வேறுபாடு - பேதம்.
வேனல் - வேனில், (சில) வெம்மை. (சிங்) வெம்மை + அல். முன்னின்றமெய் திரிந்தது.
வேனில் - கோடை, கானல், அழகு, பொலிவு. (பிங்) வெம்மை + இல்.
வேனிலாளி - மன்மதன்.
* வேனிலான் - மன்மதன்.

## வை

வை - கூர்மை, வைக்கோல்.
வைக்குதல் - வைத்தல். (சிங்)
வைகடிகன் - இரத்தினங்களைச் சுத்திசெய்பவன். இது வேகடம் என்பதினின்று வந்த தத்திதாந்த பதம். இக - ஒரு தத்தித விகுதி.
* வைகர்த்தநி - யமுனையாறு. இதற்கு மூலம் விகர்த்தநன். இ - ஒருதத்தித விகுதி.
வைகரி - நால்வகை வாக்குக்களுள் ஒன்று; அது வெளிப்பட்ட எழுத்துக்களை யுடையதாய்ப் பொருள்பயந்து செவிக்குப் புலப்படும் வாக்கு. (சித்)
வைகல் - வைகுமிடம். "அடிசில் வைகலாயிரம்" (சிங்) (அல் - பெயர் விகுதி) துயிறல், (சில) கழிதல், நாள், புலரி, தங்குதல். (திவா)
வைகல்லியம் - குறைவு.
வைகற்பிகம் - விகற்பமுடையது. (சப்த)
வைகறை - விடியற்காலம்.
வைகு - நாள். அறை-அறுவது.
வைகாசி - விசாகநாள்.
* வைகாரிகம் - இராசத குணத்தான் மேம்பட்டு வாக்குமுதலிய கர்மேந்திரியங்கள் தோன்றற்குக் காரணமாயுள்ள அகங்காரம். (சித்) விகாரம் + இக.
வைகுண்ணியம் - குணமின்மை. இதற்கு மூலம் விகுணன். யம் - விகுதி.
வைகுதல் - கழிதல், தங்குதல்.
வைகைத்துறைவன் - பாண்டியன்.
* வைகைநாடன் - பாண்டியன்.
வைச்சிரவணன் - குபேரன். இது விச்சிரவா என்பதினின்று வந்த தத்திதம்.
வைசயந்தம் - இந்திரன்மாளிகை, கொடி.

வையர் - செட்டிகள்.
* வைசேடிகம் - கணாதர் செய்த தர்க்கம்.
வைணவம் - விட்டுணுசமயம்.
வைணவி - அன்னையர் எழுவருள் ஒருத்தி. இது வைஷ்ணவி என்னும் வடசொல். இதற்கு மூலம் விஷ்ணு.
வைணுகம் - யானைத்தோட்டி. வேணு + க.
* வைத்தல் - கூர்த்தல். (சிங்)
வைத்தியன் - பண்டிதன், மருத்துவன். வித்தியா என்பதின் நின்று வந்த தத்திதம்.
வைதநிகன் - வேதநமுடையவன். வேதநம் - கூலி. இக - விகுதி.
வைதர்ப்பி - விதர்ப்பராசன் புதல்வி. (இரகு)
வைதரணி - இயமபுரவாயிலிலுள்ள ஒரு நதி. இது விதரணத்தாற் கடச்கற்பாலது எனப் பொருள்படும். விதரணம் - தானம். (சப்த)
* வைதரணிநதியோன் - இயமன். (பிங்)
வைதருப்பம் - விதர்ப்பநாட்டுக் கவிஞராற் கொள்ளப்பட்ட நெறி.
வைதல் - வஞ்சித்தல், (வெண்) சபித்தல், இகழ்தல்.
வைதாலிகர் - மங்கலத்துதியினாலே துயிலெடை பாடி அரசர்களைப் புகழ்வோர். (இரகு)
வைதிகம் - வேதமார்க்கம்.
வைதிகன் - வேதம் வல்லவன், வேத நெறியில் நடப்பவன். இக - விகுதி.

வைதூரியம் - வைடூரியம்.
வைதேகி - சீதாபிராட்டி. (இரா) இது விதேகன் என்பது மூலமாக வந்த தத்திதம். இ - விகுதி. விதேகன் - மிதிலையரசன்.
வைநதேயன் - கருடன். (பார) இது விநதையின் மகன் எனப் பொருள்படுந்தத்திதம். ஏயன் - ஒரு தத்தித விகுதி.
வைநாசிகம் - விநாசத்துக்குரியது.
* வைப்பிராசம் - குபேரன் சோலை. (சப்த)
வைப்பு - ஊர், இடம், (புற) வைக்கப்பட்ட நிதி. (திருவி)
வைபரித்தியம் - விபரீதவுணர்வு.
வைபவம் - செல்வம், விசேடமாகத் தோன்றியது.
* வைபாடிகன் - விகற்பவார்த்தை கூறுவோன். விபாடை - விகற்பவார்த்தை.
* வைமாநிகன் - விமானத்திற் செல்பவன்.
* வையகத்தேவர் - வேதியர்.
வையகம் - பூமி.
வையகம் - சகடம், சிவிகை, (திவா) பூமி, தேர், எருது, ஊர்தி. (பிங்)
வையாகரணன் - வியாகரண பண்டிதன்.
வையாளிவீதி - குதிரை நடாத்தும் வீதி.
வையை - வைகைநதி.
* வையைக்கிழவன் - பாண்டியன்.
வைரசுத்தி - பகைதீர்த்தல்.

* வைரநிர்யாதநம் - பகைக்கு மாறு செய்தல்.

வைரம் - நீண்டவிரோதம். இது வேர என்பதினின்று வந்த தத்திதம்.

வைராக்கியம் - விடயங்களிற் பற்றின்மை. இது விராகம்என்பதினின்று வந்த தத்திதம். விராகம் - விருப்பின்மை.

* வைராகம் - வைராக்கியம். (வேதா) வைராக்யம் என்புழி யகரமெய் கெட்டு நின்றது.

வைரி - பகைவன். (சேது)

வைரியர் - கூத்தர். (மது)

* வைரூப்பியம் - விகாரவடிவம்.

வைரோசநன் - மாவலியசுரன். இது விரோசநன் புதல்வன் எனப் பொருள்படுந் தத்திதம்.

* வைரோசநி - மாவலியசுரன் மகன். (சப்த)

வைலுவம் - வில்வக்காய்.

வைவச்சுவதன் - இயமன், சனி, மனு. (சப்த) விவச்சுவன் மகன் எனப் பொருள் படுந் தத்திதம்.

வைவாகிகம் - விவாக்கோலம்.

வைவு - சாபம், (இரா) இகழ்வு.

வைனன் - கருடன். (சூடா)

## வௌ

வௌவல் - வாருதல், கவர்தல்.

வௌவால் - ஒருபறவை.

இலக்கியச்சொல்லகராதி முற்றுப்பெற்றது.

# விகுதிவிளக்கம்.

இவ்வகராதியில் வருந் தமிழ்ச்சொற்களுள்ளும் வடசொற்களுள்ளும் பல சொற்கள் காரணச்சொற்களாயிருத்தலால் அவற்றின் காரணங்களும் பகுதிகளும் அறியும்பொருட்டுச் சில சில தமிழ்மொழி விகுதிகளும், சில சில வடமொழி விகுதிகளும் இங்கே எழுதப்படுகின்றன.

அ - பெரிய, சிறிய.
அண் - அவண், இவண், உவண், அங்கண், தறுகண், புன்கண்.
அம் - நோக்கம், எஃகம், சுருக்கம், விளக்கம், அச்சம்.
அர் - பெரியர், சிறியர், பொங்கர், முடுக்கர்.
அல் - அணியல், திரையல், ஓங்கல், நெடுங்கழுத்தல், அரியல்.
அள் - நெடியள், குறியள்.
அன் - சிறியன், பெரியன்.
ஆ - வாளா, கேளா, இன்னு, இனியா.
ஆங்கு - பட்டாங்கு, வாளாங்கு, தக்காங்கு, ஒல்லாங்கு.
ஆய் - எழுவாய், வருவாய், கழுவாய், கதுவாய்.
ஆர் - நல்லார், தீயார்.
ஆள் - கொடியாள், கரியாள்.
ஆன் - சிறியான், அரியான்.
இ - வில்லி, பிறைசூடி.
இர் - புத்தேளிர், மகளிர், உயிர், பயிர்.
இல் - புக்கில், வட்டில், எச்சில், தூண்டில்.
உ - கொளு, ஆறு.
உள் - உறையுள், செய்யுள், வேயுள், பையுள்.
ஐ - கடை, சுமை, நடை, வலை, இறை, உறை.
கு - தீங்கு, வழுக்கு, படங்கு.
கை - இருக்கை, வாழ்க்கை.
சி - ஆட்சி, இறைஞ்சி, வலைச்சி.
சில் - குருசில், இடுஞ்சில்.
சு - வரிச்சு, தவிசு, விழைச்சு.
சை - பொலிசை, வரிசை, செச்சை, பரிசை.
டு - அமடு, கசடு, சுமடு.
ணி - புறணி, அகணி, காணி.
தி - தாடி, அவிடி, தொகுதி.
து - கூத்து, வந்து, இருந்து.
தை - சீத்தை, இழுதை, அலந்தை.
நர் - போழ்நர், வாழ்நர்.
னி - அயினி, வாணி.
பம் - ஒட்பம், நுட்பம்.
பு - வைப்பு, பாம்பு, கப்பு.
மை - உரிமை, பெருமை.
லை - மழலை, மதலை.
வி - கேள்வி, கல்வி, வேள்வி.
வு - சார்வு, சேர்வு, வேள்வு.
வை - நடவை, உரிவை.
றி - நன்றி, தென்றி, துற்றி.

று - வெளிறு, களிறு.

---

## வடமொழி விகுதி.

அ - புதன், கரன், நாயன்.
அகன் - காரகன், நாயகன்.
அங்க - தரங்கம், மிருதங்கம்.
அட - கமடம், இராமடம்.
அந் - யுவந், இராசந்.
அநீய - தபநீயம், பாநீயம்.
அம் - காரம், சாரம்.
அல - சகலம், முசலம்.
ஆந - பவமாநன், யசமாநன்.
ஆல - சண்டாலன், புலாலம்.
ஆலு - தயாலு, நித்திராலு.
இ - சரி, பதி, அநந்தசாயி.
இத் - சரித், தடித்.
இத்திர - கனித்திரம், பவித்திரம்.
இல - அநிலம், கோகிலம்.
இர - திமிரம், வெதிரம்.
உ - தரு, வஸ்து.
உக - காதுகன், பாதுகன்.
உர - விதுரன், மேதுரன்.
ஊ - சமூ, அலாபூ.
ஊர - மயூரம்.
ஏர - குபேரன், கவேரன்.
ஓர - சகோரம், கடோரம்.
க - சங்கம்.
ட - சண்டன், தண்டம்.
ணு - விட்டுணு, சிட்டுணு.
த - நீதம், இரதம்.
தி - சாதி, பீதி.
திர - பாத்திரம், நேத்திரம்.
ய - சயம், கயம்.
ரு - தாரு, சத்துரு.
வர - தாவநம், ஈசுவரன்.
திரம் - சத்திரம், தோத்திரம்.

---

## தத்தித விகுதி.

அ - பௌரவன், பாண்டவன்.
அநீ - காநீனன்.
ஆயந் - காத்தியாயநன், நாடாயநன்.
ஆல - வாசாலம்.
இ - தாசரதி.
இக - தார்க்கிகன், சாமாசிகன்.
இநி - தரங்கிணி.
இய - சுரோத்திரியன்.
இல - சடிலம், பங்கிலம்.
ஈய - மகேந்திரீயம்.
ஈந - பாரீணன், குலீநன்.
ஏய - கார்த்திகேயன், காங்கேயன்.
க - தாநுட்கன்.
கற்பம் - கவிகற்பம், தீபகற்பம்.
கிய - வேத்திரகியம், பரகியம்.
தம - இலகுதமன்.
தா - பசுதா, படுதா.
துவம் - பசுத்துவம், குருத்துவம்.
ந - அங்கனை.
ம - அதமம், சரமம்.
மத் - ஸ்ரீமத், தீமத்.
மயம் - காட்டமயம்.
ய - ஆதித்தியன், வாகியம்.
ர - மீனரம், மதுரம்.
வத் - வித்தியாவதி.
வல - சிகாவலம், சாட்டுவலம்.
வி - மாயாவி, மேதாவி.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩ | ௧0 | த்தல். | த்தல், |
| ௧௨ | ௨௩ | அயங்கிதை | அயிங்கிதை |
| ௧௬ | ௮ | அவளிகை | அவணிகை |
| ,, | ௯ | ளிகை | ணிகை |
| ௨௭ | ௧௪ | முதலி | முதலிய |
| ௪௩ | ௧0 | துணிதல். | துணிதல், |
| ௪௯ | ௩0 | தூண். | தூண், |
| ௫௨ | ௨௯ | தேய்வு. | தேய்வு, |
| ௫௫ | ௨௬ | காத்திரவேயம் | காத்திரவேயர் |
| ௬௬ | ௨௩ | கவன் | கணவன் |
| ௬௭ | ௧௮ | தலையணி | தலையணை. |
| ௭0 | ௩௬ | சக்காரம் | சககாரம் |
| ௧௧௧ | ௧௬ | சாமார்த்தியம் | சாமர்த்தியம் |
| ௧௯௧ | ௨௪ | கணமுடை | கணமுடைய |
| ௧௨0 | ௧ | (திற) | (திவா) |
| ,, | ௨௬ | சமமாக்கதல் | சமமாக்குதல் |
| ௧௩௩ | ௨௮ | திக்கியானை | ஒருதிக்கியானை |
| ௧௫0 | ௨௭ | பொத்தி | பொருத்தி |
| ௧௫௧ | ௩௨ | மாநதண்டம். } | (இவைகளை விலக்கி விடுக) |
| ௧௬௫ | ௨௯ | யாதநாசரீரம். } | |

## விலைப்புத்தக விஞ்ஞாபனம்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| க. | **தண்டியலங்காரப்புத்துரை.** இது முதனூலாகிய காவ்யாதர்சத்தோடும் வேறலங்காரங்களோடுஞ் சேரவைத்து ஆராய்ந்து விளக்கி விசேடமாகப் புத்துதாரணங்களுஞ் சித்திரகவிப்படங்களுஞ் சேர்த்தச்சிடப் பட்டிருக்கின்றது. | க | 0 |
| உ. | **யாப்பருங்கலக்காரிகைப்புத்துரை.** இது விடயங்களையும், உதாரணங்களையுந் தனித்தனி பிரித்துச் சேர்த்து விளக்கும் இயல்புடையது. புத்துதாரணங்களும், கட்டளைக்கலிப்பா, கட்டளைக்கலித்துறை, வண்ணம் என்பவைகளின் இலக்கணங்களும் விசேடமாகச் சேர்க்கப் பட்டிருக்கின்றன. | க | 0 |
| ங. | **அகப்பொருள்விளக்கப்புத்துரை.** பலசூத்திரங்களுக்குப் புத்துரை கூறியும், விடயங்களையும் உதாரணங்களையும் ஒருங்கு கூட்டி விளக்கியும், சில சில உதாரணங்களைத் திருத்தியும் பலவாறு புதுக்கப்பட்டிருக்கின்றது. | க | 0 |
| ச. | **வினைப்பகுபதவிளக்கம்.** இது நன்னூலிலுள்ள "நடவாமடிசீ" என்னுஞ் சூத்திரத்தை அநுசரித்துப் பலவினைப் பகுபதங்களையும், வினையடியாகப் பிறந்த பல பெயர்ப்பகுபதங்களையும் முடித்துச் செல்கின்றது. ஒவ்வோரீற்றிலும் பற்பல வரும். ஆதன் முடிபுகளாயும் பல வரும். | 0 | அ |
| ரு. | **இதோபதேசம்.** இது பஞ்சதந்திரத்திலும், மகாபாரதம் முதலிய நீதிநூல்களிலுமிருந்தெடுக்கப்பட்ட நீதி வாக்கியங்களையும், அவற்றிற்கியைபுடைய விநோதமான கதைகளையுமுடையது. | 0 | அ |
| சு. | **நீதிநெறிவிளக்கப்புத்துரை.** இது பலவித திருத்தங்களையும், முதனூலுரைகளோடு இயையும் பொருத்தங்களையும் நீதிநூற் பிரமாணங்களையுமுடையது. | 0 | சு |
| எ. | **இலக்கணசந்திரிகை.** இது நன்னூல் முதலிய இலக்கணங்களிலே அமையாது பாரதம், இராமாயணம் முதலியவற்றில் வந்து வழங்கும் ஆரிய பதங்களுக்கும் அரியனவாய தமிழ்ப் பதங்களுக்கும் விதிகாட்டி விளக்குவது. | 0 | ச |

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| அ. | மேகதூதக்காரிகை. இது குபேரன் சாபத்திற் பிரிந்திருந்த இயக்கனொருவன் தன்மனைவிக்கு முகிலைத் தூதுவிட்டதாகப் பலவித வருணனை யமைத்துக் காளிதாசமஹாகவிசெய்த மேகதூதத்தின் பொருள்களையமைத்துக் கட்டளைக் கலித்துறையிற் செய்தது. | ० | ௯ |
| கூ. | சூடாமணிநிகண்டு. முதலாவது இஃது அருகன், சிவன் முதலிய தேவர்களின் நாமங்களாகிய அருகன், எண்குணன், சங்கரன் முதலிய பதங்களுக் கெல்லாம் வடநூல்களிலுந் தமிழ்நூல்களிலுந் தேடி எழுதப்பட்ட ஒன்றும் பலவுமாய பொருள்களையுஞ் சிலவற்றின் கதைகளையு முடையது. | ० | ச |
| க०. | சூடாமணி நிகண்டு. இரண்டாவது. இதுவும் முதலாவது போல எழுதப்பட்ட பொருளுடையது. | ० | ச |
| கக. | இரத்வமிசக்கருப்பொருள். | ० | ச |
| க௨. | திருவாதவூரர் புராணமூலம். | ० | ச |
| கரு. | யாப்பருங்கலப் பொழிப்புரையும், வெண்பாப்பாட்டியலும். | ० | ௫ |
| கச. | ஆத்திசூடிவெண்பா; கதைகளோடு. | ० | ச |
| கரு. | நதுலமலைக்குறவஞ்சிநாடகம். | ० | ச |
| கசு. | கலைசைச்சிலேடைவெண்பா அரும்பதவுரை. | ० | உ |
| கஎ. | மறைசையந்தாதி அரும்பதவுரை. | ० | உ |
| கஅ. | சதுர்சாரக்கவித்திரட்டு. | ० | உ |
| கக. | ஆசாரக்கோவை. | ० | உ |
| ௨०. | பழமொழிவிளக்கம். | ० | உ |
| உக. | ஏகவிருத்தபாரதாதி. | ० | உ |
| உஉ. | மாவைப்பதிகம், மாவையிரட்டைமணிமாலை. | ० | க |
| உரு. | உரிச்சொனிகண்டு. | ० | ச |
| உச. | சிவத்தோத்திரக்கவித்திரட்டு. | ० | உ |
| உரு. | ஈழமண்டலத்தேவாரம். | ० | க |
| உசு. | திருவாதவூரர்புராணவுரை. (அச்சில்) | ० | ० |
| உஎ. | சூடாமணி நிகண்டு. ஐந்தாவதுவரை. | ० | அ |
| உஅ. | முத்தகபஞ்சவிஞ்சதி. | ० | உ |
| உகூ. | சாணக்கியநீதிவெண்பா. | ० | உ |
| ௩०. | இலக்கியச்சொல்லகராதி. | க | ० |

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்
ஆனந்தஞூ ஐப்பசிமீ

இங்ஙனம்;
அ. குமாரசுவாமிப்பிள்ளை.